# திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி

## ஓர் ஒப்பாய்வு

அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

மா.நீதி

பதிவு எண்-1596

நெறியாளர்

**முனைவர். கரு.முருகன்,**

தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,

ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி.

தேவகோட்டை.





## அழகப்பா பல்கலைக்கழகம்

தேசிய தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64) தகுதி பெற்றது.

காரைக்குடி - 630 303

டிசம்பர் - 2020

**முனைவர். கரு. முருகன்,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை – 630 303.

நாள் :

## நெறியாளர் சான்றிதழ்

**"திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி ஓர் ஒப்பாய்வு"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ்த் துறையில் பகுதி நேர முனைவர் பட்டத்தின் ஒரு பகுதியாக **மா.நீதி** தன் ஆய்வுக் காலத்தில் ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை எனவும் இவ்வாய்வேடு அவர் தம் சொந்த முயற்சியில் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம்: **(முனைவர். கரு. முருகன்)**

நாள்: நெறியாளர்.

துறைத்தலைவர் முதல்வர்

**மா.நீதி,**
பதிவு எண்-1596,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை – 630 303.

நாள் :

## ஆய்வாளர் உறுதிமொழி

**“திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி ஓர் ஒப்பாய்வு”** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு உட்பட்ட ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ்த் துறையில் முனைவர் பட்டத் தேர்வின் ஒரு பகுதியாக அளிக்கப் பெறும் இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் எந்தப் பட்டத்திற்கும் சமர்ப்பிக்கப்படவில்லை என உறுதியளிக்கிறேன்.

**(மா.நீதி)**
ஆய்வாளர்.

உறுதிக் கையொப்பம்
**முனைவர். கரு. முருகன்,**
தமிழ் உயராய்வு மையம், தமிழ்த்துறை,
ஸ்ரீ சேவுகன் அண்ணாலை கல்லூரி,
தேவகோட்டை – 630 303.

## நன்றியுரை

**“திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி ஓர் ஒப்பாய்வு”** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வை மேற்கொள்ள ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து, ஆற்றுப்படுத்தி, ஆய்வகங்களின் இடம் காட்டி, நல்ல வழிகாட்டியாக பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், புத்தகக் கண்காட்சிகளுக்கு அழைத்துச் சென்று, ஆய்வுத் தரவுகளைத் திரட்டுவதற்கு உறுதுணையாக இருந்து உதவிய, ஆய்வு நெறியாளர் ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தமிழ் உயராய்வுமையம், உதவிப் பேராசிரியர் முனைவர். கரு. முருகன் அய்யா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வு நல்ல முறையில் அமைய உற்சாகப் படுத்தி, ஆலோசனைகள் பல வழங்கி, ஆசியளித்த ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தமிழ் துறைத்தலைவர் அவர்களுக்கும், அனைத்துப் பேராசிரியர் பெருமக்களுக்கும் எனது நன்றியை நவில்கின்றேன்.

இவ்வாய்வை நிறைவு செய்வதற்கு நூல்கள் வழங்கி உதவி செய்த ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி நூலகத்திற்கும், ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி தமிழ் உயராய்வு மையத்திற்கும், அழகப்பா பல்கலைக் கழக நூலகத்திற்கும், பாரதிதாசன் பல்கலைக் கழக நூலகத்திற்கும், காரைக்குடி கிளை நூலகத்திற்கும், பட்டமங்களம் கிராமப்புற நூலகத்திற்கும், தேனியைப் போல நாளும் நன்னூலைத்தேடி ஆய்வுக்குத் தேவையான நூல்களை தந்து உதவிய திரு. ச.சண்முகவேல் (JE) ஐயா அவர்களுக்கும், இவ்வாய்வை சிறந்த முறையில் மேற்கொள்ள ஊக்கமளித்த எனது தலைமையாசிரியை திருமதி. ச.இந்திராகாந்தி அவர்களுக்கும், ஆய்வுநூல்களை அள்ளிக் கொடுத்து உதவிய ஸ்ரீபராசக்தி கல்லூரியின் பேராசிரியை முனைவர்.திருமதி.மகேஸ்வரி அம்மா அவர்களுக்கும், ஆய்விற்கு அனைத்து வகையிலும் உதவி புரிந்த எனது நண்பர்களான

அ.அழகுமணி, எ.விஜயராஜ், வெ.ரமேஷ், அ.சேகர், மா.ஜெயசீலன் மா.ஜெயசெல்வன், தி. ஜெயபிரகாஷ் ஆகியோருக்கும், மறைதிரு. சுயம்பிரகாஷ் இம்மானுவேல் அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வை நிறைவு செய்வதற்கு ஆசிகளால் கல்விக் கண் திறந்த எனது பெற்றோர் திரு.பி.மாரி (த.ஆ) அவர்களுக்கும், திருமதி. மா.தவமணி அவர்களுக்கும், எனது துணைவியார் திருமதி. ஜா.எமிமாள் ராஜகுமாரி அவர்களுக்கும், மகன்கள் நீ. சாண்டகிரன் நிக்கோலஸ் மற்றும் நீ.தேவ சுதந்திரன் அவர்களுக்கும் எனது இதயப் பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. அகம் | – | அகநானூறு |
| 2. இனவி | _ | இனவியல் |
| 3. உபா. | – | உபாகமம் |
| 4. எரே. | – | எரேமியா |
| 5. ஏசா. | – | ஏசாயா |
| 6 . கலி | _ | கலித்தொகை |
| 7. கவிராயர் | – | திரிகூடராசப்பக் கவிராயர் |
| 8. கும்.குற. | - | கும்பேசர் குறவஞ்சி |
| 9. குறும் | – | குறுந்தொகை |
| 10. சங். | – | சங்கீதம் |
| 11. சர.குற.பா. | - | சரபோந்திர குறவஞ்சி |
| 12. சாஸ்திரியார் | – | தஞ்சை வேத நாயக சாஸ்திரியார் |
| 13. சோலை.குற.பா. | - | சோலைமலைக் குறவஞ்சி |
| 14. ஞா. பா. கீ | – | ஞான பாட்டு கீர்த்தனை |
| 15. தண்டி | – | தண்டியலங்காரம் |
| 16. தி. கு. நா. உ | – | திருக் குற்றால நாதர் உலா |
| 17. திரு.குற்.கு.பா | - | திருக்குற்றாலக் குறவஞ்சி பாடல் |
| 18. த. சு. க சங். வே. சா. | – | தஞ்சை சுவிசேட கவிராயராகிய சங்.வேதநாயகம் சாஸ்திரியர். |
| 19. ப. | – | பக்கம் |
| 20. பக். | _ | பக்கங்கள் |
| 21. பரிசு. வே. | – | பரிசுத்த வேதாகமம் |
| 22. பரிசு. வே. ஆதி. | – | பரிசுத்த வேதகாமம், ஆதியாகமம் |
| 23. பரிசு. வே. உன். | – | பரிசுத்த வேதாகமம், உன்னதப்பாட்டு |

24. பரிசு. வே. புலம். – பரிசுத்த வேதாகமம், புலம்பல்

25. பரிசு . வே. மத். – பரிசுத்த வேதாகமம், மத்தேயு

26. பரிசு. வே. லூக். - பரிசுத்த வேதாகமம், லூக்கா

27. பா. எண் – பாடல் எண்

28. பொ. ஆ. சா – பொன்னு. ஆ. சத்தியசாட்சி

29. பொ. செ. நூற் – பொருள் செய்யுள் நூற்பா

30. பொரு.நா – பொருநராற்றுப்படை

31. பன். - பன்னிரு பாட்டியல்

32. பரிசு. வே. 1 இரா. – பரிசுத்த வேதாகமம், 1 இராஜாக்கள்

33. பரிசு. வே. 2 இரா. _ பரிசுத்த வேதாகமம், 2 இராஜாக்கள்

34. பரிசு. வே.1 நாளா. – பரிசுத்த வேதாகமம், 1 நாளாகமம்

35. மல். – மல்கியா

36. மேலது – மேலே குறிப்பிட்டுள்ளவாறு

37. யாத். – யாத்திராகமம்

38. யோவா. – யோவான்

39. வெ.பாட்டியல் நூ. - வெண்பாப்பாட்டியல் நூற்பா

40. வே. சா – வேத நாயக சாஸ்திரியார்

41. வே.சா.ஞா.நொ.நா – வேதநாயக சாஸ்திரியார் ஞான நொண்டி நாடகம்

42. P. – Page

43. PP. – Pages

44. வே.சா.ஞா.நொ.நா.கா. - வேதநாயக சாஸ்திரியார் ஞான நொண்டி நாடகம்

45. த.சு.க.சங்.வேத.சா. - தஞ்சை சுவிசேடக் கவிராயர் சங். வேதநாயக சாஸ்திரியார்

46. த. ம. வேதநாயக சாஸ்திரி- தயாமணி மனாசே

47. வி.நோ.ஞா. - விநோத நொண்டி நாடகம்

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகில் சிறந்த இலக்கியங்களைக் கொண்டு ஒளிரும் உயர்ந்த மொழிகள் யாவையும், காலந்தோறும் வளர்ச்சியடைந்து, காலத்திற்கேற்ப மக்களால் ஏற்றுக் கொள்ளப்பெறும் வாழ்வியல் உண்மைகளைக் கூறி, நல்லறங்களை நல்கி விளங்கி நிற்பது ஆகும். அதுபோல நம் தமிழ் மொழியிலும் சங்க இலக்கியங்களான பாட்டும், தொகையும் சங்ககால மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளைப் படம்பிடித்துக் காட்டும் காலக்கண்ணாடியாக விளங்குகிறது. சிற்றிலக்கியங்கள், தொல்காப்பியத்தில் வேரூன்றி, திருமுறைகளில் தழைத்து, காப்பியங்களில் பூத்து, பிற்காலத்தில் கனிந்து சுவைதரும் தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களாக விளங்குகின்றது.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர்ச் சிற்றிலக்கியங்களில் வரையரை செய்யப் படுகின்ற திரிகூட ராசப்பக் கவிராயர் திருக்குற்றாலக் குறவஞ்சி என்னும் அற்புதக் குறவஞ்சியைப் பாடி, தமிழுக்கே உரிய நடையிலும், இசையிலும், தாளத்திலும், வழக்கத்தோடு ஒட்டிய தமிழில் எளிமையான நூலாகும். இந்நிலையில் திருக்குற்றாலக் குறவஞ்சியால் ஈர்க்கப்பட்டு, அந்நூலைத் தழுவி, தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களால் உலகத்தின் பாவத்தைப் போக்க வந்த இறைமைந்தர் இயேசுநாதர் பிறந்த ஊரான பெத்லகேம் பெயரால் பாடப்பட்ட நூலே பெத்லகேம் குறவஞ்சி ஆகும். பெத்லகேம் குறவஞ்சியில் சாஸ்திரியார் பாரம்பரியத்தை உள்வாங்கித் தமிழகக் குறவஞ்சிகளாகவே உருவகப்படுத்தி, குறவஞ்சி மரபுகளையும், பாத்திரப் படைப்புகளையும் கைக்கொண்டு, அதில் விவிலியக் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார். இவ்விரு நூல்கள் கொண்டுள்ள ஒப்புமைகளை வெளிப்படுத்துவதைப் பொருண்மையாகக் கொண்டுள்ளது இவ்வாய்வு ஆகும்.

**ஆய்வுத் தலைப்பு**

**“திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி ஓர் ஒப்பாய்வு”** என்பதே இவ்வாய்வேட்டின் தலைப்பு ஆகும். இவ்விரு சிற்றிலக்கியத்தின் ஆசிரியர்களின் வரலாறு, பாத்திரப் படைப்பு, பல்வகை வளங்கள்,

மொழிநடைகளை விளக்கி ஒப்பீட்டு ஆய்வு செய்வதே இவ்வாய்வேட்டின் பொருளாகும்.

**ஆய்வு நோக்கம்**

திரிகூடராசப்பக் கவிராயருக்கு பேரும் புகழையும் பெற்றுத்தந்த திருக்குற்றாலக் குறவஞ்சியையும், கிறிஸ்தவ இலக்கிய உலகில் அழியாப் புகழைப் பெற்றுத் தந்த தஞ்சை வேதநாயக சாஸ்திரியாரின் பெத்லகேம் குறவஞ்சியையும் விளக்கி ஒப்பீட்டு இவ்விரு இலக்கியத்தின் கவிநயத்தை, இசைநயத்தை, இறையியல் பக்திக் கூறுகளை, தனித்தன்மைகளை, சிற்றின்ப பேரின்பக் கருத்துக்களை யாவரும் படித்துப் பயன்பெற விரிவாக்கம் செய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

ஒப்பிடுவது என்பது மாந்தர்களின் இயல்புணர்ச்சிகளில் ஒன்று. ஒப்பிடுவதாலே ஒரு பொருள் உயர்ந்த நிலையை அடைகிறது. அதைப் போலவே ஒப்பிடுவதாலே இலக்கியம் உன்னத நிலையை அடைகிறது. ஒப்பிடப்படும் இலக்கியத்திற்கு உறவு இருக்க வேண்டும். அவ்வகையான உறவு திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி என்னும் நூலில் இருப்பதால், புகழ் பெற்ற இவ்விரு இலக்கியத்தை ஒப்பீடு இயைந்து இருக்கின்றனவா என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வின் எல்லை**

பதினெட்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த இருபெருங்கவிஞர்களான திரிகூடராசப்பக் கவிராயர், தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் அவர்களின் புகழ்பெற்ற நூல்களான திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி ஆகிய இருநூல்கள் மட்டுமே ஆய்வினுடைய எல்லையாக அமையப்பெறுகிறது.

**ஆய்வு அணுகுமுறை**

இருவேறு கவிஞர்களின் குறவஞ்சி இலக்கியங்களை ஒப்பீடு செய்வதால் ஒப்பீட்டு அணுகுமுறையும் கையாளப்படுகின்றன. அவை போல் மானுட சமூகத்தின் அக, புற வாழ்வியல் பேசப்படுவதால் சமூகவியல் அணுகுமுறை கடைப்பிடிக்கப் படுகின்றன. இவ்விரு குறவஞ்சி நூல்கள் கூறும் கருத்துக்களை விளக்கிக் கூறுவதால் இது விளக்கவியல் ஒப்பீட்டு முறையைச் சார்ந்ததாக அமையப் பெறுகிறது.

**ஆய்வுச் சான்றாதாரங்கள்**

இவ்வாய்வின் முதன்மைச் சான்றுகளாகத் திரிகூடராசப்பக் கவிராயர் எழுதிய திருக்குற்றாலக் குறவஞ்சி, தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் அவர்களது பெத்லகேம் குறவஞ்சி நூல்கள் முதன்மைச் சான்றாக அமையப் பெறுகின்றன. துணைமைச் சான்றாதாரங்களாகக் குறவஞ்சி கருத்தியல் தொடர்பான திறனாய்வுகள், ஆய்வுச்செய்திகள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள் தொடர்பான புறச்செய்திகள் போன்றவை இடம்பெறுகின்றன.

**ஆய்வு முன்னோடிகள்**

இலக்கியப் படைப்புக்களை ஒப்பிட்டு ஆய்வு செய்யும் ஆய்வு நூல்கள் பல தோன்றியுள்ளன. பாரதியும் ஷெல்லியும் - இரகுநாதன் (1964), சிலம்பும் சிந்தாமணியும் - ச.வே. சுப்பிரமணியன் (1977), கம்பனும் மில்ட்டனும் ஒரு புதிய பார்வை - எஸ்.ராம கிருஷ்ணன் (1978), பாரதியும் பாரதிதாசனும் ஒப்பியல் திறனாய்வு - சி.கனகசபாபதி (1980), பாரதிதாசன் வெருஞ்சித்திரனார் பாடல்கள் ஓர் ஒப்பாய்வு முனைவர் கடவூர் மணிமாறன் (1996) ஆகிய நூல்கள் ஒப்பீடு செய்வதற்கு முன்னோடியாக விளங்குகின்றன.

**ஆய்வுப் பகுப்பு**

இந்த ஆய்வானது முன்னுரை மற்றும் முடிவுரை நீங்களாக நான்கு இயல்களைக் கொண்டுள்ளது.

முன்னுரை

1. நூலசிரியர்கள் வரலாறு,

2. பாத்திரப் படைப்பு,

3. பல்வகை வளங்கள்,

4. மொழி நடை,

முடிவுரை என்பன.

முன்னுரைப் பகுதி ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வுச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வுப் பகுப்பு போன்றவற்றை உள்ளடக்கியதாகும்.

**இயல் – 1 நூலசிரியர்கள் வரலாறு**

**திரிகூடராசப்பக் கவிராயர்**

சிற்றின்பச் சுவை மிகுந்த திருக்குற்றாலக் குறவஞ்சி என்னும் சிற்றிலக்கியத்தைப் படைத்த கவிராயரின் வாழ்க்கை வரலாற்றை வெளிக்கொணரும் வகையில் அவரது பிறப்பும் வாழ்வும், காலப் பின்னணி, இறைபணி, இறையருள் பெறுதல், அவர் பெற்ற அற்புதங்கள், புலமைத் திறன், தமிழ்ப் பற்று, படைத்த நூல்கள், புகழ் சூட்டிய குறவஞ்சி, குற்றாலக் குறவஞ்சிக்கு விதித்த தடை, கவிராயர் பெற்ற சிறப்புப் பெயர்கள், சிறப்புப் பட்டங்களும் பரிசுகளும், கவிராயரின் வழித்தோன்றல்கள் போன்ற தகவல்களைப் பற்றி விரிவாக ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**வேதநாயக சாஸ்திரியார்**

பேரின்பச் சுவை மிகுந்த பெத்லகேம் என்னும் குறவஞ்சியைப் படைத்த சாஸ்திரியாரின் வாழ்க்கை வரலாற்றைப் பறைசாற்றும் விதமாக சாஸ்திரியாரின் தந்தை அருணாச்சலம் பிள்ளையின் சுருக்க வரலாறு, வேத நாயக சாஸ்திரியாரின் பிறப்பும் வளர்ப்பும், சாஸ்திரியாரின் இளம்பிராயம், இளமையில் கண்ட அற்புதம்,

சாஸ்திரியாரும் ஸ்சுவாட்சு போதகரும், சாஸ்திரியார் தஞ்சைக்கு வருதல், ஆசிரியப் பணி, ஊழியங்கள், பெற்ற பட்டங்களும் பரிசுகளும், சரபோஜி மன்னர் அரசவையில் கவிஞர் பணி, சாஸ்திரியாருக்கும் சரபோஜி மன்னருக்குமிடையே நடந்த தர்க்கம், பக்தி வைராக்கியம், படைத்த நூல்கள், தாய்மொழிப் பற்று, குடும்பப் பின்னணி, சாஸ்திரியாரின் இறுதிப் பயணம் ஆகியவை பற்றி விரிவாக ஒப்பீடு செய்து ஆய்வு செய்யப்படுகிறது.

**இயல் - 2 பாத்திரப் படைப்பு**

திருக்குற்றாலக் குறவஞ்சி - பெத்லகேம் குறவஞ்சி என்னும் இவ்விரு குறவஞ்சி நூல்களும் நாடக வடிவில் அமைக்கப் பெற்ற அற்புதமான படைப்பாகும். இவ்விரு இலக்கியங்களில் வரும் கதாப் பாத்திரங்களான கட்டியங்காரன், தலைவன், தலைவி, தோழி, குறத்தி, குறவன் போன்ற முக்கியப் பாத்திரங்களை விரிவாக விளக்கி ஒப்பீட்டு ஆய்வு செய்யப்படுகிறது.

**இயல் - 3 பல்வகை வளங்கள்**

திருக்குற்றாலக் குறவஞ்சி, தேவலோகத்து வாத்தியங்கள் எப்போதும் முழங்கிக் கொண்டிருக்கும் நன்மை பொருந்திய நகரமான குற்றால நகரின் தல வளம், நாட்டு வளம், மலை வளம், அருவி வளம், மூலிகை வளம், குறி வளம், வேட்டை வளம் போன்ற வளங்களையும், அதைப்போலவே பெத்லகேம் குறவஞ்சியில் வரும் தலவளம், நாட்டு வளம், மலை வளங்கள், குல வளம், வாசல் வளம், மூலிகை வளம், குறி வளம், வேட்டை வளம் போன்ற பல்வகை வளங்களை விளக்கி ஒப்பீட்டு ஆய்வு செய்யப்படுகிறது.

**இயல் - 4 மொழி நடை**

சொற்சுவை மிகுந்த, இவ்விரு இலக்கியத்தில் வரும் இசை நடை, கற்பனை நடை, கருத்து நடை, காட்சி நடை, அழகு நடை, அருவி நடை, அடுக்கு நடை, ஒப்பீட்டு நடை, ஓசை நடை, எளிய நடை, வருணனை நடை, உவமை நடை,

உருவக நடை, உணர்ச்சி நடை போன்ற பல்வகையான நடைகளை விளக்கி ஒப்பீடு செய்து ஆய்வு செய்யப்படுகிறது.

ஆய்வு முடிவுரையில் திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி நூல்களில் புலப்படுத்தும் ஒப்புமைக் கூறுகள் கூறப்பட்டுள்ளன. பாத்திரப் படைப்பு, பல்வகை வளங்கள், மொழி நடை ஆகியவற்றின் சிந்தனைகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்விற்குத் துணை நின்ற நூல்கள், ஆய்வேடுகள், இதழ்கள், கருத்தரங்குகள் மற்றும் மாநாட்டுக் கட்டுரைகள் அகரவரிசையில் வரிசைப் படுத்தப்பட்டு துணை நூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் – 1

## நூலாசிரியர்கள் வரலாறு

உலகத் இலக்கியங்களில் தமிழ் இலக்கியங்களில் இயல், இசை, நாடகம் என்கிற பொருண்மையில் முத்தமிழால் வளர்ந்து நிற்கிறது. அவற்றுள் குறவஞ்சி நாடகம் சிறப்புக்கு உரியது ஆகும். குறவஞ்சி நாடகம் என்பது அடித்தட்டு மக்களாகக் கருதப்பட்ட மக்களின் வாழ்வியலைப் படைக்கப்பட்ட நூலாகும். வேடர், வேட்டுவர் என்று சங்க கால இலக்கியங்களில் சிறப்பிக்கப் பட்டவர்கள் இவர்களுடைய வாழ்வியல் மலையில் வாழுகின்ற பொழுது, அவர்களுடைய சூழலைப் புலப்படுத்தும் விதமாக அமையப் பெற்றவை ஆகும். தமிழ் மொழியின் தொன்மை, சிறப்புக்கும், பெருமைக்கும் சான்றுகளாய் தமிழ் இலக்கியங்கள் அமையப்பெற்றுள்ளன. அவை ஒவ்வொரு காலத்திற்கும் ஒரு பொருண்மையைக் கொண்டு வெளிப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்திற்குப் பின்னர் அறம் பாடும் நீதி நூல்களும், பக்தி போற்றும் தெய்வப் பனுவல்களும், கற்பனை வளம் மிகுந்த காப்பியங்களும், அவையடுத்துப் புராணங்கள், இதிகாசங்கள் என தமிழ் இலக்கியங்கள் பரந்து விரிந்து நிலையில் வளர்ச்சி அடைந்து இருக்கின்றது. இவ்விலக்கியங்களுக்கு அடுத்தக் காலகட்டங்களில் கோவை, தூது, உலா, பிள்ளைத்தமிழ், மடல் என்னும் இலக்கிய வகைகள் தோற்றம் பெறலாயின. சிறு சிறு இலக்கிய வகைகளைக் கொண்டவை வளர்ந்து பாடுபொருள்கள் கருதியும், அவற்றின் காலம் கருதியும், இலக்கியங்கள் பாடப்பெற்ற யாப்பின் உடைய அமைப்பின் கருதியும், அவை அனைத்தையும் ஒரே வகையாகத் தொகுத்துச் சிற்றிலக்கியங்கள் என அழைக்கலாயினர். இதனை நா.வி.ஜெயராமன் என்பார், “தொல்காப்பியர் காலத்தில் இடம்பெற்ற சிற்றிலக்கிய வித்துச் சங்ககாலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு ஐந்தாம் நூற்றாண்டில் அந்தாதியாகத் துளிர்த்து, ஏழாம் நூற்றாண்டில் கோவைச் செடியாகி, எட்டாம் நூற்றாண்டில் உலாவாக மரமாகி, ஒன்பதாம் நூற்றாண்டில் களமாகக் கிடைத்து, பதினோராம் நூற்றாண்டில்

சதமாகவும், காரணியாகவும், கி.பி.12ஆம் நூற்றாண்டில் பிள்ளைத்தமிழாகி 14ஆம் நூற்றாண்டில் பள்ளுவாகக் காய்த்து, பதினெட்டாம் நூற்றாண்டில் குறவஞ்சி கனிந்தது”[1] என்று குறிப்பிடுகிறார்.

ஒவ்வொரு காலத்திலும் சிறப்புறும் பாடுபொருள் இன அடிப்படையில் இலக்கியங்கள் வளர ஆரம்பித்தன. இதனை க.பா.அறவாணன், “தமிழ் இலக்கியங்களில் சங்க இலக்கியத்தைக் காதல் கவிதை என்றும், கி.பி மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரை எழுந்த இலக்கியங்கள் நீதி, கவிதை, இலக்கியம் என்றும் காப்பிய இலக்கியத்தைக் கதை, கவிதை என்றும் பிரபந்த இலக்கியங்களைக் கைக்கிளை கவிதை என்றும், பிற்காலத் தனிப் பாடல்களைப் போற்றிக் கவிதை என்றும், பாரதிக்குப் பின் பாரதியார் கவிதைகளைத் தமிழ் நேசக்கவிதை என்றும், நாட்டுப்புறப் பாடல்களைக் கிராமியக் கவிதை என்றும் கி.பி 1901 முதல் கி.பி 1975 வரை உள்ள கவிதைகளை புதுக்கவிதை”[2] எனப் பாகுபாடு செய்கிறார். இப்பாகுபாட்டு வளர்ச்சியில் சிற்றிலக்கியம் தனித்தன்மையுடன் வளர்ச்சி பெற்றது. இதனை, “கால வளர்ச்சிக்கு இடையிலேயே கலை வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் தொடர்ந்து நடைபெறுவது இலக்கிய வரலாறு காட்டும் உண்மையாகும், எனவே, இவ்வாறு பக்கங்களாக எழுந்த தோத்திரப் பாடல்கள் சற்று விரிவடைந்து பல பிரபந்தங்கள் ஆக மாறின. மாலை, கோவை, உலா, அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், தூது போன்ற பல சிற்றிலக்கியங்கள் 96 ஆகக் கணக்கிட்டார்கள். பிரபந்தங்கள் 96 வகைப் பிரபந்தங்கள் என்று அழைப்பர்”[3] எனச் சிற்றிலக்கியங்களை வகைமை செய்கின்றன.

**சிற்றிலக்கியம்**

சிற்றிலக்கியம் என்பதனைப் பிரபந்தம் என்ற சொல்லால் குறிப்பிடுவர். இலக்கிய வரலாற்று ஆய்வாளர்கள் பிரபந்தம் என்பது நன்கு கட்டப்பட்டது என்ற

---

[1]. நா.வி.ஜெயராமன் ., பாட்டியல் எனும் இலக்கிய வகைகளும், ப.3

[2]. க.பா.அறவாணன், கவிதையின் உயிர் உள்ளம் உடல், ப. 6.

[3]. நாவாய் பன்னோக்கு ஆய்வுக் கட்டுரை, ப. 55.

பொருளைத் தருகின்றது. அதாவது யாப்பு முறையில் இவை கட்டப்பட்டது எனக் குறிக்கப்படுகின்றது. எல்லா இலக்கியங்களும் நன்றாகவே இயற்றப்பட்டவை. ஆனாலும் இச்சொல் சிற்றிலக்கிய மட்டும் குறிப்பதாக இல்லை. சிற்றிலக்கியம் என்பதைக் குறிக்கச் சிறு பந்தம் என்ற சொல்லை கையாண்டனர். இது சில்லறைப் பிரபந்தம் என்றும் அழைக்கப்பட்டது. நாளடைவில் சிறு பிரபந்தம் என்பதற்குப் பதில் சிற்றிலக்கியம் என வளர்ச்சி அடைந்தது. சிற்றிலக்கியம் என்பதனைப், நா.வி. ஜெயராமன், “தமிழ் மொழியில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள் முதல் என இலக்கியங்கள் என்ற சொல்லால் குறிக்கப் பட்டமையால் அந்தாதி, சதகம், பிள்ளைத் தமிழ், பரணி போன்ற இலக்கியங்கள் எழுந்த காலத்தில் அவற்றைக் குறிக்கப் பிரபந்தம் என்ற சொல் பயன்படுத்தப் பட்டது என்றும், பிரபந்தம் என்ற சொல் இலக்கியம் என்ற பொருள் உணர்ச்சியின் விளைவாக அந்தாதி முதலியவற்றை நிறுவனங்கள் என்றும் அடுத்து வழங்கும் வழக்கம் ஏற்பட்டது என்றும், தனித்தமிழாட்சி வளர்ச்சியுற்ற காலத்தில் சிறுவர்கள் சிறு பிரபந்தங்கள் என்று குறிக்கப்பட்டது. அந்தாதி முதலியவற்றைச் சிற்றிலக்கியம் என்று கூறும் வழக்கம் ஏற்பட்டது.”[4] எனப் புலப்படுத்துகிறார்.

சிற்றிலக்கியத்தின் சிறப்பு இயல்புகளாக ஈஸ்வப்ர பிள்ளை, “வட்டாரச் சார்பு உடைய சார்பு உடையவனாகச் சிற்றிலக்கியங்கள் திகழ்கின்றன. காப்பியங்களைப் போல உலகப்பார்வை இதில் இடம் பெறுவது இல்லை. பெரும்பாலான சிற்றிலக்கியங்கள் தமிழ் மண் சார்ந்த தமிழ் மரபு சார்ந்த கருத்துக்களோடு அமைந்துள்ளன. பல்துறை சார்ந்த பெரிய நூலைப் போல் அமையாமல் சில துறைகளைப் பற்றிய ஆழமான பார்வை உடையவர் திகழ்கின்றன. சிற்றிலக்கியம் என சொல்லப்பட்டாலும் இலக்கியச் சுவையில் பேரிலக்கியத்திற்கு ஈடுகொடுக்கும் இயல்புடையன. இறைவன், மன்னன் முதல் சாதாரண மக்கள் வரை பாட்டுடைத் தலைவனாக அதற்கு ஏற்ற வகையில் விளங்குகின்றன. சமுதாய அரசியல் நிலைகளைப் புலப்படுத்துகின்றன.”[5] எனச்

---

[4]. நா.வி. ஜெயராமன்,பாட்டிகளும் இலக்கிய வகைகளும், ப.12.
[5]. தா.ஈஸ்வர பிள்ளை, தமிழில் சிற்றிலக்கிய வரலாறு முதற்பகுதி, ப. 18.

சிற்றிலக்கியத்தின் சிறப்புக்களாகப் புலப்படுத்துகிறார். சிற்றிலக்கியங்கள் மூலம் தமிழ்ப் பண்பாட்டினைத் தமிழக வரலாற்றினை அறிய முடிகின்றது. கற்பனை ஆற்றலைப் பெறுவதில் சிற்றிலக்கியங்கள் முதன்மை பெறுகின்றன. பள்ளு இலக்கியங்கள் போன்ற சிற்றிலக்கியங்கள் மூலமாக அக்கால மக்களின் சமூக வாழ்வியலையும், பிள்ளைத் தமிழ் போன்ற சிற்றிலக்கியங்கள் வழியாக அழகியல் தன்மையையும், தெய்வங்கள் மீது அமைந்த சிற்றிலக்கியங்கள் வழியாக ஊர் வரலாறு புராணக் கதைகள் மக்களின் வழிபாட்டு முறைகள் ஆகியவற்றை அறிய முடிகிறது. சிற்றிலக்கியங்கள் அளவில் சிறியதாக இருந்தாலும் பெரும் சுவை தருவது இருந்து உள்ளன. இலக்கியப் படைப்புகள் காலந்தோறும் பல்வேறு மாற்றங்களைப் பெற்றாலும் அந்த மாற்றங்களில் சிற்றிலக்கியம் காலம் பொற்காலமாக கருதப்படுகின்றது.

சிற்றிலக்கியம் குறித்துத் தமிழ் பேரகராதி, “சிற்றிலக்கியம் எனப்படும் பிரபந்தங்கள் 96 வகைப்படும்”[6] என்கிறது. இதன் வாயிலாகச் சிறு சிறிய என்னும் சொற்கள் சிறிது என்ற பொருளை உணர்த்துகின்றன. அடி அளவாலும், பாடல் எண்ணிக்கையிலும், விகுதி பெற்று அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருள்களை உணர்த்தும் நோக்கத்துடன் சொல்லாலும், பொருளாலும் தொடர்ந்து வரும் நிலையில் அமையும் இயல்புடைய இலக்கிய வகைகள் பேரிலக்கியம் ஆகும். சிற்றிலக்கிய என்ற பகுப்பு உரியவை குறைந்த எண்ணிக்கையுடைய பாடல்கள் அறம், பொருள், இன்பம் என வரும் பொருள்களில் ஏதேனும் ஒன்றைச் சார்ந்து குறிப்பிட்ட அமைப்பு நிலை இலக்கிய வகைகள் சிற்றிலக்கியம் என்ற வகுப்புக்கு உரியவை சிற்றிலக்கியம் ஆகும். தமிழறிஞர் தமிழண்ணல் இதனை, “சிற்றிலக்கிய வகைகள் நெடும்பாட்டு போல்வன. முற்ற முடிந்த ஒரு குறிப்பிட்ட பொருளின் மேல் எனப் பல்துறை சார்ந்த நூல்கள் போலாது ஒரு துறை பற்றிய செய்திகளை உள்ளடக்கிய சுருங்கிய அளவில் அமைவன. எளிதில் படித்து முடிக்கக் கூடிய. இவை சங்க காலப் பாடல்கள் போலக் குறிப்பிட்ட இறைவனைப் பற்றிப் புகழ்வதற்காகச் சிறப்பாக

[6]. தமிழ் பேரகராதி, ப. 244.

எடுத்துரைப்பதற்காக எழுதப்பட்டன."[7] எனச் சிற்றிலக்கியத்தில் விளக்கம் தருகிறார். சிற்றிலக்கியம் கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த மரபியல் என்னும் பாட்டியல் நூல் கூறுகின்றது. இந்நூல் குறித்து,

" பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈராகத்

தொண்ணூற்றாறு என்னும் தொகையது ஆம்"[8] (வெ.பாட்டியல் நூ.23)

என்கிறது. பிள்ளைத்தமிழ் என்ற இலக்கிய வகை முதலாகப் புராணம் 96 வகைப்பட்டது பிரபந்தம் என்று இதன் பொருள் உணர்த்துகிறது.

**சிற்றிலக்கிய காக்லம்**

ஆற்றுப்படை இலக்கியங்கள் தோன்றிய சங்க காலத்திலிருந்து சிற்றிலக்கியங்கள் தோற்றம் பெற்றாலும் சிற்றிலக்கியம் உச்சநிலையில் இருந்த காலத்தில் கணக்கில்கொண்டு 96 என வகைமை செய்கின்றனர். இதனைப், "பல்லவர் காலத்தைப் பக்தி இலக்கியக் காலம் என்றும் இடைக்காலச் சோழர் காலத்தைக் காப்பியக் காலமென்றும் அதன் மேலோங்கிய தன்னையே தன்மையால் கூறுகிறோமே அதுபோல நாயக்கர் காலத்தைச் சிற்றிலக்கியக் காலம் என்று அழைக்கலாம்"[9] என்கிறார். இதனால் கி.பி. 15, 16, 17 ஆம் நூற்றாண்டுகளில் நாம் சிற்றிலக்கியக் காலம் என்று அழைக்கலாம் என அறிஞர்கள் வாயிலாக உறுதி செய்ய முடிகிறது. நாயக்கர் காலத்தில் தமிழில் சிற்றிலக்கியங்கள் மிகுதியாக தோன்றின என்பது அதற்குச் சான்றாகப் பகிர்வு செய்யப்படுகின்றது.

**சிற்றிலக்கியத்தில் சிறப்புப் பெற்ற நூல்கள்**

தமிழிலக்கியங்களில் சிற்றிலக்கிய வகைகள் ஏராளமாக இருந்தாலும் அவற்றை 96 வகைகளாகப் பகுப்புச் செய்யப்படுகின்றன. அவற்றுள் சிறப்பு உடையவனாகத் திகழும் நூல்களாக ஆற்றுப்படை, அந்தாதி, மாலை, பதிகம் கோவை, உலா, பரணி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், தூது, சதகம், மடல், பள்ளு,

---

[7] . தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 76.

[8] . வெண்பாப்பாட்டியல் நூ.23. ப. 18.

[9] . தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 261.

குறவஞ்சி என்னும் 64 இலக்கிய வகைகளும் தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் திகழ்கின்றன. பாடல்களின் எண்ணிக்கை அவற்றின் வளர்ச்சி நிலை மாறும் தன்மையினை வெளிப்படுத்துகிற விதம் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு இந்நூல் சிறப்புப் பொறுமையை உடையதாக அறியப்படுகின்றன.

**இலக்கணம்**

சிற்றிலக்கியக் காலத்தில் தோன்றிப் பல்கிப் பெருகிய இலக்கிய வகைகளில் குறிஞ்சி நிலத்தை முதன்மையாகக் கொண்டு குறவஞ்சி இலக்கியம் இயற்கை வர்ணனை மிக்கதாக உள்ளது. தலைவன் மேல் காதல் கொண்ட தலைவி அவன் மேல் கொண்ட காதலின் மிகுதியால் புலம்ப அவனது நினைவில் குறத்தியை அழைத்துக் குறி பார்ப்பதில் தொடங்குகிறது. இதன் வாயிலாக எளிய மக்களின் வாழ்வியலை இலக்கியக் கட்டமைப்போடுப் புலப்படுத்துவதை அறியப்படுகிறது. குறவஞ்சி என்பதில் வஞ்சி என்றால் வஞ்சிக்கொடி போன்ற பெண் என்று பொருளை உணர்த்திக் குறவஞ்சி என்பது குறவர் குலத்தில் பிறந்த வஞ்சிக்கொடி போன்ற பெண் என்ற பொருளை உணர்த்துகிறது.

குறவஞ்சி - பெயர்க் காரணம் பாட்டுடைத் தலைவன் உலாவரக் கண்ட தலைவி யொருத்தி அவன்மீது காதல் கொண்டு வாடி விரக வேதனையால் தவிக்கும்போது, குறக்குல மகளொருத்தி அவளுக்குக் குறி கூறிப் பரிசில் பெறுவதானச் செய்திகளைக் கூறும் சிற்றிலக்கியமாதலின் 'குறவஞ்சி' என்னும் பெயர்த் தாயிற்று. குறக்குலத்தைச் சார்ந்த பெண், 'குறவஞ்சி' எனப் பெற்றாள்.

"கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்

ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"[10] (தொல்-களவியல் நூற்பா : 25)

என்ற தொல்காப்பியக் களவியல் நூற்பாவினை விளக்கும் பல பாடல்களைச் சங்க இலக்கியத்தில் காணலாம். குறவஞ்சி இலக்கியம் பின்னாளில் 'குறத்திப் பாட்டு' என்றும் வழங்கு வதாயிற்று.

" இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமும்

[10] . தொல்-களவியல் நூற்பா எண் : 25 ப. 19.

திறப்பட வுரைப்பது குறித்திப் பாட்டே"[11] (பன்-217)

என்று பன்னிரு பாட்டியல் குறவஞ்சியின் இலக்கணம் கூறுகின்றது. இதில் கட்டு என்பது முற்றத்தில் அல்லது உலகில் நெல்லைப் பரப்பி வைப்பார் அந்த நெல்லை எண்ணிப் பார்ப்பர். இது கட்டு எனப்படும். மேலும் என்பது இதுவும் ஒரு வகையான குறிபார்த்தல் ஆகும். கலந்து என்பது கலர்ச்சிக்காய் இந்தக் காய்கள் மூலம் முருகனால் நோய் ஏற்பட்டு உள்ளதா என்று அறிவதற்காக வேலன் என்பவன் பார்ப்பான். இவ்வாறாகக் குறி பார்த்தல் என்கிற விளக்கம் தொல்காப்பியர் காலத்தில் இருந்ததைப் பாடல் வாயிலாக நாம் அறிய முடிகிறது. இதுவே பிற்காலத்தில் குறவஞ்சி இலக்கியமாகத் தோன்றியது எனலாம்.

குறவஞ்சி இலக்கிய வகைகளுக்கான கரு வகைகள் தொல்காப்பியத்திலும் காணப்பட்டுள்ளன. இந்நூல் வழியாகக் குறத்தி குறிசொல்லுதல், குறத்தி, குறவன் உரையாடுதல், குறத்தியின் செயல்கள் குறி வகைகள் குலத்தின் பெயரால் வெளிப்படுகின்ற இலக்கியச் செறிவு கொண்டுள்ளன. இதனடிப்படையில் திருக்குற்றாலக் குறவஞ்சி எழுதிய திரிகூடராசப்பக் கவிராயர், பெத்தலகேம் குறவஞ்சி எழுதிய தஞ்சை வேதநாயக சாஸ்திரி அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள். திரிகூடராசப்பக் கவிராயர், வேதநாயக சாஸ்திரி இருவரைப் பற்றி இவ்வியலில் வெளிப்படுத்தப்படுகிறது

## 1.1 திருக்குற்றாலக் குறவஞ்சி

திருக்குற்றால நாதரைப் பாட்டுடைத் தலைவராக் கொண்டு எழுதப்பட்ட குறவஞ்சியாதலின் இது குற்றாலக் குறவஞ்சி எனப் பெயரிடப் பெற்றுள்ளது. தமிழில் தோன்றிய முதல் குறவஞ்சி நூல் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். கவிராயரின் படைப்புகளைப் பதினைந்து வகையாக வகைப்படுத்தியுள்ளனர். அதில் ஒன்பது நூல்களை மட்டுமே திருக்குற்றால் நாதர் கோயில் வெளியீடாக அச்சிடப் பெற்றுக் கிடைத்துள்ளன. அதில் ராசப்பக் கவிராயரின் ‘‘கவிதைக் கிரீடம்’’ என்று போற்றப்பட்ட நூல் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். கவிராயரின்

[11] . பன்னிரு பாட்டியல் - 217 ப. 113.

படைப்பாற்றல் முழுவதும் வெளியிடப்பட்டிருப்பதும் இக்குறவஞ்சியில்தான் என்ற சிறப்புப் பெறுகின்றது.

கவிராயர் அவர்தம் காலத்தில் வழங்கிய நாட்டுப்புற இசை நுணுக்கங்களை எல்லாம் சிந்தாமல் சிதறாமல் சேகரித்துக் குளிரூட்டி, ஒளியூட்டி, ஆடலும் பாடலும் கலந்த இசை நாடகமாக இலக்கிய வடிவத்தில் தந்த இசைக் களஞ்சியமே திருக்குற்றாலக் குறவஞ்சியாகும்.

அக்காலப் பாண்டிய நாட்டை ஆண்ட விஜயரங்கச் சொக்கநாத நாயக்கர் அவர்களால் பாராட்டப் பெற்று, "குற்றாலத்தருவி அருகிலுள்ள மேலச் சண்பகக்காவில் கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் கவிஞருக்குத் தேவையான தண்ணடையான 52 ஏக்கர் நன்செய் நிலத்தைப் பரிசாகக் கொடுத்தார்."[12] 'குறவஞ்சிமேடு' என்று பெயரிடப் பெற்ற நிலப்பகுதியைப் பரிசாகக் கொடுத்தது மட்டுமின்றி, ''திருக்குற்றால நாதர் கோயில் வித்துவான்'' என்ற சிறப்புப் பெயர் சூட்டிப் பாராடப் பெற்ற நூலாகக் கருதப்படுகிறது.

18 ஆம் நூற்றாண்டில் முத்தமிழில் வல்ல மும்மணிகளாகத் திகழ்ந்தவர்கள் திரிகூடராசப்பக் கவிராயர், செங்கோட்டை கவிராச பண்டாரம், பாபநாசம் நமச்சிவராயக் கவிராயர் ஆகியோராவர். திரிகூடராசப்பக் கவிராயர் திருநெல்வேலி மாவட்டம், நாங்குனேரி வட்டத்திலுள்ள விஜய நாராயணத்தில் பிறந்தவர். இவர் சைவ வேளாளர் குலத்தில் தோன்றினார். இவ்வூருக்கு அருகிலுள்ள தெய்வமான ராஜப்ப சாஸ்தாவே இவரது குல தெய்வமாகும். இவ்வூர், "மக்கள் தங்கள் குல தெய்வப் பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்கு வைப்பது மரபாக இருந்து வந்தது. அதனை ஒட்டியே கவிராயருக்கும் இவரது பெற்றோர் 'இராசப்பன்' எனப் பெயர் வைத்தனர்."[13] கவிராயர் பிறந்த ஊரில் அமைந்துள்ள ஐயனாரின் பெயர் என்பதால் கவிராயரின் இயற்பெயர் 'ராசப்பன்' என்றும் கூறப்படுகிறது.

[12] . டாக்டர். குமார பத்மநாபன், திரிகூட ராசப்பக் கவிராயர் - ஓர் இலக்கிய நோக்கு, ப.9.
[13] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.12.

குடும்பத்தில் ஏற்பட்ட பூசல்களால், விஜயநாராயணத்தில் இராசப்பனுடைய குடும்பம் வாழ்வதற்குரிய சூழ்நிலை இல்லாததால், அங்கிருந்து சுமார் 60 மையில்கள் கடந்து ‘சித்திராநதி’ அருகில் தென்காசிக்கும் குற்றாலத்திற்கும் இடையிலுள்ள மேலகரம் என்னும் ஊருக்குத் தன் தாயாருடன் இளமையிலேயே வந்து, "மேலகரத்திலுள்ள நந்தவனம் எனப்படும் தோட்டத்தில் சிறிய குடிசை அமைத்து வாழ்ந்து வந்தார்."[14] என அறியமுடிகிறது.

**கவிராயரின் காலப் பின்னணி**

திரிகூடராசப்பக் கவிராயர் என்பார் தாயுமான சுவாமிகள் காலத்தவர் ஆவார். இதனைத் தாயுமானவ சுவாமிகள் காலத்தைப் பற்றிக் குறிப்பிட வந்த வரலாற்று அறிஞர் டாக்டர். கே.கே. பிள்ளை, “தாயுமானவ சுவாமிகள் விஜயரங்க சொக்கநாத நாயக்கன் (1706–1732) காலத்தவர்”[15] என்ற தம்முடைய ‘தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்’ என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

அதைப்போலவே பேராசிரியர் கா.சுப்பிரமணிய பிள்ளை தாயுமானவாரின் காலம் (1706 -1744) எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த புலவர்கள் வரிசையில் தாயுமானவ சுவாமிகளுக்கு அடுத்து, திரிகூடராசப்பக் கவிராயரைப் பற்றியும், அவர் குறவஞ்சி பாடியதற்காகப் பரிசு பெற்ற செய்தியையும் குறிப்பிட்டு இருப்பதால் திரிகூடராசப்பக் கவிராயரின் காலம் 18 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது தெளிவாகிறது.

டாக்டர். உ.வே.சாமிநாத ஐயர் 1940 ஆம் ஆண்டில் பதிப்பித்த திருக்குற்றாலச் சிலேடை வெண்பா என்னும் நூலில், “இந்நூல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலும், பதினெட்டாம் நூற்றாண்டின் முதலிலும் விளங்கிய மேலகரம் திரிகூடராசப்பக் கவிராயர் என்னும் புலவர் திலகரால் இயற்றப்பட்டது”[16] என்ற குறிப்பினையும் ஆய்வு செய்யும்போது திரிகூடராசப்பக்

---

[14] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.12.
[15] . கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.36.
[16] . உ.வே.சாமிநாதர் அய்யர் (பதிப்பு) திருக்குற்றால சிலேடை வெண்பா, ப.4.

கவிராயர் 17 – 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர் என்பதை உறுதி செய்ய முடிகிறது.

**கவிராயரின் இறைப்பணி**

சிறுவயது முதலே வறுமையாலும், குடும்பச்சூழலாலும் நலிவடைந்த ராசப்பர், இயற்கையாகவே இறையுணர்வு மிக்கவராகத் திகழ்ந்தார். இறைபணியே மேலான பணி என்பதை உணர்ந்த கவிராயர், சமயக் குரவர்களின் வாழ்க்கையைப் பின்பற்றிக் கோயில் சொத்தைச் சார்ந்திருந்து, கொத்தடிமையாகப் பணிபுரிந்து வந்தார். அதற்காகக் கோயிலிருந்து கை நிறைய அரிசி பெற்று வந்ததாகச் சொல்லப்படுகிறது. இதை வலியுறுத்தும் விதமாக டாக்டர்.உ.வே.சாமிநாத ஐயரும் “திருக்கோயில் கொத்தில் ஒருவராகிய கவிராயர்”[17] என்று குறிப்பிடுகின்றார். கவிராயரும், “குற்றாலர் கொத்தடியேன், புன்சொல் விழைவாகக் கொண்டருள்வார் என்றும் கொத்தடியேனுக்குக்குன் பொற்பதந்தா என்றும்”[18] தாம் கோயில் பணி செய்த பாங்கினை எடுத்துக் கூறுகின்றார் கவிராயர்.

கவிராயரின் மூத்த மைந்தராகிய பண்டாரக் கவிராயர் என்பவர், சிவநெறிச் செல்வராய் விளங்கியதோடு, திருக்குற்றாலத்துக்கு அருகிலுள்ள ‘இலஞ்சி’ என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டு ‘இலஞ்சி முருகன் உலா’ என்னும் உலாப் பாடியுள்ளார். இவரது மரபு வழிச் சிறப்பினையும், கொத்தடிமைப் பாங்கினையும் புலப்படுத்துகிறது. பண்டாரம் என்பது முருகனது திருபெயர்களுள் ஒன்றாக விளங்குகிறது.

“செய்யத் திருமாஞ் சீரடியேற் கன்றளித்த
மெய்யன் றுருமலைமேல் வீற்றிருப்போன்”[19]

---

[17] . உ.வே.சாமிநாதர் அய்யர் (பதிப்பு) திருக்குற்றால சிலேடை வெண்பா, ப.6.

[18] . திருக்குற்றால மாலை கோயில் வெளியீடு, பாடல், 100, ப.19.

[19] . மேலகரம் பண்டாரக் கவிராயர், திருவிலஞ்சி முருகன் உலா, உ.வே.சா, பதிப்பு ப.5.

என்ற குறிப்பால் இந்நூலாசிரியர் முருகக் கடவுளுக்குரிய திருப்பெயர்களுல் ஒன்றையுடையவர் என்பதும் தெரிகிறது.

**இறையருள் பெறுதல்**

நந்தவனப் பூந்தோட்டத்திலுள்ள சிறிய குடிசையில் தங்கி, திருக்குற்றால நாதர் கோயிலுக்குப் பூமாலை தொடுத்து, உழவாரப் பணி செய்து வந்தார் கவிராயர். ஒரு நாள் பூமாலைக் கொண்டுவந்த சிறுவனாய் இருந்த கவிராயர் முன், இறைவன் முனிவர் வடிவில் தோன்றி இராசப்பன் நாவில் பிரணவ மந்திரத்தை எழுதி "பூமாலை தொடுத்து வந்த நீ, என்மீது பாமாலைப் பாடுக"[20] என்றருளிச் சென்றார் என்ற செய்தி இன்னும் அவரது மரபினரிடையே நிலவுவதாகக் கூறப்படுகிறது.

இப்படியாக ஒருநாள் பூமாலைக் கொண்டு வந்த சிறுவனாகிய இராசப்பனைத் தவறுதலாகக் கோவிலுக்குள் வைத்துப் பூட்டிச் சென்று விட்டனர் என்றும், இரவு முழுவதும் தனித்திருந்து பயந்து அழுது கொண்டிருந்த சிறுவன்முன் தோன்றிய இறைவன் இறையருள் புரிந்ததாகவும் கூறுகின்றனர். இக்கதைகள் குறித்துத் திரிகூடராசப்பர் எழுதிய குற்றால மாலையில் 27வது பாடலில்,

"..............எனை ஈன்று செஞ்சொற்
பன்னென்று சொன்னபடி போலவுள்ளபடி
.........................................உன்னைத்
தனது பட்டாதிக்கம் போலத் தமிழ்க்கவி சாற்றுவதும்
உனது கட்டாயத் தொழில்காண் குற்றாலத்துறைபவனே"[21]

என்ற பாடல் வரிகளால், இறைவனது அருளால் பாடியது தெளிவாகிறது.

[20]. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.11.
[21]. திரிகூட ராசப்பக் கவிராயர், பாடல்.93. , ப.27.

**கவிராயரின் அற்புதங்கள்**

கவிராயர் இயற்றிய பாக்களுக்குப் பொருளறியாத மக்கள், மத்தள் மயக்கம் கொண்டு இவருக்கும் பித்த நோய், பேய் பிடித்துவிட்டதென்று அதிகாரிகளிடம் முறையிட கவிராயரின் பெருமையை அறியாமல் பித்தனென்றே முடிவு கட்டி காலிற்றளை பூட்டிச் சிறை படுத்தினர். சிறைப்படுத்திய அதிகாரிகள், "உன் காலில் பூட்டப்பட்ட விலங்கு தெறிக்கப் பாடு' என்று கேலி செய்ய, கவிராயர் இறைவனை வேண்டிப் பாடவும், உடனே காலில் பூட்டிய விலங்கானது இரண்டு துண்டுகளாகத் தெரித்து விட்டது. ஆனாலும் இவர் முன் நின்ற அதிகாரிகள் நம்பிக்கை கொள்ளாமல், இவர் வித்தைக்காரரோ என்று ஐயமுற்று, பக்கத்தில் இருந்த பச்சையான மரத்தைப் பார்த்து, "இது பட்டுப்போகப் பாடு" என்று சொல்ல, இவர் பாடியவுடன் மரம் பட்டுப் போயிற்று. அதிகாரிகள் மதிமயங்கினர். இந்நிலையில் திருக்குற்றாலத்தில் வாழும் குற்றாலத்து இறைவன், சொக்கம்பட்டித் சின்னஞ்சத்தேவரின் கனவில் தோன்றி, தன்னடியாராகிய திரிகூடராசப்பருக் 'குற்ற இடுக்கணைக் களையத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமாய்' சொல்லப்பட்டதாகவும். உடனே அவர் வந்து அடியவரை விடுவித்ததாகவும்"[22] மேலகரம் பகுதியில் வாழும் மக்கள் சொல்வதாக முனைவர். கஸ்தூரி நாகராஜன் திருக்குற்றாலத் தல வரலாறு என்னும் நூலில் புலப்படுத்துகிறார்.

"இறைவனது அருளால் பாடிய கவிராயரின் இசைப்பாடலில் மயங்கிய, நல்ல பாம்பு ஒன்று படம் விரித்து ஆட, அப்பாம்பின் படத்தில் குத்தியிருந்த முள்ளினைத் திரிகூட ராசப்பக் கவிராயர் தம் கையில் எடுத்து பாம்பின் துன்பத்தைப் போக்கினார். துன்பம் நீங்கிய பாம்பு, கவிஞருக்கும் கவிஞர் குடும்பத்தினருக்கும் பாம்புகளால் என்றும் தீங்கு வராது என்று அருள் புரிந்ததாகவும் சொல்லப்படுகிறது. ஆகையால் அன்று முதல் இன்றுவரை அக்குடும்பத்தினர் பாம்புகளால் எந்தப் பாதிப்புக்கும் ஆளானதில்லை"[23] என்று

[22] . முனைவர். கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தல வரலாறு, ப.119.
[23] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.113.

சொல்லப்படும் செய்தி வியப்பினைத் தருவதாக ஆ. முத்தையா, ‘இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர்’ என்னும் நூலில் பதிவு செய்துள்ளார்.

**கவிராயரின் புலமைத்திறன்**

கவிராயர் தம் காலத்திலிருந்த மன்னர்களைப் பாடாமல், இறைவனைப் பாடுவதையே குறிக்கோளாகக் கொண்டார். இளமையிலேயே, யமகம், திரிபு, சிலேடை முதலிய வகைகளில் பாடல்களைப் பாடியுள்ளார். பிள்ளைத்தமிழ், அந்தாதி, உலா, கோவை, சிலேடை வெண்பா, தலப் புராணம், குறவஞ்சி, ஊடல் ஆகிய சிற்றிலக்கியங்களை இறைவன் மீதே பாடியிருக்கின்றார். இவற்றில் சொற்சுவை, பொருள்சுவை போன்ற பல்வகைச் சுவைகள் காணப்படுகின்றன. இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழிலும் தனது முத்திரையைப் பதித்துள்ளார். கற்பனை, அணி நயம் பொலிய பலவகைத் திறன்களை வெளிப்படுத்தி, எதுகை, மோனை, தொடை இன்பம் மிளிர பாட வல்லவராய் இருந்தார். எனவே தம் காலத்தில் சிறந்து விளங்கிய தமிழ் நிகண்டு இலக்கணங்களைக் கையாண்டு, தாம் படைத்த இலக்கியங்களுக்கு அணிசேர்த்து அழகுபடுத்தியுள்ளார்.

**திரிகூடராசப்பக் கவிராயரின் தமிழ்ப்பற்று**

குற்றாலநாதர் புகழ்பாடும் குற்றாலக் குறவஞ்சியாகிய பாமாலையை ‘சீரிய தமிழ்மாலை’ என்று குறிப்பிடுவது கவிராயரின் தமிழ்ப் பற்றைக் காட்டுகிறது. தமிழ்ப் புலவர் கூட்டங்களில் எல்லாம் செந்தமிழ்த் தேனாறு பாய்கின்ற பாட்டுகளைப் பாடக்கூடியவர் என்பதை,

“......................................நீள்வேழத்
தந்திவழி பாட்டினார் சங்கமெலாஞ் செந்தமிழ்த்தேன்
உந்திவழி பாட்டினா ரூர்.”[24] (சி.வெ.41)

[24] . திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.

என்ற பாடல் வரிகளாலும், குற்றாலத்து வீடுகளிலுள்ள மாடங்களில் உள்ள கிளிகள் மிகுந்த அளவில் தமிழ்ப் பேசும் என்பதை,

"மாடக்கிளியும் வருவிருந்து பார்ப்பவரும்
கூடத்தமிழ் தீட்டுங் குற்றாலம்"[25] (சி.வெ.65)

என்ற பாடல் வரிகளாலும் அறிய முடிகிறது. குற்றாலத்தில் நடைபெறும் முத்தமிழ் பாடல்களின் ஆய்வு, கூடல் மாநகரமாம் மதுரையில் நடைபெற்ற தமிழ்ச் சங்கப் புலவர் கூட்டத்தை ஒக்கும் என்ற கருத்து,

"பாடலார் முத்தமிழ்க்கும் பார்த்திபர் பால் வெம்போருக்கும்
கூடவார் சங்க மெய்க்கும் குற்றாலம்"[26] (சி.வெ.66)

என்ற பாடல் வரிகளால் தமிழ் போற்றும் திருத்தலமாகக் குற்றாலம் விளங்குகிறது என்பதை அறிய முடிகிறது.

கவிராயரும் தம் காலச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, சிவபெருமானிடம் தனக்கென்று எதுவும் வேண்டுதல் செய்யாமல், தமிழ் மொழிக்காகவும், தமிழ் மக்களின் சைவ சமயத்திற்காகவும் வேண்டுதல் செய்தார். தமிழ் சிறப்பிழந்து தாழ்த்தப்பட்டு வருவதை உணர்ந்த கவிராயர், தமிழரின் பிறமொழிக் காதலால் தமிழ் மொழிக்கு நேரவிருக்கும் கேட்டை உணர்ந்து எழுதினார். முகமதியர் படையெடுப்புகளினாலும், கிறிஸ்தவர்களின் வருகையினாலும், சைவ சமயம் தோற்றம் மறைந்து போகக்கூடும் என்று அஞ்சினார். தமிழரின் தூய்மை பிறமொழிக் கலப்பால் சிதைந்து போகுமோ என்று சிந்தை கலங்கினார். ஆகவே சிவபெருமானை நோக்கித் தமிழையும் சைவத்தையும் காக்க வேண்டுமென இப்படியாகப் பாடுகின்றார்,

"கடம்ப வனத்தகழைவனத் தாய்கமழ் மாமலையக்
கடம்ப வனச்சண்ப காடவி யாய்கவி வாணர்தொண்டர்

[25] . திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.
[26] . திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.

கடம்ப வனத்தமி ழுஞ்சைவ வேடமும் காப்பது நின்
கடம்ப வனத்தர் பரவுங்குற் றாலக்கங் காதரனே”[27]

(யமக அந்தாதி, பா.எண். 95)

என்ற பாடல்வரிகளின் மூலமாக அவிராயரின் தமிழ்ப்பற்றை அறியலாம். மேலும் கோயில்களில் வழிபாட்டு மொழி தமிழாக இருக்க வேண்டுமென்பதே சிவபெருமானின் விருப்பம் என்பதையும், தமிழ் வழிபாட்டிற்காகத்தான் தென்னாட்டிற்கு அகத்தியரை சிவபெருமான் அனுப்பினார் என்பதனையும்,

“……………………………மேலான
சீதத்தமிழாற் சிவகாமப் பூசை செய்யப்
போந்த தமிழ்முனி நீ போதுகென”[28]

(தி.கு.நா.உ, 54 -56)

என்ற பாடல்வரிகள் மூலம் விளக்குகிறார். இதிலிருந்து தமிழ், தமிழ் வழிபாடு ஆகியன பற்றிய கருத்தாக்கங்களின் வளர்ச்சிக்கு வித்தாக கவிராயர் இருந்திருக்கின்றார் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**கவிராயர் படைத்த நூல்கள்**

கவிராயர் “தண்டமிழ்த் தாய்க்குச் சூட்டிய மாலையின் பூக்கள் பதினான்கு” என்று தலபுராணப் பதிப்பில் குறிப்பிட்டு, நூலின் பெயரும் தெளிவாகத் தரப்பட்டிருப்பதால் அவர் படைத்த நூல்கள் பதினாங்கு ஆகும். ஆனால் “இத்தலத்திற்குரிய மற்றொரு சிலேடை வெண்பா, நன்னகர் சிலேடை வெண்பா”[29] என உ.வே.சாமிநாதர் ஐயர், தனது திருக்குற்றால சிலேடை வெண்பாவின் முகவுரையில் தெளிவாகக் குறிப்பிடுகிறார். இதிலிருந்து கவிராயர் படைத்த நூலகள் பதினைந்து என அறியலாம்.

---

[27] . யமக அந்தாதி, பா.எண். 95, ப.29.

[28]. . திருக்குற்றாலநாதர் உலா, பா.எண். 54-56, பக்.23-24.

[29] . உ.வே.சாமிநாதர் ஐயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா, ப.16

அவை:

1. "திருக்குற்றாலக் குறவஞ்சி
2. திருக்குற்றாலத் தலப் புராணம்
3. திருக்குற்றால மாலை
4. திருக்குற்றாலச் சிலேடை வெண்பா
5. திருக்குற்றால யமகவந்தாதி
6. திருக்குற்றால நாதர் உலா
7. திருக்குற்றால ஊடல்
8. திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை
9. திருக்குற்றாலக் கோவை
10. திருக்குற்றால நன்னகர் வெண்பா
11. குழல்வாய்மொழிக் கலிப்பா மாலை
12. குழல்வாய்மொழிக் கோமள மாலை
13. குழல்வாய்மொழி வெண்பா அந்தாதி
14. குழல்வாய்மொழிப் பிள்ளைத் தமிழ்
15. நன்னகர் சிலேடை வெண்பா"[30] ஆகியவையாகும்.

படைப்புகள் பல தந்த கவிராயரின் நூல்களில் ஒன்பது மட்டுமே திருக்குற்றால நாதர் கோயில் வெளியீடாக அச்சிடப்பட்டு நமக்குக் கிடைத்துள்ளன. அதிலும் குற்றாலக் கோவைப் பாடல்கள் சிலவே கிடைத்துள்ளன. எஞ்சிய ஆறு நூல்களும் கிடைக்கப் பெறப்பெறவில்லை.

**புகழ் சூட்டிய குறவஞ்சி**

இராசப்பருக்குப் பெரிதும் புகழ்மாலைச் சூட்டிய படைப்பு, அவர் படைத்தைத் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். கடல் கடந்து பல நாடுகளிலும் இவரது பெருமையை பரப்பிய நூல் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். தமிழில்

---

[30]. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.20.

தோன்றியக் குறவஞ்சி நூல்களுல் சிறப்பும் செம்மாப்பும் கொண்டு, பல குறவஞ்சி நூல்கள் தோன்றுவதற்கு முன்னோடியாகத் திகழ்கின்றது. நீதியரசர், மகராஜன் குற்றாலக் குறவஞ்சியை ஆராய்ந்து கூறும்போது "குற்றாலக் குறவஞ்சி என்ற காவிய நாடகத்தில் மையமாக இருந்து கதையை நிகழ்த்துகின்ற தலைமையான பாத்திரம் ஒரு சாமானியக் குறத்தி. சமுதாயத்தில் கீழ்மட்டத்தில் இருக்கும் ஒரு குறத்தியைக் காவியத் தலைவியாக்கிய பெருமை திரிகூடராசப்பக் கவிராயரையேசாரும்"[31] என்று புகழ்ந்து கூறுகின்றார். மேலும் திருக்குற்றாலக் குறவஞ்சியே தமிழின் முதல் குறவஞ்சி நூல் என்னும் சிறப்பைப் பெற்றுள்ளது.

**குற்றாலக் குறவஞ்சிக்கு விதித்த தடை**

சிற்றின்பச் சுவையையும், சேயிழையார் உறுப்புகளையும் இந்நூல் மிகுதியாகப் பேசியதால், சொற்சுவை மிக்க இந்நூலுக்கு ஆங்கிலேய அரசு தடை விதித்திருந்தது. இந்நூலுக்குத் தடை விதிக்கப் பெற்ற செய்தியைக் கவிஞர் சுரதா, தமது 'வெட்ட வெளிச்சம்' என்னும் நூலில் கூறியிருப்பதாகக் பேராசிரியர் இரத்னசபாபதி கூறியுள்ளார். தடை விதிக்கப்பட்ட இந்நூலை நாடு விடுதலைப் பெற்றதும், பல்வேறு பதிப்பாளர்கள் வெளியிட்டனர். பல்வேறு அமைப்புகள் நாட்டிய நாடகங்களாக நடித்துக் காட்டின. இந்நூலை உலக அரங்கத்திற்கும் கொண்டு சென்றனர். திருமதி, ருக்மணி அருண்டேல், சென்னை கலாச்சேத்திரத்தில் மட்டுமின்றி அமெரிக்க நாட்டிற்கும் எடுத்துச் சென்று நாட்டியமாக ஆடிக்காட்டி அமெரிக்க மக்களின் பாராட்டைப் பெற்றார்.

உலகளவில் இந்நூல் புகழ் பெறுவதற்கு அச்சாணியாகத் திகழ்ந்தவர் ரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார் ஆவார். அவர் 'குறவஞ்சித் தன்னுடைய புலமையைக் காட்ட வந்த சொற்கோவையல்ல, உண்மையாக இதயம் அனுபவித்த இரசங்களைத் தமிழுக்கே உரிய இசையிலும், தாளத்திலும் வைத்துப் பாடிய பாடல்கள். வழக்கத்தோடு கூடிய தமிழின் எளிய நடையில் பாடியிருப்பதால், தமிழராய்ப் பிறந்த யாவருமே கவி இரசத்தை அனுபவிக்கும்

---

[31]. நீதிபதி மகராஜன், ஆடத் தெரியாத கடவுள், ப.28.

படியாகக் குற்றாலக் குறவஞ்சி விளங்குகிறது. இந்நூலை முறையாகக் கற்றுணர்ந்தவருக்கோ கற்க, கற்கத் தெவிட்டாத தேன்' என்று ரசித்துக் கூறுவதாக முனைவர். கணபதிராமன் தாம் எழுதிய திருக்குற்றாலமும், குற்றாலநாதர் கோயில் வரலாறும் என்னும் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

**கவிராயர் பெற்ற சிறப்புப் பெயர்கள்**

தம் படைப்புகள் முழுவதும் சொற்சுவை, பொருள்சுவை, கற்பனை நயம், அணி நயம் பொழியப் பாடியக் கவிராயர் , சின்னஞ்சாத்தேவன் அளித்த பரிசுகளினாலும், இவரது பாடல் சிறப்பினாலும், 'திருக்குத்தாலம் ராசப்பக் கவிராயர்' என்று அழைக்கப்படுகிறார். திருக்குற்றாலம் மூன்று சிகரங்களைக் கொண்டுள்ளதால் திரிகூட மலை என்ற காரணப்பெயரும் அதற்கு உண்டு. ஆகவே ஊருடன் கவிராயர் என்ற பெயரையும் சேர்த்துத் 'திரிகூடராசப்பக் கவிராயர்' என்று பிற்காலத்தில் அழைக்கப்பட்டார். அத்துடன் மேலகரத்திலேயே தங்கி வாழ்ந்தக் காரணத்தினால், மேலகரம் என்று அவரது பெயருக்கு முன் இடம் பெற்று 'மேலகரம் ராசப்பக் கவிராயர்' என்றும் அழைக்கப்பட்டார். சிவபெருமானைப் பாடுவதனையே தொழிலாகக் கொண்ட கவிராயர், குறும்பலா ஈசரின் பெருமையை மக்களுக்கு உணர்த்தக் குற்றாலக் குறவஞ்சிப் பாடினார். இக்குறவஞ்சி விசயரங்க சொக்கநாத நாயக்கரின் மனதைப் பெரிதும் கவர்ந்ததால், அந்நூலைக் குற்றாலநாதரின் சன்னதியிலே அரங்கேற்றம் செய்வித்து, இவரைப் பாராட்டி, 'திருக்குற்றாலநாதர் கோயில் வித்துவான்' என்ற சிறப்புப் பட்டத்தைக் கொடுத்து கௌரவம் செய்தார். மேலும் 'திலகர்' 'புலவர்' என்ற சிறப்புப் பெயர்களாலும் அழைக்கப்படுகின்றார்.

**கவிராயர் பெற்ற பட்டங்களும், பரிசுகளும்**

கோயில் திருப்பணிபுரியும் காலத்தே சைவசமயக் கல்வியில் பயிற்சியும், இலக்கிய இலக்கணங்களில் புலமையும் பெற்ற திரிகூட ராசப்பக் கவிராயர், குற்றாலநாதர் மீது சிற்றிலக்கியங்கள் படைக்கும் சீர்மையும் பெற்றார். இவரது

படைப்பில் காணும் சொல்லாட்சியும், பொருள் செறிவும், மெய்ப்பாடுகளும், இசையமைப்பும் ஈடிணையற்றது என்பதைக் கேள்விப்பட்டு அக்காலப் பாண்டிய நாட்டை ஆண்ட விசயரங்க சொக்கநாத நாயக்கர் என்பார், குற்றாலக் குறவஞ்சி என்னும் நூலைப் பாடித்தருமாறு பணிந்தார். அவர் விரும்பியவாறே "குற்றாலக் குறவஞ்சியை இயற்றி 1718 இல் குற்றாலநாதர் முன்னிலையில் அரங்கேற்றம் செய்தார். அதனால் மகிழ்ந்த அரசர், குற்றால அருவி அருகிலுள்ள மேலச் சண்பக்காவில், கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் கவிஞருக்குத் தேவையான சிறந்த தண்ணடையான 52 ஏக்கர் நன்செய் நிலத்தை வாரம் வரியின்றி முற்றூட்டாக வழங்கி அதனை ஒரு செப்பேட்டில் பொறித்து மன்னர் பெருமான் தெலுங்கில் கையொப்பமிட்டுக் கொடுத்தார். 'குறவஞ்சி மேடு ' என்று பெயரிடப்பட்ட நிலப்பகுதியைக்கொடுத்தது மட்டுமின்றி "திருக்குற்றாலநாதர் கோயில் வித்துவான்" என்ற சிறப்புப் பட்டப்பெயரையும் சூட்டிப் பாராட்டினார்."[32] எனக் குற்றாலக்குறவஞ்சியைப் படைத்து அரங்கேற்றம் செய்தமையைச் சான்றுடன் புலப்படுகிறது.

திரிகூடராசப்பரால் குற்றாலக் குறவஞ்சி பாடப்பெற்றமையால் கிடைத்த அந்நிலத்திற்கு 'குறவஞ்சி மேடு' எனப் பெயரிடப் பெற்று அழைக்கப்படுகிறது. அந்த நிலத்துக்குரிய செப்பேட்டின்படி குறவஞ்சி மேடு இன்னும் அவரது மரபினரிடம் இருந்து வருகின்றது. அச்செப்பேட்டுச் செய்திகள் பின்வருமாறு கூறுகின்றன. "சாலிவாகன் சகாப்தம் 1640 – க்குச் செல்லா நின்ற கொல்லம் 891ஆம் வருடம் தை மாதம் 11ஆம் நாள் ராஜமானிய ராஜ ஸ்ரீ முத்து விஜய ரெங்க சொக்கநாத நாயக்கரவர் களோம்; திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி சுவாமி திருக்குற்றால நாத சுவாமி பேரில் குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேற்றினதற்கு மேலச் செண்பகக்காவில் கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் ஐம்பத்திரண்டு ஏக்கர் அளவுள்ள நஞ்சை நிலம் முழுவதையும் விட்டுக் கொடுத்த படியினாலே பொறுப்பு வருடம் ஒன்றிற்குத் தீர்வை வீதம் குடுத்து கையாடிக் கொண்டு சன்னதி பிரபந்த வித்துவானாக நடந்து வருவாராகவும் இந்த நிலத்துக்கு வேறே வரி, நாட்டுச் சிலவு, காவல் கூலி, போர் நெல் குடுக்கத் தேவையில்லை யென்று

[32] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.13.

கட்டளையிட்ட படியினாலே இந்தப் படிக்குக் கையாடிக் கொள்ளவும். கையொப்பம் ( தெலுங்கில்) ராமசெயம்"[33]

இவ்வாறெழுதி அக்காலத்து முத்திரையும் போடப்பட்டுள்ளது. மதுரை மன்னர் தந்தச் செப்புப் பட்டயம் இப்பொழுது திருவனந்தபுரம் அருங்காட்சியத்தில் உள்ளதாக ஆ. முத்தையா தாம் எழுதிய "இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூடராசப்பக் கவிராயர்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இறைவனது கட்டளைக்கிணங்கி சொக்கப்பட்டிக் குறுநில மன்னர் சின்னஞ்சத்தேவர் மேலகரம் சென்று கவிராயர் அவர்களுக்காக மூன்று வீடுகள் கட்டி, வேண்டிய பொருள்களும், நிலங்களும் அளித்தார். இம்மூன்று வீடுகளில் ஒன்று 'நடு வீடு' என்றழைக்கப்படுகிறது. தெற்கே பார்த்த வீட்டில் கவிராயர் குலத்தில் பிற்காலத்தில் துறைசை மகா சன்னிதானமாகிய சுப்பிரமணிய தேசிகர் (1860 – 1888) அவதரித்தார். மற்ற இரண்டு வீடுகளும், மேற்கே வடக்கே பார்த்த இரட்டை வீடுகள் இதில் ஆசிரியர் வழி வந்தவர்கள் இன்னும் வாழ்ந்து வருகின்றனர்.

"மேலகரத்தில் வடக்குத் தோட்டம், கிழக்கே நந்தவனத் தோட்டம், கீழத்தோட்டம், நன்னகரம், மாதளைவிளை, புளியயந்தோப்பு, மதகடி நந்தவனத் தோட்டம், குற்றாலப்பேரி விளை, பாட்டப்பத்தில் நன்செய் நிலங்கள் முதலியன சொக்கப்பட்டி மன்னரால் கவிராயருக்கு அளிக்கப்பட்டவையாகும்."[34]

**கவிராயரின் வழித்தோன்றல்கள்**

கவிராயரின் வழித்தோன்றல்களாக,

1.திரிகூட ராசப்பக் கவிராயர் (இரண்டு மகன்கள்)

2.1. பண்டாரக் கவிராயர்

2.2. சின்னக்கண்ணுக் கவிராயர்

---

[33] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.23.

[34] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.23.

3. வைத்தியலிங்கக் கவிராயர் (சின்னக்கண்ணுவின் மகன் பண்டாரக் கவிராயருக்குத் தத்துமகன்)

4.சுப்பிரமணியக் கவிராயர் – (ஒன்பது மகன்கள்)

5.1. இராசப்பக் கவிராயர்

5.2.வைத்தியலிங்கக் கவிராயர்

5.3. சுப்பிரமணியத் தேசிகர் (திருவாடுதுறை 16 வது சன்னிதானம்)

5.4. சபாபதிக் கவிராயர்

5.5. திரிகூடராசப்பக் கவிராயர்

5.6.சொக்கலிங்கக் கவிராயர் (இரண்டு மகன்கள்)

5.7. சிவஞானக் கவிராயர்

5.8. சண்பகக் குற்றாலக்கவிராயர்

5.9. மந்திரக் கவிராயர்

6.1.சுப்பிரமணியக் கவிராயர் (வேல்ஸ் இளவரசரிடம் கிலத்துப் பரிசு பெற்றவர்)

6.2. வைத்தியலிங்கக் கவிராயர்

7. சொக்கலிங்கக் கவிராயர் (நான்கு மகன்கள்)

8.1. குத்தால லிங்கம்

8.2. சுப்பிரமணியக் கவிராயர் (கல்லூரி முதல்வர்)

8.3.நமச்சிவாயம்

8.4.பாண்டியராஜ்

ஆகியோர் கவிராயரின் வழித்தோன்றல்களாகக் கருதப் படுகிறது. கவிராயரின் வழித் தோன்றல்களில், குற்றாலிங்கக் கவிராயர் என்ற இயற்பெயர் பெற்றவருமான, திருவாடுதுறை ஆதினம் பதினாறாவது பட்டம் தவத்திரு. சுப்பிரமணித் தேசிகர் என்பவரும், திருநெல்வேலி இந்துக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியரும், இங்கிலாந்து மன்னர் எட்டாம் எட்வர்டு வேல்ஸ் இளவரசராய் இந்தியா வந்த பொழுது, 1922 ஆம் ஆண்டுச் சிறந்த தமிழரிஞருக்கான கிலத்துப் பரிசாகப் பொற்கடகமும், சால்வையும் பெற்றவருமான மே.சோ. சுப்பிரமணியக்

கவிராயரும் மற்றும் காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரி முன்னை முதல்வர். சொ.சுப்பிரமணியக் கவிராயர் ஆகிய மூவரும் குறிப்பிடத்தக்கவராவர்.

கடவுள் பணிக்கென்று தம்மை ஒப்படைத்துக் கொண்டவர்கள், கடவுளைத் தவிர்த்துப் பிறரைப் பாடக் கூடாது என்ற மரபை மீறி வேல்ஸ் இளவரசரைப் புகழ்ந்து பாடியதால், சில நாட்களிலேயே மே.சோ.சுப்பிரமணியக் கவிராயர் உடல் நலம் குன்றி, வாய்பேச முடியாமல் இருந்து மரித்துப்போனார். திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் தமிழ்ப்பணிப் புரிந்த சுப்பிரமணியக் கவிராயர், திரிகூட ராசப்பக் கவிராயரின் 'யமக் அந்தாதி' என்ற நூலுக்கு முழுமையான சிறப்பான பொழிப்புரை எழுதி வழங்கியதைப் போலவே, முனைவர் சுப்பிரமணியக் கவிராயர் அவர்களும் தம் முன்னோர் போற்றி வழிபட்டத் திருக்குற்றால நாதர் கோயிலைப் பற்றி ஆய்வு செய்து, 'திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும்' என்ற நூலினை வெளியிட்டுத் தமிழுக்கு தொண்டு செய்து வருகின்றார் என்பது குறிப்பிடத் தக்கதாயிருக்கிறது.

**தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் வாழ்க்கை வரலாறு**

**வேத நாயக சாஸ்திரியாரின் பிறப்பும் வளர்ப்பும்**

தென்னிந்தியாவின் தென்பகுதியில் திருநெல்வேலியில் 1735 ஆம் ஆண்டு, வேதநாயக சாஸ்திரியாரின் தகப்பனார் தேவசகாயம் பிள்ளை பிறந்தார். இவரது தந்தையார் திரு. ஐயம்பெருமாள் பிள்ளை, இந்து மார்க்கத்திலிருந்தபோது இவரை அருணாச்சலம் என்று பெயரிட்டு அழைத்தார். "அருணாச்சலம் பிள்ளை திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் கோயில் வடபுறத்திலிருக்கும் புட்டாரத்தி அம்மன் கோயில் பூசாரியாக இருந்தார். இவர் சைவ வேளாளர் மரபு, சாரால அங்கிசம், ஓதுவார் குலம், சிவசமயத்தைச் சேர்ந்தவர்."[35] என்பதாக, சாஸ்திரியாரின் 6 வது தலைமுறையில் தோன்றிய பாகவதர் வேதநாயகம் சாஸ்திரியார் Face 2 Face என்னும் நேர்காணலில் பதிவு செய்துள்ளார்.

---

[35] பாகவதர் வேதநாயகம் சாஸ்திரியார், Youtube, face to face நேர்காணல்.

வேத நாயக சாஸ்திரியார் 1774 ஆம் ஆண்டுப் புரட்டாசி மாதம் 7 ஆம் நாள் செவ்வாய்க் கிழமை அன்று திருநெல்வேலி நகர் புட்டாரத்தி வீதியில் வாழ்ந்து வந்த தேவசகாயம் பிள்ளை, ஞானப்பூ அம்மாள் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். "என்றி பவர் என்பார் சாஸ்திரியாரின் பிறந்த நாளினை செப்டம்பர் 7 என்று குறித்துள்ளார்."[36] அதனடிப்படையில் வேத நாயக சாஸ்திரியார் பிறந்த தமிழ் மாதமான புரட்டாசி, ஆங்கில மாதமான செப்டம்பர் என்று மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

வேத நாயக சாஸ்திரியாரின் தந்தை தேவசகாயம் பிள்ளையின் இயற்பெயர் அருணாச்சலம் பிள்ளை என்பதாகும். "இந்து சமயத்தவரான அருணாச்சலம் பிள்ளை தமது 25 ஆம் வயதில் கத்தோலிக்கக் கிறிஸ்தவராக மாறி, 1760 ஆம் ஆண்டு வேத போதகம் என்ற கிறிஸ்தவக் குருவிடம் தேவ சகாயம் என்ற பெயரால் திருமுழுக்குப் பெற்றார். தேவ சகாயம் பிள்ளை ஒரு தமிழ்க் கவிஞர்"[37] என்று பால் அப்பாசாமி குறிப்பிடுகின்றார். சாஸ்திரியாரும் அவரை, 'அருள் நீடு பாவலன்' எனக் குறிப்பிடுகிறார். "சபைப் பதிவேட்டில் அவரைக் கவிஞரென்று"[38] குறித்துள்ளதாக 'கால்டுவெல்' கூறுகிறார். அவர் கத்தோலிக்கத் திருச்சபையில் உபதேசியாராகவும் பணியாற்றியுள்ளார். அவருக்கும் தேவர்த்தன நாதன் என்ற கத்தோலிக்கக் குருவிற்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டின் காரணமாக அவர் சபையிலிருந்து வெளியேற்றப் பட்டார். எனவே அவர் 1785 ஆம் ஆண்டுத் திருத்தமுறைக் கிறிஸ்தவச் சபையில் சேர்ந்து அங்கும் உபதேசியாராகப் பணியாற்றினார். "1780 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் திருநெல்வேலி திருத்தமுறைக் கிறிஸ்தவச் சபையாரின் முதல் பதிவேட்டில் காணப்படும் பெயர்களில் குறிப்பிடத்தக்க பெயர்களாகத் தேவசகாயம் பிள்ளை, அவர்தம் மைந்தர் வேத நாயகம் மற்றும் தேவ சகாயம் பிள்ளையின் குடும்பத்தைச் சேர்ந்த அறுவரின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன"[39] என்று கால்டுவெல் குறிப்பிடுகின்றார்.

---

[36] . என்றி பவர், கிறைஸ்து மார்க்கம் இந்து தேசத்தில் விருத்தியான சரித்திரம், ப.295.

[37] . Paul Appa Samy, The centenary History of the C.M.S. in Tinnelvelly, p,13.

[38] . Caldwell, Early History of Tinnevelly Mission, P.336.

[39] . Caldwell, Early History of Tinnevelly Mission, P.337.

தேவசகாயம் பிள்ளை தம் மகனான வேத நாயக சாத்திரியாருக்குத் திருமுழுக்கின்போது ‘வேதபோதகம்’ என்ற பெயரினை வைத்தார். வேதபோதகம் என்பது தேவசகாயம் பிள்ளைக்குக் கிறிஸ்தவ உபதேசம் வழங்கிய குருவின் பெயராக இருப்பதால், தேவசகாயம் பிள்ளை தம் மகனை வேத போதகம் என்று அழைக்காமல் வேதநாயகம் என்று அழைத்தார். பின்னர் வேதநாயகம் என்பதே சாஸ்திரியாரின் பெயராயிற்று.

“திருநெல் வேலிப் பதியில் புட்டாரத்தி
தெருவில் சைவாஆதாரம் செழிக்க வாழ்ந்த
அருணாசலம் ஞானஸ் நானம் பெற்று
அக்கினியானம் விட்டுச் சத்திய வேதங் கைக்கொண்டு
கருணைபெற்ற தேவ சகாயந்தன் பாலன்
கவிவேத நாயகன்”[40] (வே.சா.ஞா.நொ.நா.கா.3.)

என சாஸ்திரியார் தமது வரலாற்றைப் பாடுகிறார்.

**வேத நாயகத்தின் இளம் பிராயம்**

வேத நாயகத்திற்கு ஐந்து வயதானபோது இலக்கண வித்துவானிடம் கல்வி கற்க அனுப்பினார் தேவசகாயம் பிள்ளை. அடுத்த ஆண்டு சாஸ்திரியாரின் தாயார் இறந்து போனதால் அவரது படிப்பில் தடை ஏற்பட்டது. பிறகு தன் தாயைப் பெற்ற பாட்டன் சவேரியன் செட்டியார் வீட்டில் படிக்காமல், மாடு மேய்க்கும் சிறுவர்களுடன் விளையாடித் திரிந்தமையால், படிப்பின்மீது கவனமில்லாமல் காலத்தைக் கடத்தினார். பின்னர் சாஸ்திரியாரின் ஒன்பாதாவது வயதில் அவரை புளியங்குடியில் ஓர் ஆசிரியரிடம் அனுப்பி அரிச்சுவடியும் இலக்கணமும் கற்க ஏற்பாடு செய்தார்.

தேவசகாயம் பிள்ளை தமது இரண்டாவது திருமணத்திற்குப் பிறகு, ஒன்பது வயதினரான சாஸ்திரியாரை ஆனைக் குளத்திலிருந்து திருநெல்வேலிக்கு அழைத்து வந்து, அங்குள்ள ஒரு பள்ளியில் படிக்க வைத்தார். சாஸ்திரியாருக்குப் படிப்பில் நாட்டமில்லாமல் பள்ளியைவிட்டு ஓடி ஒளிந்து கொள்வார். ஆசிரியர்

---

[40] . வே.சா.ஞா.நொ.நா.காட்சி.3. ப.15.

தினமும் தேடித்தேடிப் பிடித்துக்கொண்டு வரச் சொல்லுகிறதுமாயிருந்து மிகவும் அழுத்துப் போனார். அப்போது ஆசிரியர்,

"யாருக்குப் படித்துக் கொடுத்தாலும்
இவனுக்குப் படித்துக் கொடுக்கக் கூடாது
எமனுக்குப் படிப்பு வந்தாலும்
இவனுக்குப் படிப்பு வராது"[41] எனக் குறை கூறினார்.

**சாஸ்திரியார் இளமையில் கண்ட அற்புதம்**

சாஸ்தியார் ஒன்பதாவது வயதில் சக மாணவர்களுடன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒர் ஆள் உயரமான சிலுவைக் காட்சியைச் சுமார் பன்னிரெண்டு நிமிடம் கண்டு வியப்புற்றார். அச்சிலுவை வானில் வலது பக்கமாக மெதுவாகக் கடந்து போயிற்று. "சிலுவைக் காட்சியை மெய்மறந்து பார்த்துக் கொண்டிருந்த சாஸ்திரியாரைத் தட்டி, "என்னடா நீ படிக்காமல் பராக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்" என்று கேட்ட சக மாணவரிடம் அவர், 'எங்கள் சுவாமி போகுது பார்' என்று கூறினார். சாஸ்திரியார் இந்தச் சிலுவைக் காட்சியைத் தனது பாட்டியாரிடம் கூறினார். அதனைக் கேட்ட பாட்டியார் 'உன் வாழ்வில் ஓர் அற்புதம் நிகழும்'"[42] என்றார்.

தமது பத்து வயதில் ஒரு நாள் தம் நண்பர்களுடன் வெள்ளரிக் காய்களைப் பறித்துக் கொண்டிருந்தபோது தவறிக் கிணற்றில் விழுந்து விட்டார். நண்பர்கள் ஓடிவிட்டனர். "சாஸ்திரியார் தண்ணீரில் அமிந்து, மூன்றாம் முறை எழும்பினபோது இறையருளால் ஒரு சுவரினைப் பற்றிக்கொண்டு தப்பிக் கரையேறினார். இச்செயலைத் தந்தையிடம் வெகுகாலமாய்ச் சொல்லப் பயந்திருந்து, பின்பு ஒருநாள் சொன்னார். அவர் அதைக் கேட்டு அதிசயப்பட்டு, தன் குமாரனை மரணத்துக்கு விளக்கி மீட்டுக் காத்த கர்த்தரைத் துதித்தார்."[43]

---

[41] . வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார்,ப.14.
[42] . டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 2 - 3.
[43] . த.ம.வேத நாயக சாஸ்திரி, ப. 18.

ஒரு நாள் மாலை வேளையில் அவரது தந்தையார் தன் மகன் படிக்காமல் விளையாட்டாகக் காலம் கடத்துகிறானே என்று மிகவும் வருந்தி கண்ணீர் வடித்துக் கடவுளிடம் வேண்டிக்கொண்டிருந்தார். அப்போது சாஸ்திரியார், தந்தையின் அருகில் சென்று தந்தையை நோக்கி,

"சாஸ் : ஐயா உயரப் பார்த்துக் கவலையுடன் பேசிக் கொண்டிருக்கிறீர்களே, காரணம் என்ன? என்று கேட்டார்.

தந்தை : உனக்காகத்தான் அப்பா செபம் செய்து கொண்டிருக்கிறேன். நான் அதிக முயற்சி செய்து உனக்காகச் சுவடிகளைச் சேர்த்து வைத்திருக்கிறேன். நீயோ படிக்காமல் முட்டாளாய் இகுக்கிறாயே என்று கூறினார்.

சாஸ் : ஐயா! எனக்குப் படிப்பு வருமா? என்று கேட்டார்.

தந்தை : நீ கவனித்துப் படித்தால் கடவுள் உன் கண்ணைத் திறப்பார்; உன் புத்தியைத் தெளிவாக்குவார்; நீ படித்துக் கெட்டிக்காரன் ஆவாய்.

சாஸ் : ஐயா! எனக்குப் பாடம் எழுதிப் போடுங்கள். இனிமேல் நான் கவனித்துப் படிப்பேன் என்றார்."[44]

அன்றுமுதல் சாஸ்திரியார் தம் தந்தையிடம் பாடம் படிக்கக் கற்றுக் கொண்டார். அந்நிகழ்ச்சி சாஸ்திரியாரின் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது.

**சாஸ்திரியாரும் சுவாட்சு போதகரும்**

சாஸ்திரியாரின் பன்னிரெண்டாவது வயதில் திருநெல்வேலி மாவட்டத்தில் திருத்தமுனைக் கிறிஸ்தவத்தின் முதல் உறுப்பினரான குளோரிந்தாள் கட்டிய ஆலயத்தின் மங்கலப் படைப்பிற்காக 1785 ஆம் ஆண்டில் பாளையங்கோட்டைக்கு வந்த ஐரோப்பியக் கிறிஸ்தவப் போதகர் சுவாட்சு ஐயர், சாஸ்திரியாரின் பக்தியையும், பண்பையும் கண்டு அவரைத் தம்முடன் தஞ்சைக்கு அழைத்துச் சென்றார்.

---

[44] . வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார், பக். 14 – 15.

**வேத நாயக சாஸ்திரியார் தஞ்சைக்கு வருதல்**

தஞ்சாவூர் சென்ற சாஸ்திரியார் சுவாட்சு போதகரின் ஆசியுடன் கற்ற முதல் நூல் கிறிஸ்தவத் திருமறையின் ஒரு புத்தகமான 'சங்கீதங்கள்' என்பதாகும். அதனை நினைத்து சாஸ்திரியார்,

> "சங்கீதத்தை முதற் கொடுத்தான் வேத
> சாஸ்திரத்தையும் தான் கொடுத்தான்
> சங்கீதத்திலும் சாஸ்திரத்திலும்
> சமர்த்தன ஆக்கினாள் ஞானப்பெண்ணே"[45] (வே.சா.ச.கு.766)

என்று பின்னாளில் நன்றியுடன் பாடுகின்றார்.தஞ்சை மன்னர் துளசாஜி தன் வளர்ப்பு மகன் சரபோஜியையும் சுவாட்சு ஐயரிடம் கல்வி கற்க விட்டிருந்தார். அவருடன் வேத நாயகத்தையும் சேர்த்து பயிற்றுவித்து வந்தார். வேத நாயகம் சரபோஜிக்கு மூத்தவராய் இருந்தபடியால் சரபோஜி வேத நாயகத்தை 'அண்ணா' என்று அழைப்பார். சரபோஜி மன்னரின் பின்பும் மகாராஜாவின் ஆதரவில் இருந்த வேத நாயகம் அண்ணாவாகவும், அவர் வீடு அண்ணாவியார் வீடு என்றும் அழைக்கப்பட்டு வந்தது. "சாஸ்திரியார் நான்கு ஆண்டுகள் சுவாட்சு ஐயரிடம் கிறிஸ்தவத் திருமறையையும், கிறிஸ்தவப் போதகத்தையும் தெளிவாகக் கற்றார். பின்னர் 1789 ஆம் ஆண்டு டாக்டர். ஜான் போதகருடன் தரங்கம்பாடிக்கு அனுப்பினார். சீகன் பால்கு ஐயரின் முயற்சியால் டாக்டர்.ஜான் ஐயரிடம் இரண்டாண்டுகள் தங்கி இறையிலும், வானவியலும் கற்க ஆரம்பித்தார். ஜெர்மன் மொழியில் நற்செய்தி நூல்களை வாசிக்கக் கற்றார்; ஆங்கிலத்திலும் ஓரளவு பயிற்சி பெற்றார். டாக்டர். டி.சி. கேமரர், அருள் திருவாளர் ஜே.பி.ராட்லர் ஆகியோரும் வேத நாயக சாஸ்திரியாரின் ஆசிரியர்களாய் இருந்தனர்."[46] இந்த ராட்லர்தாம் 37,000 சொற்கள் கொண்ட தமிழ் ஆங்கில அகராதியைத்

---

[45] . வே.சா.ச.கு.766. ப.29.
[46] . டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், ப.13.

தொகுத்தார். இந்தக் கேமர்தான் பின் நாளில் திருநெல்வேலி சபைகளுக்குத் தலைமைப் பொறுப்பேற்றார்.

**சாஸ்திரியாரின் ஆசிரியப்பணி**

தஞ்சையைச் சேர்ந்த வல்லம், புதுப்பட்டி, பூதலூர், சித்திரக்குடி முதலான இடங்களுக்கும், இராமநாதபுரம், உத்திரகோசமங்கை முதலான தென்பாகங்களுக்கும் அவர்களோடே போயிருந்து செய்த ஊழியத்துக்கு மிகவும் உதவியாக இருந்தார். இவருக்கு "பத்தொன்பதாவது வயதாயிருக்கும்போது தந்தை சுவாட்சு ஐயர், இவரைச் சாஸ்திரப்பள்ளியில் வகுப்பு ஆசிரியராக நியமித்தார்."[47] இவர் தம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட பிள்ளைகளுக்கு வேத சாஸ்திரத்தையும், உலக ஞான நூல்களையும், கணிதத்தையும் உண்மையும் சுறுசுறுப்பாகக் கற்றுக் கொடுத்தார்.

சுவாட்சு ஐயர் இவரது சாமர்த்தியதையும், பள்ளிக் குழந்தைகளை நடத்துகின்ற ஒழுங்கையும் கண்டு, இனிமேல் பிள்ளைகள் தரங்கம்பாடிக்குச் சென்று படிக்க வேண்டிய அவசியம் இல்லையென்று சொன்னார். அதனால் துறைமார்களுடைய பிள்ளைகளும், நாட்டையர்மார்களுடைய பிள்ளைகளும் சாஸ்திரியாரிடமே வந்து படித்தார்கள். சாஸ்திரியார் கிறிஸ்தவத் திருமறையுடன் பிற பாடங்களையும் கற்பித்ததால் சிறந்த ஆசிரியர் என்று புகழபட்டார். அவரிடம் கல்வி கற்றவர்களில் ஐவர் குருப்பட்டமும், எழுபது பேர் ஆசிரியர், உபதேசியார், அரசுப் பணியாளர் பணிகளில் பணியாற்றினர். ஐரோப்பா நாடுகளிலிருந்து கிறிஸ்தவ மதத்தைப் பரப்பும் பணிக்காகத் தமிழகம் வந்த திருத் தொண்டர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் ஆசிரியராக விளங்கினார்.

**சாஸ்திரியாரின் ஊழியங்கள்**

சாஸ்திரியாருக்கு இயல்பாகவே பாடும் திறனும், பாடல் இயற்றும் திறனும் அமைந்திருந்ததால், தமது இருபதாம் வயது முதல் பல இசைப்பாடல்களை

---

[47] . த.சு.க.சங்.வேத.சா.ப.23.

இயற்றி அவற்றை ஆலய ஆராதனைகளில் பாட வைத்தார். ஊரூராகச் சென்று தாம் இயற்றிய பாடல்களைப் பாடிக் கிறிஸ்தவத் திருமறையை இன்னிசைப் பாடல் வழியாக அருள்செய்தி வழங்கினார். அவர் 1814 ஆம் ஆண்டு வரை இயேசு கிறிஸ்துவின் திருப்பாடல்களைத் தியானிக்கும் தபசு நாள்களில், தமது வீட்டின் முன்னால் பந்தல் அமைத்து இரவு 7:30 மணி தொடங்கி 10:30 வரை நாள்தோறும் தியான கூட்டங்கள் நடத்தினார். அக்கூட்டங்களில் அவர் இயேசு கிறிஸ்துவின் திருப்பாடல்கள் பற்றிய செய்திகளை விளக்கினார். சாஸ்திரியாரின் அத்தியானங்களை, 'இயேசு கிறிஸ்து பாடுபட்ட சரித்திர தியானம்' என்ற நூலாக எழுதி வைத்துள்ளார். அத்தியான நூலில் நூற்றெட்டுத் தியானங்கள் உள்ளன.

சாஸ்திரியார் இயேசு கிறிஸ்து பட்ட பாடுகளைக் குறித்து, தியானங்களை நடத்தி வந்த இடத்தில் அவரது பின்னடியார் 1870 ஆம் ஆண்டில், நூறு அடி நீளம், பதினைந்து அடி அகலம் கொண்ட நற்செய்தி மண்டபம் அமைத்துள்ளனர். சாஸ்திரியாரின் இரண்டாம் நூற்றாண்டு விழாவின்போது 1974 ல் அம்மண்டபம் புத்தமைப்புச் செய்யப்பட்டது. சாஸ்திரியாரின் ஞாபகமாக அவரது சந்ததியினர் ஆண்டுதோறும், தபசு நாள்களில் அம்மண்டபத்தில் திருப்பாடல்களுடன் நற்செய்திகள், தியான கூட்டங்கள் நடத்தி வருகின்றனர்.

"சாஸ்திரியார் கிறிஸ்தவர் அல்லாதோர் இயேசு கிறிஸ்துவையும், கிறிஸ்தவச் சமயத்தையும் அறிந்து கொள்ளும் வகையில், உரைநடை நூல்களை இயற்றியுள்ளார். அவர் படைத்த மொத்த நூல்களின் எண்ணிக்கை 120"[48] என்பர். சாஸ்திரியாரின் கீர்த்தனைகள், உரைநடை நூல்கள், கவிதை நூல்கள் யாவையும் கிறிஸ்தவச் சமயம் சார்ந்தவையாகவும் நற்செய்திப் பணிக்கு உதவும் வகையிலும் இருக்கிறது.

**சாஸ்திரியார் பெற்ற பட்டங்கள்**

பள்ளி ஆசிரியராகப் பணியாற்றிய சாஸ்திரியாரை 'அண்ணாவி' என்று அன்புடன் அழைத்தனர். கவிபாடும் திறன் இயல்பாகவே அமைந்திருந்ததால் பல

[48] . வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார். ப.20.

கவிதை நூல்களைப் படைத்தார். அவற்றைப் படித்தவர்கள் சாஸ்தியாரின் கவிதைத் திறனையும், கிறிஸ்தவத் திருமறைப் புலமையையும் பாராட்டினர். சாஸ்திரியாரின் புகழ் பரவத் தொடங்கியது. அக்காலத்தில் அறிஞர்களைப் பாராட்டிப் பெருமைப் படுத்தும் பல்கலைக் கழகங்கள் இருந்ததில்லை. எனவே கிறிஸ்தவச் சபையார் சாஸ்திரியாரரைப் பாராட்டிச் சிறப்பித்தனர். 34 வயதுக்குள் சாஸ்திரியார் 52 நூல்களைப் படைத்து விட்டார். அவரின் நூல்களைப் படித்தறிந்த "கிறிஸ்தவச் சபையார் 1808 பிப்ரவரி 28 இல் 'வேத சிரோமணி மகா ஞானக் கவிச் சக்கரவர்த்தி" என்னும் பட்டம் அளித்தனர். அதற்குரிய சான்றிதழ் அச்சிட்டுத் தஞ்சை கிறிஸ்தவ சபைப் பெரியார் ஐம்பதின்மரின் கையெழுத்துடன் சாஸ்திரியாரிடம் கொடுக்கப் பட்டது. சொந்த சபையினரே முதன்முதலில் அவருக்குப் பட்டம் அளித்துப் பாராட்டு வழங்கியது."[49]

சாஸ்திரியாரின் நூல்கள் வாயிலாக பிற சமயத்தவர் இயேசுவின் நற்செய்தியை அறிந்து கொள்ளவும் வாய்ப்பு ஏற்பட்டது. அதனால் பெருமிதம் கொண்ட தரங்கம்பாடி கிறிஸ்தவச் சபையார் 1808 மார்ச் 20 இல் சத்திரியாருக்கு 'சுவிசேடக் கவிராயர்' என்னும் பட்டத்தைச் சூட்டி, சான்றிதழ் வழங்கிப் பல்லக்கில் ஏற்றிப் பட்டணத்தில் பவனியாக அழைத்துச் சென்று பெருமிதப்படுத்தினர். சாஸ்திரியார் சென்னை வெப்பேரிக் கிறிஸ்தவச் சபையில் இரண்டு மாதங்கள் தங்கி, இன்னிசைப் பாடல்களைப் பாடி, நற்செய்தி வழங்கி வந்தார். சாஸ்திரியாரின் தலைசிறந்த இலக்கியப் படைப்பான பெத்லகேம் குறவஞ்சியின் அரங்கேற்றமும் அங்கு நடை பெற்றது. அங்கு சாஸ்திரியாருக்கு ஊக்கமூட்டி உதவியளித்தவர் பாதிரியார் சி. டபிள்யூ. பெத்கொத் ஆவார். சாஸ்திரியாருக்கும் அவருடைய குழுவிற்கும் உணவும், உறைவிடமும், பரிசுகளும் வழங்கிய வள்ளல் சென்னை கிறிஸ்து சமையின் தலைவர் முத்துச்சாமி பிள்ளை எனப்படுவார் அறுபது வராகனுக்குப் புதுப்பல்லக்குச் செய்து அதனையும் சென்னை சபையார் சார்பில் சாஸ்திரியாருக்குப் பரிசாக வழங்கினார்.

---

[49] . டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 24 – 25.

“1809 செப்டம்பர் 19 இல் சென்னை தமிழ்ச் சபையாரும், வலங்கை சபையாரும் கூடி சாஸ்திரியாருக்கு, ‘ஞானதீபக் கவிராயர்’ என்னும் பட்டம் அளித்தனர். சென்னை சபை பெரியார் நாற்பது பேர் கையொப்பமிட்ட பட்டமளிப்புச் சான்றிதழும் கொடுக்கப்பட்டது. பின்னர் சென்னை சபையார் சாஸ்திரியாருக்குப் புத்தாடை புனைந்து நன்கு அலங்கரித்து, புதுப்பல்லக்கு ஏற்றி, இன்னிசை முழங்க வீதி வழியாகப் பவனியாக அழைத்துச் சென்றனர். அன்று சபை மக்களுக்கெல்லாம் பெரியதொரு விருந்து அளிக்கப்பட்டது. சாஸ்திரியாரும் சென்னை சபையார் தமக்களித்த பாராட்டுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் 150 கவிகளைக் கொண்ட ‘சென்னைப் பட்டணப் பிரவேசம்’ என்னும் நூலினை இயற்றினார்.”[50]

சாஸ்திரியார் 1813 ஆம் ஆண்டில் பேரின்பக் காதல் என்ற நூலினையும், 1814 ஆம் ஆண்டில் சாஸ்திரக் கும்மி என்ற நூலினையும் இயற்றினார். திருச்சி கிறிஸ்தவச் சமையார் 1815 ஆம் ஆண்டு சாஸ்திரியாரை தங்கள் சபைக்கு அழைத்து, சிந்தாமணி வாசலுக்கு எதிரேயுள்ள நகரின் பெருவீதியில் பந்தலமைத்து, மேடை கட்டித் திரளான மக்கள் இன்னிசை நற்செய்திக கேட்க ஏற்பாடு செய்தனர். சாஸ்திரியார் அங்குப் பேரின்பக் காதல், சாஸ்திரக்கும்மி என்ற இரு நூல்களை இசைப் பாடல்களுடன் விளக்கி நாற்பத்தைந்து நாள்கள் நற்செய்தி வழங்கினார். மக்கள் திரளாகக் கூடி நாற்பத்தைந்து நாள்களும் நற்செய்தியைக் கேட்டு மகிழ்ந்தனர். 1815 ஜுன் 1 ஆம் நாளில் திருச்சியின் தலைமைப் போதகர் ‘போலே’ என்பார் திருச்சி சபையார் சார்பாக சாஸ்திரியாருக்கு அங்கி அணிவித்து, ‘வேத சாஸ்திரியார்’ என்னும் பட்டத்தைச் சூட்டினார். வேத சாஸ்திரியார் என்பது, Doctor Of Divinity என்ற ஆங்கிலப் பட்டத்திற்கு ஒப்பானதாகக் கொள்ளப்படுகிறது. பட்டமளிப்புச் சான்றிதழ் சபையார் எழுந்து நிற்க தலைமை உபதேசியார் ‘ஞானப் பிரகாசம்’ உரக்கப்

[50] . டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 34-35.

படித்துச் சாஸ்திரியாரின் கையில் கொடுத்தார். அந்நாள் முதல் வேதநாயகம் என்பாருக்கு வேத நாயக சாஸ்திரியார் என்னும் பட்டம் வழங்கலாயிற்று.

**சரபோஜி மன்னர் அரசவையில் கவிஞர் பணி**

தஞ்சை மன்னர் சரபோசியும், சாஸ்திரியாரும் நெருங்கிய நண்பர்களாக விளங்கினர். இருவரும் இளமையில் 1785 ஆம் ஆண்டு சுவாட்சு போதகரின் மாணவர்களாகளாகத் திகழ்ந்தனர். அப்போது சாஸ்திரியாருக்கு வயது 12. சரபோசிக்கு வயது 10. சரபோசி சாஸ்திரியாரை 'அண்ணா' என்று அன்புடன் அழைத்து வந்தார். இவ்வாறு ஈராண்டுகள் இணைந்து வாழ்ந்த சாஸ்திரியார் கவியரசராகவும், சரபோசி புவியரசராகவும் மாறினர். 1827 ஆம் ஆண்டு ஆபிரோ ஐயர் காலத்தில் தஞ்சை கிறிஸ்தவச் சபையில் சாதிக் கலவரம் தோன்றி 1829 இல் உச்சநிலை அடைந்தது. ஆகவே 1830 ஆம் ஆண்டில் சாஸ்திரியார் சபையிலிருந்து நீக்கப் பட்டார். சபை வழியாக அவருக்கு வந்த வருவாய் அனைத்தும் நிறுத்தப் பட்டன. அப்போது சரபோசி மன்னர் சாஸ்திரியாரை அழைத்தார். "சரபோசியைக் கண்டு வாழ்த்துக்கவி ஒன்றினைப் பாடினார். அந்நாளிலிருந்து மன்னர் சரபோசி, சாஸ்திரியாரை தமது அரசவைக் கவிஞர்களுள் ஒருவராக அமரச் செய்து, மாதம் ஊதியம் அளித்து அவரை ஆதரித்து 'அண்ணா கவி' என்று அன்புடன் அழைத்தார். சரபோசி மன்னர் மாதம் இருமுறை வேதம் சொல்லப்படாத நாள்களில் சாஸ்திரியாரை அழைத்து, அவரது பாடல்களைப் பாடக் கேட்டு உரையாடி மகிழ்ந்தார். சாஸ்திரியார் அரச வம்சத்தைப் பாடலாகப் பாடினார். சரபோசி மன்னர் சாஸ்திரியாருக்குக் குடியிருக்க நிலம் ஒன்றினை அன்பளிப்பாகக் கொடுத்தார்."[51] சாஸ்திரியாரின் வீடு அந்நிலத்திலேயே அமைந்துள்ளது.

சரபோசி மன்னன், சாஸ்திரியார் இயற்றிய 'நோவாவின் கப்பல்' என்னும் நூலுக்குக் நூறு வராகன் பரிசு வழங்கினார். 1832 ஆம் ஆண்டு வரை சரபோசி

[51]. த.ம.வேத நாயக சாஸ்திரி, ப.57.

மன்னரின் உதவி கிடைத்தது. 1832 ஆம் ஆண்டில் சரபோசிக்குப் பின்வந்த அவரது மகன் சிவாஜி மன்னர், சாஸ்திரியார் அரசவைக் கவிஞராகப் பணியாற்றுவதை விரும்பவில்லை. ஆகவே தமது பதவியைத் துறந்தார் சாஸ்திரியார்.

**சரபோசி மன்னருக்கும் சாஸ்திரியாருக்கும் இடையே நடந்த தர்க்கம்**

சாஸ்திரியார் மாதத்தில் இரண்டு நாள் அரசரைக் கண்டு தாமுண்டுபண்ணின பாடல்களை அரசருக்குப் பாடிக்காட்டுவார். சாஸ்திரியாருக்கும் அரசருக்கும் இடையே அப்பொழுது உரையாடல் நடக்கும். சாஸ்திரியார் எதற்கும் அஞ்சாமல் மன்னரோடே வல்லமையாக எதிர் நியாயம் கொடுத்து பதிலளிப்பார். அரசரும் இவர் நியாயமாகப் பேசுவதைக் கண்டு மகிழ்ச்சியடைவார். ஒரு நாள் அரசர் அவரிடம் நீர் பேசுவதைப் பார்த்தால் ‘நம்மையும் விழத்தட்டிப் போட்டுவிடுவீர் போலிக்கிறதே’ என்றார். சாஸ்திரியார் அரசவைக் கவிஞராக இருந்து சம்பளம் பெறுவதால் எச்சரிக்கையாக இருக்கும்படி மன்னர் கூறினார். யாரொருவனையாவது உம்முடைய மார்க்கத்தில் இழுத்துக் கொள்ளாதேயும் என்றார். அதற்கு சாஸ்திரியார் ராஜாவிடம் நான் ஞானஸ்நானம் கொடுக்கிறவனல்ல. அதற்காக குருமார்கள் இருக்கிறார்கள், நான் புத்தி மாத்திரம் மட்டுமே சொல்வேன் என்றார். ஆகிலும் மகாராஜா பேசிய சொற்கள் இவர் மனசாட்சிக்கு வருத்தமாக இருந்தது.

அப்போது சாஸ்திரியார் கண்ணீர் விட்டு, கர்த்தர் இத்தூரம் மனிதராக்கி விட்டார் இப்போதும், இந்த அற்பப் பொருளுக்காக அவரைப் பாடாமலும், பிரசங்கியாமலும் இப்பூவுலகிலிருந்து என்ன பயன்? இன்று இரவிலே நான் பாம்பு கடித்து செத்தாலும், அரசருடைய பணம் எனக்கெதற்கு உதவும் என்று மனதிலே எண்ணிக்கொண்டு, அரசர் கொடுத்த பணத்தை மறுபடியும் அவரிடமே கொடுக்கும்படி சென்றார். அத்தருணத்திலே அரசர் அரண்மனைக்குச் சென்றுவிட்டதால் மந்திரி ‘பாவாய் பண்டிதர்’ இவரை சமாதானம் செய்து,

பணத்தை ஒரு மாணவனிடத்தில் கொடுத்து இவரோடே கூட வீட்டுக்குக் கொண்டு போகச் சொன்னார்.

பின்பு ஒரு நாள் "நான் பாடின பெத்லகேம் குறவஞ்சியைக் கேட்டு மகிழ்வுற்ற மன்னர், அதைப்போலவே தம்முடைய கடவுளாகிய பிரகதீசுவரர் பேரில் ஒரு குறவஞ்சி" பாடச் சொன்னார். நான் நடுக்கத்தோடே, பராபரனைத் தவிர வேறு ஒன்றையும் பாடக் கூடாதென்றேன். அதற்கு மகாராஜா, "நான் சம்பளம் கொடுக்கிறபடியினால், நான் சொன்ன வேலையை நீர் செய்ய வேண்டியதில்லையா? என்றார். அதற்கு நான், "ஆண்டவனே" நான் தந்தை சுவாட்சு ஐயரால் வளர்க்கப்பட்ட சீடனாக இருக்கிறேன். எனக்கு இப்போது 56 வயதாகிறது. இதுவரை பராபரன் என்னைப் பாதுகாத்து வந்தார். இப்போது சபையிலே, வந்த புது மிஷனரிகள் உண்டு பண்ணின சாதி வேற்றுமையினால் தங்கள் சமூகத்தில் வந்தேன். இப்போது நான் என் சிருஷ்டிகருக்கு விரோதமாகப் பாவஞ்செய்கிறதினாலே, நான் அவருக்கு சத்துருவாகப் போவேன். அதைப் பார்க்கத் தாங்கள், என்னை தள்ளிப் போடுகிறதாக இருந்தால் தங்கள் விருப்பமாகட்டும் என்று கூறினார் சாஸ்திரியார். அதற்கு மறுமொழியாக மகாராசா, 'நீர் குறவஞ்சி பாடாதே போனால் போகட்டும், ஒரு காப்பு மாத்திரம் பிள்ளையார் பேரிலே உண்டாக்கிக் கொடும்' என்று சொன்னார். அதற்கு நான் "குறவஞ்சி பாடாமல் ஒரு சின்ன பாட்டு மாத்திரம் பாடினாலும், பின்னையும் நான் கர்த்தருடைய பார்வையிலே நேர் அற்றவனாய் போவேன்" அப்படி செய்யக் கூடாது மகாராசாவே என்றேன். அப்போது மகாராசா என்னைப் பார்த்து, உம்முடைய இயேசு நாதர் பெயரிலே நாங்கள் பாட்டுப் பாடுகிறோம், நீர் எப்படிச் சொல்லுகிறிரோ அப்படியெல்லாம் வைத்து இன்னமும் அதிகமாகவும் பாடித் தருகிறோம். அதன் பிறகாகிலும் நீர் எங்கள் பிள்ளையார் பெயரிலே ஒரு காப்பு பாடிக் கொடுக்கலாமே! என்றார்.

அதற்கு நான் 'மகாராசாவே! நீங்கள் இயேசு நாதர் பேரிலே பாடுவீர்கள் என்பதற்கு சந்தேகமில்லை. அப்படி நீங்கள் பாடினாலும், நான் பிள்ளையாரைப்

பாடக் கூடாது என்றேன். அப்போது மகாராசாவுக்கு ஆயாசம் உண்டாகி தம்முடைய சங்கத்தாரைப் பார்த்து ‘என்னாங்காணும்’ இவருடைய சாமியின் பேரிலே பாடியிருக்கிற பாடல்களை நாங்கள் கேட்க வேண்டுமாம்! நாங்கள் அவருடைய சுவாமியின் பேரிலே பாடினாலும், அவர் எங்கள் சுவாமியின் பேரிலே பாடக்கூடாதாம்! இது எப்படி இருக்கிறது? என்றார். சும்மா பாடுங்காணும், மகாராசாவின் வார்த்தையைத் தட்டாதேயும் என்றார்கள்.

அதற்கு நான் “மகாராசாவே! தாங்கள் பணிவிடைக்காரர் போல் என்னைப் பாவித்து நடத்த வேண்டியதில்லை. எத்தனை யானைகள், குதிரைகள், மாடுகள் முதலான மிருக ஜீவன்களை வைத்து ஆதரிக்கிறீர்கள். ஒரு யானைக்கு மாதத்திற்கு எத்தனையோ செலவாகிறது. அப்படி என்னையும் ஒரு யானையாக நினைத்து நடத்த சித்தமானாலும், தங்கள் மனது அதற்கு உடன்படவில்லை என்று அனுப்பிவிட்டாலும், தங்கள் சித்தம், இனி எல்லோரும் என்னை விரோதித்துத் தங்களுக்கு ஆயாசத்தை உண்டாக்குவார்கள். பிழைக்கலாம் என்று வந்த இடத்திலே இந்தச் சோதனை நேரிட்டது” என்றேன். அதற்கு மகாராசா, “ஓய் வேதநாயம் பிள்ளை! நீர் ஒருவருக்கும் அஞ்ச வேண்டாம். உம்முடைய இயேசு நாதரையே பாடிக்கொண்டு நன்றாக இரும்”[52] என்று அனுப்பிவிட்டார். இந்த விவாதம் ஒரு சாமத்திற்கு அதிகம் நடந்தது. ஆனால் இதை வெகு சுருக்கமாக் எழுதினேன்.

இப்படியெல்லம் இருந்தும் மதிப்பிற்குரிய (H.H) சரபோசி மகாராசா இவரை மிகவும் பட்சமாய் நேசித்து நடத்தி வந்தார். அவர்ருடைய குமாரன் சிவாஜி அரச பட்டத்திற்கு வந்தபோது, கிறிஸ்தவர்கள் எல்லோரையும் பகைத்து, இவரையும் அரண்மனைக்குள் வராதபடி தடை பண்ணினார்.

[52] . டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், ப.188.

**சாஸ்திரியாரின் பக்தி வைராக்கியம்**

சாஸ்திரியார் சிறந்த இறை பக்தராக விளங்கினார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் கிறிஸ்தவத் திருமறையைத் தியானித்துக் கொண்டே இருப்பார். "தியானத்தின்போது சில நேரங்களில் சிரிப்பார். சில நேரக்களில் கண்ணீர் வடிப்பார். அவர் காலையும் மாலையும் என இரு வேளையும் ஜெபம் பண்ணுவார். சில வேளையில் பெப்ரீசியசு ஐயரின் பிராத்தனைகளை மனப்பாடமாகச் சொல்லிக் கொண்டே இருப்பார். சாஸ்திரியார் காலையும் மாலையும் குடும்பச் செபம் செய்யத் தவறியதில்லை. அவரின் வீட்டின் முன்புறம் ஒரு கம்பத்தில் சிலுவைக் கொடியைப் பறக்க விட்டார்."[53] தஞ்சை மன்னர் சரபோசி மானியமாகத் தமக்களித்த வயல் நிலத்தைப் பெற்றுக் கொள்ள மறுத்து விட்டார். அந்நிலத்தைப் பெற்றால், 'அன்றுள்ள அப்பத்தை இன்று எங்களுக்குத்தாரும்' என்று தினமும் செபிக்கும் தமது பக்தி வாழ்க்கை மாறிவிடும் என்றும், பிற்காலத்தில் நம் பின்னடியார் பாவச் செயல்களுக்கு உட்பட நேரிடும் என்றும் கருதினார் என்பர்.[58]

"சாஸ்திரியார் 1811 ஆம் ஆண்டு தமது குடும்பத்துடன் யாழ்ப்பாணம் சென்றபோது, வட காற்று சரியாக வீசாததால் ஒரு வாரம் தோனி ஓடாமல் தடை பட்டு ஒரு கரையில் நின்றது. சாஸ்திரியாரின் கையில் இருந்த பணமெல்லாம் செலவாயிற்று. அதனால் மனம் வருந்திய சாஸ்திரியார் வட திசை நோக்கி ஒரு பாடல் பாடினார். 'வடகாத் தருள்திரி யேகா என்பங்கில் வளர்ந்தவனே' என்று சாச்திரியார் பாடிக் கொண்டிருக்கும்போதே வடகாற்று வீசத் தொடங்கியது"[54] என்பர். சாஸ்திரியாருக்கு உணவு கொடுக்க மறுத்த சத்திரக்காரனின் கை செயலற்றுப் போயிற்று என்றும், காலரா நோயினால் உயிர் பிரியும் நிலையிலிருந்த வேதநாயக உபதேசியார் சாஸ்தியரின் செபத்தில் சுகம் பெற்றார் என்றும், சாஸ்திரியாரின் குடும்பத்திற்குத் தேவையான உணவு, உடை, பொருள் யாவும் அவரின் செபத்தால் அற்புதமாகக் கிடைத்தது என்றும் கூறப்படுகிறது.

---

[53] . த. ம. வேத நாயக சாஸ்திரி, பக். 67.

[54] . வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார். ப. 24.

**சாஸ்திரியார் படைத்த நூல்கள்**

சாஸ்திரியாரின் இலக்கியப் படைப்புகளின் எண்ணிக்கையில் மாற்றுக் கருத்துக்கள் நிலவுகின்றன. பத்துக்கும் மேற்பட்ட நூல்கள், பெங்களூர் ஒன்றிய இறையியல் கல்லூரியின் நூலகத்திலும், மதுரை அரசரடி தமிழ்நாடு இறையியல் கல்லூரியின் நூலகத்திலும் பாதுகாக்கப் படுகின்றன. அவற்றுள் பெரும்பான்மை உரைநடை நூல்களாகவே உள்ளன. எனினும் சாஸ்திரியாரின் தலைமுறையில் தோன்றிய வே.சேம். வேதநாயகம் சாஸ்திரியார் எழுதிய தஞ்சை சுவிசேட கவிராயராகிய சங். வேத நாயகம் சாஸ்திரியார் என்னும் நூலில், சாஸ்திரியார் படைத்த நூல்கள் மொத்தம் 141 என்று அட்டவணைப் படுத்தியுள்ளார்.

அவை :

1. அதனாசியஸ் விசுவா பிரமாணப் பாட்டு
2. அறிவானந்தம் – 1818
3. அகவரி பொத்தகம்
4. அச்சடிக்குதலைப் பற்றிய ஞாயம்
5. அந்தகார நிவாரணம் – 1813
6.அந்நிய சத்தம்
7.அடா மொழிக்கு எதிர் ஞாயம்
8. அறு சமய சங்காரம்
9.ஆதியானந்தம் -1818
10.ஆரணாதிக்கம் - 1821
11. ஆயிரம் கேள்வி புத்தகம்
12. இந்துஸ்தானி பாடல்கள் அல்லது சட்ட புத்தகம்
13. இங்கிலிஷ் வாசகம் 1) 1821
14. இங்கிலிஷ் வாசகம் 2) 1830
15. இராஜேந்திரக் கவிராயர் அடா மொழிக்கெதிர் ஞாயம்

16. இழவு மொட்டைக் கெதிர் ஞாயம்

17. உயிர்த்த சரித்திரம்

18. உபாயாத்த காதல்

19. உங்கள் வேளை

20. உபதேச வாசகம்

21. உபத்திராபத்திரம் 1) 1823 , 2)1824 22. ஏசு நிருபம்

23. எண் விளக்கம்

24. ஒன்றான பரம தர்க்கம்

25. கல்யான வாழ்த்துதல் 1 பங்கு, 2 பங்கு – 1796

26. கடசி நியாயத் தீர்ப்பு – 1844

27. கால வித்தியாச மாலை – 1807

28. கணக்காகமம்

29. குருட்டு வழி

30. கோலேப் ஐயருக்கு எழுதிய சீட்டுக்கவி

31. கிறிஸ்துவின் மகத்துவம்

32. குற்ற விளக்கம் - 1843

33. கம்பன் முதலான மூட வித்வாஙள் சரித்திரம்

34. கடந்த வேத பரம இரகசியம் வியாக்கியாணம்

35. குற்றவிளக்கம்

36. காகிதம் பிரானுடன் சாஸ்திரியார் சம்பாஷனை

37. கிறிஸ்துவின் நடக்கையின் பேரில் சுலோபங்கள் – 1850

38. சதுர் வேத சித்தாந்தத்திற்கெதிர் உரை

39. சமுதாய விண்ணப்பம்

40. சாஸ்திர கும்மி

41. சித்திர விளக்க கும்மி

42. சிரமுண்ட கண்டனம்

43. சிலுவை தியானம்

44. சூரியனை அணிந்த ஸ்திரி

45. சைத்தன்னிய திரவுகோல்

46. சுவிசேட புராணம்

47. சுவிசேட ஞானம்

48. சமுசார பிரிவினைக் கெதிர் ஞாயம்

49. சாதிகளின் மாறுபாடு

50. சாதி பேத சம்பாஷனை – 1834

51. சாதி திருத்தலின் பயித்தியம்

52. சாதி தீர்மான ஆட்சேபம்

53. சாஸ்திர மறுத்தல்

54. சிவந்தி புராண அடக்கம்

55. சோழன் மகத்துவம்

56. சுவிசேட புராணம்

57. சொல்வண்ணம்

58. சிற்றறிவு 1) 1847, பின் தேர்ந்தறிவு 2) 1852

59. சிவந்தி புராணம்

60. செபமாலை 1 பங்கு, 2 பங்கு 1853

61. செப யோகசாஸ்திர யோகப்பா

62. ஞானக் கும்மி

63.ஞான ஏத்தப் பாட்டு

64. ஞானவு பா – 1857

65. ஞான தாராட்டு

66. ஞாயத் திட்டாந்தம்

67. ஞானத் திருப்புகழ்

68. ஞானந்தாதி – 1801

69. ஞான வழி

70. ஞானாணு பூதி

71. ஞானானந்த களிப்பு

72. ஞான நொண்டி – 1800 73. ஞான தச்ச நாடகம் -1830

74. ஞானவிடு தூது

75. ஞான தீப விருத்தாந்தம்

76. ஞானப் பாட்டர் பன்னிரு ஞாயம்

77. ஞானஸ்நான நாம தேயம்

78. ஞானத் திருப்புகழ்

79. ஞாயிறு தோறும் சுவிசேட வாக்கியம்

80. தரும நூற் தெளிவு

81. தியானப் புலம்பல் 3 பாகம் – 1821

82. திருச்சபை தாராட்டு

83. திருச்சபை யூஞ்சப்

84. திரு விளையாட்டு ஊஞ்சல்

85. தேவ சகாயம் பிள்ளை மரணம்

86. திருச்சபைத் திட்டம்

87. தேச வழக்க அகராதி

88. தெஷணா பத்திரம் – 1854

89. நூறு சுலோகம்

90. பண வாசகம்

91. பராபரன் மாலை 1) கலித்துறை 2) கலிப்பா

92. பண்டிகைப் பிரஸ்தாபம் – 1829

93. பரம நீதி புராணம்

94. பழனி மருத்துவம்

95. பாமதி பூதி

96.பா சமய விளக்கம் – 1821

97. பராபரபரக் கண்ணி

98.பராசிய அறிவிப்பு

99. பத கீர்த்தனம், ஞான பதக் கீர்த்தனம் – பல் சமயங்கள்

100. பன்னிரண்டிலக்க தோத்திரம்

101. பள்ளிக்கூட திட்டம்

102. பிரலாய ஒப்பாரி

103. பிரலாய ஒப்பாரி

104. புது திருத்தலின் கூக்குரல்  - 1825,1843

105. பிள்ளைகள் ஞாயம்

106. பூர்வோத்திரம்

107. பிரலாப வண்ணம்

108. புது மடத்தார் சம்பந்தம்

109. பெருத்த சாங்கம்

110. பெத்லகேம் குறவஞ்சி

111.பேரின்பக் காதல்

112. மகமது மாக்கத்தார் சம்பாஷனை

113. பால சரித்திரம் 1821

114. பெண்டீர் விடு தூது

115. மனோன் மணி விளக்கம்

116. முன்னுரை – 1801

117. மெய்யறிவு – 1801

118. மருத்துவத்தின் முன் தூதன்

119. மகிழ் விருட்ச சாட்சி

120. மோட்ச நரக வித்தியாசம்

121.வஸ்து நிர்ணயம் – 1818

122. விதி விலக்கு

123. வேதப் பழமொழி – 1818

124. விடுதலை விளக்கு 1852

125. வண்ண சமுத்திரம்

126. வெண்கல சர்ப்பம்

127.வேதநாயகன் கட்டியம்

128. வேதநாயகன் சதகம்

129. வேதநாயகன் திரட்டு

130. வேத சிந்தாமணி

131. வேதத் தொகை அந்தாதி

132. வேத நாயகன் பிரசங்கம்

133. வேதநாயக சாஸ்திரி பூர்வோத்திரம்

134. வேறுவழி வாசகம்

135.வலங்கை சரித்திரம்

136. வாகவூர் புராண சரித்திரம்

137. விசுவ கண்மா சரித்திரம்

138. வேத வினா விடை

139. வேத பழபொழி – 1818

140. ஐவர் சரித்திரம்

141.ஐவர் சரித்திர பிரயோகம்

போன்ற கவிதை, காவியம். உரைநடை, நாடகம் போன்றவற்றைப் படைத்துத் தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் இலக்கிய உலகத்திற்கும், கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்திற்கும் பெருமை சேர்த்து, இலக்கிய உலகத்தில் நீங்கா இடத்தைப் பிடித்துப் பெருமை சேர்த்துள்ளார்.

**சாஸ்திரியாரின் தாய் மொழிப் பற்று**

கிறிஸ்தவ ஆலயங்களில், ஆங்கில இசைப்பாடல்களும், ஆங்கில வழிபாட்டு முறைகளுமே பெரும்பாலும் பின்பற்றப் படுகின்றன. வழிபாட்டிற்குப் பயன்படும் பாமாலைப் பாடல்கள் அனைத்தும், ஆங்கில மொழி பெயர்ப்பாக உள்ளன. இறை வழிபாட்டு நூலும் ஆங்கில வழிபாட்டு மொழி பெயர்ப்பாகவே உள்ளது. ஆலயப் பாடகர் குழுவினர் ஆங்கில இசையிலே பயிற்சி பெற்றனர். ஆனால் சாஸ்திரியாரோ தமிழிசை வழிபாட்டு முறையினையே விரும்பினார். வழிபாட்டில் பாடுவதற்கெனத் தமிழ்க் கீர்த்தனைகளை எழுதினார். இப்போது கிறிஸ்தவ வழிபாட்டிற்குப் பாயன்படும் கீர்த்தனைப் புத்தகங்களில் சாஸ்திரியாரின் கீர்த்தனைகள் பெரிதும் விருப்பிப் பாடப்படுகிறது. இந்த உலகம் இருக்கும் வரையிலும் கிறிஸ்தவ ஆலயங்களில் சாஸ்திரியாரின் பாடல்கள் ஒலித்துக் கொண்டே இருக்கும். அந்த அளவிற்கு, மிகுந்த கருத்துள்ளதும், கிறிஸ்துவைப் போற்றும் விதமாகவும், இசை, தாளத்திற்கு ஏற்ற வகையிலும் சிறப்புற்று விளங்குவதால் இவரது பாடல்களை அகில உலகத்திலும் உள்ள கிறிஸ்தவர்கள் விரும்பிப் பாடுகின்றனர்.

சாஸ்திரியார் கிறிஸ்தவ வழிபாட்டு முறையைத் தமிழ் வழிபாட்டு முறையாக மாற்ற விரும்பி 'செபமாலை' என்னும் இன்னிசை வழிபாட்டு நூலினை இயற்றினார். தேவாரம் , திருவாசகம், திருப்புகழ் போன்ற அமைப்புடனும் எழுதப்பட்ட செபமாலை இன்னும் கிறிஸ்தவ வழிபாட்டு நூலில் உள்ளது. சாஸ்திரியாரின் தமிழ்ப் பற்றினை,

> 'பாவலர் கொஞ்சும் தமிழ்ப்பாட்டுக் கேற்ற பராபரனே'
>
> (ப.மாலை . 2: 26)
>
> 'துடங்கேன் தமிழை உனக்கன்றி யார்க்கும் துணிந்துரையேன்'
>
> (ப.மாலை. 2:13)
>
> 'நீண்ட தமிழ் வாக்களித்து நித்தம் நித்தம் காத்தருளே' (பே.காதல், 3.8)
>
> 'தண்டமிழ் கொண்டு மகிழ்ந்தெழு சந்தன்' (ஞா.ப.கீ.188)

‘சீருற்ற செந்தமிழ் வாழ்கவே’ (ஞா.கு. 3.1)

‘அத்தனின் மேல் தமிழ் பெருகவே’ (ஞா.கு.3.6)

‘மெய்த் தமிழுக்கு உதவு தூயன்’ (பெ.கு.தோ.சி.5)

‘செந்தமிழ் நற்சுவை உணர்ந்த சேயர் பெற்றுச்

செழித்திருப்பார் நிகராகும் இல்லை தானே’ (சுவிசேட ஞானம் 30)

போன்ற பாடல் அடிகள் மூலம் சாஸ்திரியாரின் தமிழ்ப் பற்றை அறியலாம்.

**சாஸ்திரியாரின் குடும்பப் பின்னனி**

வேத நாயக சாஸ்திரியாரின் 21 ஆம் வயதில் அவர்தம் தந்தை தேவசகாயம் பிள்ளையும், சுவாட்சு ஐயரும், சாஸ்திரியாரின் அத்தை மகளான வியாகம்மாளை மணமகளாகத் தேர்வு செய்து, 1795 ஆம் ஆண்டு கிறிஸ்தவ முறைமையின்படி திருமணம் நடத்தி வைத்தனர். திருமணமான அடுத்த ஆண்டே மனைவி கருவுற்ற நிலையில் காலமானார். பின்னர்த் தமது 27 ஆம் வயதில் திருநெல்வேலியைச் சேர்ந்த மாமன் மகள் மிக்கேலு முத்தம்மாளைத் திருமணம் செய்தார். கல்வியறிவு நிறைந்த அவர் சாஸ்திரியாருடன் உள்ளம் ஒன்றி வாழவில்லை. சாஸ்திரியாரை விட்டு தன் தாயார் வீட்டுக்குச் சென்றுவிட்டார். சாஸ்திரியார் பலமுறை முயன்றும் மிக்கேலு முத்தம்மாள் மனம் திரும்பி வரவில்லை. இவர்களுக்குக் குழந்தைப் பேறும் இல்லை.

வாரிசு இன்மையால் மனம் வருந்திய சாஸ்திரியார், 1811 ஆம் ஆண்டு தம் சகோதரியின் முப்பது நாள் பருவக் குழந்தையைத் தமக்குச் சுவிகாரப் புத்திரியாக்கி, அக்குழந்தைக்கு ஞானதீபம் என்று பெயரிட்டு விழா எடுத்தார். ஞானதீபம் தமிழிலும், ஆங்கிலத்திலும், இசையிலும் புலமை பெற்று விளங்கினார். சாஸ்திரி பட்டம் பெற்று நற்செய்திப் பணியாற்றிப் புகழ்பெற்றார். பின்னர் தானியேல் மங்களம் பிள்ளை என்பவருக்கு மணமுடித்துக் கொடுக்கப் பட்டாள்.

ஞானதீபத்தைத் தத்தெடுத்து வளர்த்த, சிறிது நாளில் ஞானோதயம் என்ற பெண்ணைத் திருமணம் செய்தார். 1813 ஆம் ஆண்டு ஓர் ஆண் மகனைப்

பெற்றெடுத்தார். தன் மகனுக்கு ஞானச் சிகாமணி என்று பெயர் வைத்தார். ஞான சிகாமணி நன்கு கல்வி கற்றுத் தஞ்சை இறையியல் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார்; இரோப்பியப் போதகருக்குத் தமிழ் கற்றுக் கொடுத்தார்; கத்தோலிக்கச் சமயத்தாருக்கு எதிராக 'இரு சமய சம்பந்தம்' என்ற நூலையும், முகமதிய சமயத்தாருக்கு எதிராக 'மேசியா மகத்துவம்' என்ற நூலையும், நாத்திகர்களுக்கு எதிராக 'நாஸ்தீகக் கண்டனம்' என்ற நூலையும், திரித்துவ தத்துவத்தை விளக்கும் வகையில் 'திரித்துவ விளக்கம்' என்ற நூலையும் எழுதினார். சாஸ்திரியார் தம் மூத்த மகனான ஞானச் சிகாமணிக்கு சாஸ்திரியார் பட்டம் சூட்டி, இன்னிசை நற்செய்தி அளிக்குமாறு அவரைப் பல நாடுகளுக்கு அனுப்பினார். ஒருமுறை மைசூர் மன்னனும், மற்றொரு முறை வன்ம குலசேகர வஞ்சி மார்த்தாண்டன் என்ற மலையாள மன்னனும் ஞான சிகாமணி சாஸ்திரியாரைத் தங்கள் அரண்மனைக்கு அழைத்து அவரது இன்னிசை நற்செய்தி கேட்டு, மகிழ்ந்து பரிசளித்துப் பாராட்டினார்.[67] தஞ்சை கிறிஸ்தவச் சபையார் 1864 மே 27ல் ஞான சிகாமணி சாஸ்திரியாருக்கு 'சுவிசேடப் புராணப் பிரசங்க சாஸ்திரியார்' என்ற பட்டம் சூட்டி சிறப்பித்தனர்.

சாஸ்திரியாரின் முந்தின இரண்டு தாரங்களும் மரித்துப் போன பின்பு, இவருடைய 55 ஆம் வயதிலே மூன்றாவது தாரமாகத் தஞ்சாவூர் சாந்தப் பிள்ளையின் மகள், வரதோயம் அம்மாளைத் திருமணம் செய்தார். சாஸ்திரியார் வரதோயம் அம்மாள் தம்பதியினருக்கு நோவா ஞானாதிக்கம், எலியா தேவசிகாமணி என்ற ஆண் மக்களும், மனோன்மணி என்னும் ஒரு பெண் மகளும் பிறந்தனர். வரதோயம் அம்மாள் சாஸ்திரியாரின் இறுதிக் காலம் வரை அவருடன் அன்பாக வாழ்ந்து, அவருக்கு ஆற்ற வேண்டிய அனைத்துக் கடமைகளையும் நிறைவேற்றினார்.

**சாஸ்திரியாரின் இறுதிப் பயணம்**

1864 ஆம் ஆண்டு, ஜனவரி 24 ஆம் நாள், ஞாயிற்றுக்கிழமை வழக்கம்போல வீட்டில் காலை ஆராதனை நடக்கிறபோது நாற்காலியில் உட்கார்ந்திருந்த வண்ணம் யாவருக்கும் பொதுவான ஆசீர்வாதமான

"கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கிருபையும், பரம பிதாவின் சிநேகமும், பரிசுத்த ஆவியின் ஐக்கியமும் உங்கள் யாவருடனும் இருக்கக் கடவது"[55] என்று அருளிய ஆசீர்வாதமே அவர் வாயினால் அருளிய இறுதியான ஆசீர்வாதமும் செபமும் ஆகும்.

பின்பு அவருக்குக் களைப்பாய் இருக்கிறதென்று கட்டிலிலே படுக்க வைத்தபோது, அவருக்கு மேல் மூச்சு அதிகமாகியதால் சபையார் எல்லோரும் கூடிவந்தனர். அன்று மாலை 4 மணிக்கு மேல் சிரேஸ்தார் கே. சாந்தப் பிள்ளை மோட்ச மகிமையின்பேரிலே உண்டு பண்ணப்பட்ட "ஓய் எருசலேமியாரே" என்ற பிராத்தனையைப் பாடி அன்றைய தினத்திற்குரிய முப்பரிநூல் வாக்கியத்தை வாசித்தார். அது "பிதாவே உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்" என்ற வசனமாயிருந்தது. இந்த வாக்கியத்தை அவர் வாசித்து, எழுப்புதலாய்ப் பேசிக்கொண்டிருந்த சமயத்தில்தான் மேற்சுவாசம் ஏற்பட்டது. ச.கி.சாந்தப்பிள்ளை "இயேசுவே தயாபரா" என்ற பிராத்தனையைச் சொன்னார். அப்போது ஞானாதிக்கம் "என்னை மீட்டுத் தாங்கிய" என்ற பிராத்தனையை முழுவதுமாக வாசித்தார்.

அந்நேரத்தில் வரோதய அம்மாள் சாஸ்திரியாருக்குத் தொண்டை காய்ந்து மோகும் என்று எண்ணி, ஒரு தேக்கரண்டி நீர் கொடுத்தபோது, வேண்டாம் என்று தள்ளி, பேரின்பச் சுகத்தை நாடினவராய் புன்சிரிப்பு கொண்டார். அச்சமயத்தில் தஞ்சை சபை குருவாகிய சங்கை நேலரையர் வந்து ஆறுதலான ஒரு செபம் செய்தார். உடனே நோவா ஞானாதிக்கம், தன் தகப்பன் தலைமாட்டுப் பக்கத்திலே நெருங்கி நின்று கொண்டு ஒருவரையும் அழாதபடி தடுத்து, உரத்த சத்தமாய்ச் சொன்ன பிராத்தனையாவது,

"என் மூச் சொடுங்கும் அந்தக்
கடையிக் கட்டிலும்
நீர் எனக்காக யிருந்த
ரூபமாகக் காண்பியும்

[55]. த.சு.க.சங்.வேத.சா. ப.43

அப்போது நானும்மைப் பார்த்து
கண்ணோக்கி நெஞ்சிலே
அணைத்துக் கொண்டு காத்து
தூங்கட்டும் இயேசுவே"[56]

என்ற பிராத்தனைக் கவியைச் சொல்லி இயேசுநாதர் பாடுபட்ட தியான செபத்தை வாசித்த பின்பு அவருடைய மரணம் பாக்கியமான மரணமாகத் தன் இரட்சகருடைய கையிலே நம்பிக்கையாய் தன் ஆத்துமாவை ஒப்படைத்து, தமது ஓட்டத்தை நிறைவு செய்தார்.

**திருகூடராசப்பக் கவிராயர், வேத நாய சாஸ்திரியார் ஆகியோரது ஒற்றுமைக் கூறுகள்**

இராசப்பரும், சாஸ்திரியாரும் ஒரு குலத்தில் தோன்றிய, ஒரு செடியில் தோன்றிய, இருவேறு மணமுள்ள பூக்கள். இவ்விருவரும் சைவ வேளாளர் மரபைச் சேர்ந்தவர்கள். இவ்விரு கவிஞர்களும் திருநெல்வேலி மாவட்டத்தில் பிறந்தவர்கள்.இவ்விரு கவிஞர்களும் தம் பிறந்த இடத்தை விட்டு வளர்ந்து, வாழ்ந்த இடத்திற்குப் பெருமை சேர்த்துள்ளார்கள். கவிராயர் தாம் பிறந்த ஊரான திருநெல்வேலி மாவட்டம், நாங்குனேரி வட்டம், விஜய நாராயணத்தில் தோன்றி, திருநெல்வேலி மாவட்டம், தென்காசிக்கும் குற்றாலத்திற்கும் இடையிலுள்ள மேலகரம் என்னும் ஊருக்கும், குற்றாலத்திற்கும் பெருமை சேர்த்து மேலகரம் திரிகூட இராசப்பக் கவிராயர் என்று அழைக்கப்படுகிறார். இவரைப் போலவே சாஸ்திரியாரும் திருநெல்வேலி மாவட்டத்தில் பிறந்து, தஞ்சையில் வளர்ந்து, தஞ்சைக்குப் பெருமை சேர்த்து, தஞ்சை வேத நாயக சாஸ்தியார் என்று அழைக்கப்படுகிறார். இவ்விரு கவிஞர்களும் இளவயதில் மிகவும் கஷ்டமான சூழ்நிலையில் வாழ்ந்து, இறைபணியே மேலான பணி என்பதை உணர்ந்து, இறை பக்தியுடையவராக, இறை தொண்டு செய்து இறைவனே இவ்விரு கவிஞர்களுக்கும் காட்சியளித்துள்ளார். இராசப்பருக்கு இறைவன் முனிவர் வடிவில் தோன்றி, நாவில் ஓம் என்ற பிரணவ மந்திரத்தை எழுதி " பூமாலைத்

[56] த.சு.க.சங்.வேத.சா, - வே.சேம், பக். 75 – 76.

தொடுத்து வந்த நீ என் மீது பாமாலைப் பாடுக"[57] என்றும், "சாஸ்திரியாருக்குப் படிக்கும் போது சிலுவைக் காட்சித் தந்து சிலுவையைச் சுமந்து வா! சிலுவையைப் பற்றி வா!"[58] என்று இறையருள் கிடைத்ததாகவும் கூறப்படுகிறது.

இவ்விருவரும் இறையருளால் காப்பற்றப்பட்டிருக்கிறார்கள். இராசப்பரைப் பித்தனென்று பாடுகிறார் என்று அவர் பாட்டுக்குப் பொருளறியாத மக்களும், அதிகாரிகளும் அவரைக் கால் விலங்கிட்டு சித்திரவதை செய்த போது, இறைவன் சொக்கப்பட்டித் சின்னஞ்சத்தேவரிடம் கனவில் தோன்றி இராசப்பரைக் காப்பாற்றும்படியாகச் செய்திருக்கிறார். அதைப்போலவே இறைவன், சாஸ்திரியார் சிறு பிள்ளையாக இருந்த போது வெள்ளரிக்காய் பறிக்கச் சென்ற இடத்தில் கிணற்றுக்குள் விழுந்த சாஸ்திரியார் மூன்று முறை நீரில் முழ்கி பின் இறையருளால் தப்பிக்கும்படி செய்திருக்கிறார்.

இவ்விரு கவிஞர்களும் தாங்கள் இக்கட்டுகளில் இருந்தபோது, இறை வேண்டுதல் செய்தபோது, அற்புதங்களை நிகழ்த்தியுள்ளனர். இராசப்பரின் பெருமையறியாத மக்களும், அதிகாரிகளும் அவரின் கால்களைப்பூட்டி சித்திரவதைப்பண்ணி, 'விலங்குத் தெறிக்கப்பாடு' என்றதும், கவிராயர் இறைவனை வேண்டிப்பாடவும் கால் விலங்கு தெறித்து உடைந்தது' பிறகு 'பச்சை மரம் பட்டுப்போகப் பாடு' என்றதும், கவிராயர் இறைவனை வேண்டிப் பாடினதும், 'பச்சை மரம் பட்டுப்போனது.' இதைக் கண்ட அதிகாரிகள் இவ்வற்புதத்தைக் கண்டு அதிர்ந்தனர். அதைப்போலவே சாஸ்திரியார் யாழ்ப்பாணம் பயணிக்கும்போது வட காற்று வீசாததால் ஓரிடத்தில் தோனி நின்ற நிலையில், கையில் இருந்த பணமெல்லாம் செலவழிந்து போக, சாஸ்திரியார் இறைவனை வேண்டிப் பாடினதும் இறையருளால் வடகாற்று வீசியதும் படகானது யாழ்ப்பாணம் சென்றது. மற்றொரு முறை சாஸ்திரியாருக்கு உணவு தர மறுத்த சத்திரக்காரனின் கை செயலிழந்து போனதாகவும், காலரா நோயினால்

[57] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.18.
[58] . ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.18.

உயிர் பிரியும் நிலையிலிருந்த உபதேசியார், சாஸ்திரியாரின் செபத்தினால் சுகம் பெற்றதாகவும் கூறப்படுகிறது.

இவ்விரு கவிஞருக்கும், பல்வேறு நூல்களைப் படைத்திருந்தாலும், இவ்விரு கவிஞருக்கும், பெரும் புகழைத் தேடித்தந்தது அவரவர் எழுதிய குறவஞ்சி நூல்களே ஆகும். இவ்விரு கவிஞர்களையும் போற்றி மன்னர்கள் பரிசு வழங்கியிருக்கிறார்கள். வாழ்ந்த வீடு மன்னர்கள் கொடுத்த நிலத்திலே இருக்கிறது.

இருபெருங் கவிஞர்களும் தாய்மொழிப் பற்று மிக்கவராகத் திகழ்கின்றனர். முகமதியர் படையெடுப்பாலும், ஆங்கிலேயரின் வருகையினாலும், தாய் மொழிக்குத் தீங்கு வந்திடுமோ என்று சிந்தை கலங்குகின்றார் இராசப்பர். அதைப்போலவே சாஸ்திரியாரும் தாய் மொழியைக் காத்திட, ஆங்கிலத்திலுள்ள வழிபாட்டு முறைகளைத் தாய் மொழியிலே மாற்றிட விரும்பி, பாடல்களையும், வழிபாட்டு முறைகளையும், கீர்த்தனைகளையும் தாய் மொழியிலே படைத்து தமிழின் புகழை உயர்த்துகிறார்.

போன்ற காரணங்களால் இவ்விரு கவிஞர்களும் ஒற்றுமை பெற்று விளங்குகிறார்கள்.

**வேற்றுமைக் கூறுகள்**

இவ்விரு கவிஞர்களும் ஒரு குலத்தில் தோன்றியிருந்தாலும், கவிராயர் சைவ சமயத்தையும், சாஸ்திரியார் கிறிஸ்தவச் சமயத்தையும் புகழ்ந்து பாடியுள்ளனர். கவிராயர் பள்ளிக்குச் சென்றோ, யாரிடமும் கல்வி பயின்றோ அவருக்கு ஞானம் வரவில்லை. மாறாக இறையருள் பெற்று ஞானம் பெற்றுள்ளார்.ஆனால் சாஸ்திரியார் சிறுவயது முதல்கொண்டு முறையாகப் பள்ளி சென்று பாடம் பயின்று, சுவாட்சு ஐயரின் தயவால் மாமன்னர் சரபோசியுடன் சக மாணவராகப் பயிலும் வாய்ப்பைப் பெற்று, இறையருளால் ஞானம் பெற்றார். கவிராயர் பதினைந்து நூல்களைப் படைத்து தமிழுக்குத் தொண்டு செய்துள்ளார்.

சாஸ்திரியார் நூற்றி நாற்பத்தி ஒன்று நூல்களைப் படைத்து தமிழுக்குத் தொண்டு செய்துள்ளார்.

பாண்டிய நாட்டை ஆண்ட விஜயரங்கச் சொக்கநாத நாயக்கரின் விருப்பத்திற்கிணங்க திருக்குற்றாலக் குறவஞ்சி பாடப் பெற்றது. மாமன்னர் சரபோசி சாஸ்திரியார் படைத்த பெத்லகேம் குறவஞ்சியைப் படித்து இன்புற்று, பெதலகேம் குறவஞ்சியைப் போலவே, தஞ்சை பிரகதீஸ்வரர் பெயரில் குறவஞ்சி பாடக் கேட்டுக் கொண்டார். ஆனால் சாஸ்திரியாரோ, இயேசுவைப் பாடிய வாயால், வேறு தெய்வத்தைப் பாடமாட்டேன் என்று மறுத்துவிட்டதாக ஆய்வு மூலம் அறியப்படுகிறது. இவ்வகைக் கருத்துக்கள் கவிராயர், சாஸ்திரியாரிடையே உள்ள வேற்றுமைக் கூறுகளாக அறியப்படுகிறது.

## தொகுப்புரை

- தமிழ் மொழியில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள் முதல் என இலக்கியங்கள் என்ற சொல்லால் குறிக்கப் பட்டமையால் அந்தாதி, சதகம், பிள்ளைத் தமிழ், பரணி போன்ற இலக்கியங்கள் எழுந்த காலத்தில் அவற்றைக் குறிக்கப் பிரபந்தம் என்ற சொல் பயன்படுத்தப் பட்டது என்றும், பிரபந்தம் என்ற சொல் இலக்கியம் என்ற பொருள் உணர்ச்சியின் விளைவாக அந்தாதி முதலியவற்றைச் நிறுவனங்கள் என்றும் அடுத்து வழங்கும் வழக்கம் ஏற்பட்டது என்றும், தனித்தமிழாட்சி வளர்ச்சியுற்ற காலத்தில் சிறுவர்கள் சிறு பிரபந்தங்கள் என்று குறிக்கப்பட்டது. அந்தாதி முதலியவற்றைச் சிற்றிலக்கியம் என்று கூறும் வழக்கம் ஏற்பட்டது.

- சிற்றிலக்கியங்கள் மூலம் தமிழ்ப் பண்பாட்டின் வாயிலாகத் தமிழக வரலாற்றினை அறிய முடிகின்றது. கற்பனை ஆற்றலை பெறுவதில் சிற்றிலக்கியங்கள் முதன்மை பெறுகின்றன. அவற்றுள் சிறப்பு உடையவனாகத் திகழும் நூல்களாக ஆற்றுப்படை, அந்தாதி, மாலை, பதிகம் கோவை, உலா, பரணி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், தூது, சதகம், மடல், பள்ளு, குறவஞ்சி என்னும் 64 இலக்கிய வகைகளும் தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் திகழ்கின்றன.

- குறவஞ்சி இலக்கிய வகைகளுக்கான கரு வகைகள் தொல்காப்பியத்திலும் காணப்பட்டுள்ளன. இந்நூல் வழியாகக் குறத்தி குறிசொல்லுதல், குறத்தி, குறவன் உரையாடுதல், குறத்தியின் செயல்கள் குறி வகைகள் குலத்தின் பெயரால் வெளிப்படுகின்ற இலக்கியச் செறிவு கொண்டுள்ளன. இதனடிப்படையில் திருக்குற்றாலக் குறவஞ்சி எழுதிய திரிகூடராசப்பக் கவிராயர், பெத்தலகேம் குறவஞ்சி எழுதிய தஞ்சை வேதநாயக சாஸ்திரி அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள்.

- 18 ஆம் நூற்றாண்டில் முத்தமிழில் வல்ல மும்மணிகளாகத் திகழ்ந்தவர்கள் திரிகூடராசப்பக் கவிராயர், செங்கோட்டை கவிராச பண்டாரம், பாபநாசம் நமச்சிவராயக் கவிராயர் ஆகியோராவர். திரிகூடராசப்பக் கவிராயர் திருநெல்வேலி மாவட்டம், நாங்குனேரி வட்டத்திலுள்ள விஜய நாராயணத்தில் பிறந்தவர். இவர் சைவ வேளாளர் குலத்தில் தோன்றினார். சிறுவயது முதலே வறுமையாலும், குடும்பச்சூழலாலும் நலிவடைந்த ராசப்பர், இயற்கையாகவே இறையுணர்வு மிக்கவராகத் திகழ்ந்தார். இறைபணியே மேலான பணி என்பதை உணர்ந்த கவிராயர், சமயக் குரவர்களின் வாழ்க்கையைப் பின்பற்றிக் கோயில் சொத்தைச் சார்ந்திருந்து, கொத்தடிமையாகப் பணிபுரிந்து வந்தார்.

- இறைவனது அருளால் பாடிய கவிராயரின் இசைப்பாடலில் மயங்கிய, நல்ல பாம்பு ஒன்று படம் விரித்து ஆட, அப்பாம்பின் படத்தில் குத்தியிருந்த முள்ளினை திரிகூட ராசப்பக் கவிராயர் தம் கையில் எடுத்துப் பாம்பின் துன்பத்தைப் போக்கினார். துன்பம் நீங்கிய பாம்பு, கவிஞருக்கும் கவிஞர் குடும்பத்தினருக்கும் பாம்புகளால் என்றும் தீங்கு வராது என்று அருள் புரிந்ததாகவும் சொல்லப்படுகிறது. இளமையிலேயே, யமகம், திரிபு, சிலேடை முதலிய வகைகளில் பாடல்களைப் பாடியுள்ளார். பிள்ளைத்தமிழ், அந்தாதி, உலா, கோவை, சிலேடை வெண்பா, தல புராணம், குறவஞ்சி, ஊடல் ஆகிய சிற்றிலக்கியங்களை இறைவன் மீதே பாடியிருக்கின்றார்.

- திருநெல்வேலியில் 1735 ஆம் ஆண்டு, வேதநாயக சாஸ்திரியாரின் தகப்பனார் தேவசகாயம் பிள்ளை பிறந்தார். இவரது தந்தையார் திரு. ஐயம்பெருமாள் பிள்ளை, இந்து மார்க்கத்திலிருந்தபோது இவரை அருணாச்சலம் என்று பெயரிட்டு அழைத்தார். வேத நாயக சாஸ்திரியார் 1774 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம் 7 ஆம் நாள் செவ்வாய்க் கிழமை அன்று திருநெல்வேலி நகர் புட்டாரத்தி வீதியில் வாழ்ந்து வந்த தேவசகாயம் பிள்ளை, ஞானப்பூ அம்மாள் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார்.

- இந்து சமயத்தவரான அருணாச்சலம் பிள்ளை தமது 25 ஆம் வயதில் கத்தோலிக்கக் கிறிஸ்தவராக மாறி, 1760 ஆம் ஆண்டு வேத போதகம் என்ற கிறிஸ்தவக் குருவிடம் தேவ சகாயம் என்ற பெயரால் திருமுழுக்குப் பெற்றார். தேவசகாயம் பிள்ளை தம் மகனான வேத நாயக சாத்திரியாருக்குத் திருமுழுக்கின்போது 'வேதபோதகம்' என்ற பெயரினை வைத்தார். வேதபோதகம் என்பது தேவசகாயம் பிள்ளைக்குக் கிறிஸ்தவ உபதேசம் வழங்கிய குருவின் பெயராக இருப்பதால், தேவசகாயம் பிள்ளை தம் மகனை வேத போதகம் என்று அழைக்காமல் வேதநாயகம் என்று அழைத்தார்.

- சாஸ்தியார் ஒன்பதாவது வயதில் சக மாணவர்களுடன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒர் ஆள் உயரமான சிலுவைக் காட்சியை சுமார் பன்னிரெண்டு நிமிடம் கண்டு வியப்புற்றார். அச்சிலுவை வானில் வலது பக்கமாக மெதுவாகக் கடந்து போயிற்று.

- சாஸ்திரியார் 1811 ஆம் ஆண்டு தமது குடும்பத்துடன் யாழ்ப்பாணம் சென்றபோது, வட காற்று சரியாக வீசாததால் ஒரு வாரம் தோனி ஓடாமல் தடை பட்டு ஒரு கரையில் நின்றது. சாஸ்திரியாரின் கையில் இருந்த பணமெல்லாம் செலவாயிற்று. அதனால் மனம் வருந்திய சாஸ்திரியார் வட திசை நோக்கி ஒரு பாடல் பாடினார். 'வடகாத் தருள்திரி யேகா என்பங்கில் வளர்ந்தவனே' என்று சாச்திரியார் பாடிக் கொண்டிருக்கும்போதே வடகாற்று வீசத் தொடங்கியது. சாஸ்திரியார் படைத்த நூல்கள் மொத்தம் 141 என்று அட்டவணைப் படுத்தியுள்ளார்.

- இராசப்பரும், சாஸ்திரியாரும் ஒரு குலத்தில் தோன்றிய சைவ வேளாளர் மரபைச் சேர்ந்தவர்கள். இவ்விரு கவிஞர்களும் திருநெல்வேலி மாவட்டத்தில் பிறந்தவர்கள்.இவ்விரு கவிஞர்களும் தம் பிறந்த இடத்தை விட்டு வளர்ந்து, வாழ்ந்த இடத்திற்குப் பெருமை சேர்த்துள்ளார்கள். இவ்விரு கவிஞர்களும் தாங்கள் இக்கட்டுகளில் இருந்தபோது, இறை வேண்டுதல் செய்தபோது,

அற்புதங்களை நிகழ்த்தியுள்ளனர். இவ்விரு கவிஞருக்கும், பல்வேறு நூல்களைப் படைத்திருந்தாலும், இவ்விரு கவிஞருக்கும், பெரும் புகழைத் தேடித்தந்தது அவரவர் எழுதிய குறவஞ்சி நூல்களே ஆகும்.

## சான்றெண் விளக்கம்

1 . நா.வி.ஜெயராமன் ., பாட்டியல் எனும் இலக்கிய வகைகளும், ப.3.

2 . க.பா.அறவாணன், கவிதையின் உயிர் உள்ளம் உடல், ப. 6.

3 . நாவாய் பன்னோக்கு ஆய்வுக் கட்டுரை, ப. 55.

4 . நா.வி. ஜெயராமன்,பாட்டிகளும் இலக்கிய வகைகளும், ப.12.

5 . தா.ஈஸ்வர பிள்ளை, தமிழில் சிற்றிலக்கிய வரலாறு முதற்பகுதி, ப. 18.

6. தமிழ் பேரகராதி, ப. 244.

7 . தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 76.

8 . வெண்பாப்பாட்டியல் நூ.23 ப. 18.

9 . தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 261.

10. தொல்-களவியல் நூற்பா எண் : 25 ப. 19.

11. பன்னிரு பாட்டியல் - 217 ப. 113.

12. டாக்டர். குமார பத்மநாபன், திரிகூட ராசப்பக் கவிராயர் - ஓர் இலக்கிய நோக்கு, ப.9.

13. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.12.

14. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.12.

15. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.36.

16. உ.வே.சாமிநாதர் அய்யர் (பதிப்பு) திருக்குற்றால சிலேடை வெண்பா, ப.4.

17. உ.வே.சாமிநாதர் அய்யர் (பதிப்பு) திருக்குற்றால சிலேடை வெண்பா, ப.6.

18. திருக்குற்றால மாலை கோயில் வெளியீடு, பாடல், 100. ப.19.

19. மேலகரம் பண்டாரக் கவிராயர், திருவிலஞ்சி முருகன் உலா, உ.வே.சா, பதிப்பு ப.5.

20. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.11.

21. திரிகூட ராசப்பக் கவிராயர், பாடல்.93. ப.21.

22. முனைவர். கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தல வரலாறு, ப.119.
23. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.113.
24. திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.
25. திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.
26. திரிகூட ராசப்பக் கவிராயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா. ப.11.
27. யமக அந்தாதி, பா.எண். 95 ப.29.
28. திருக் குற்றால நாதர் உலா, பா.எண். 54-56 பக்.23-24.
29. உ.வே.சாமிநாதர் ஐயர், திருக்குற்றாலச் சிலேடை வெண்பா, ப.16
30. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.20.
31. நீதிபதி மகராஜன், ஆடத் தெரியாத கடவுள், ப.28.
32. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.13.
33. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.23.
34. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள் திரிகூட ராசப்பக் கவிராயர், ப.23.
35. பாகவதர் வேதநாயகம் சாஸ்திரியார், Youtube, face to face நேர்காணல்.
36. என்றி பவர், கிறைஸ்து மார்க்கம் இந்து தேசத்தில் விருத்தியான சரித்திரம், ப.295.
37. Paul Appa Samy, The centenary History of the C.M.S. in Tinnelvelly, p. 13.
38. Caldwell, Early History of Tinnevelly Mission, P.336.
39. Caldwell, Early History of Tinnevelly Mission, P.337.
40. வே.சா.ஞா.நொ.நா.கா.3. ப.15.
41. வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார், ப.14.
42. டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 2- 3.
43. த.ம.வேத நாயக சாஸ்திரி, ப. 18.

44. வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார், பக்.14-15.

45. வே.சா.ச.கு.766. ப.29.

46. டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், ப.13.

47. த.சு.க.சங்.வேத.சா. ப.23.

48. வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார். ப.20.

49. டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 24 – 25.

50. டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், பக். 34-35.

51. த.ம.வேத நாயக சாஸ்திரி, ப.57.

52. டி.டபிள்யூ. தே. வேதநாயக சாஸ்திரியார், ப.188.

53. த. ம. வேத நாயக சாஸ்திரி, பக். 67.

54. வி.நோ.ஞா.வேதநாயக சாஸ்திரியார். ப. 24.

55. த.சு.க.சங்.வேத.சா. ப.43

56. த.சு.க.சங்.வேத.சா, - வே.சேம், பக். 75 – 76.

57. ஆ. முத்தையா, இந்திய இலக்கியச் சிற்பிகள்
திரிகூட ராசப்பக் கவிராயர், ப.18.

58. மேலது. ப.18.

# இயல் – 2

## பாத்திரப் படைப்பு

இலக்கியங்களும் முதன்மையான உறுப்பாகக் காப்பியம், நாடகம், புதினங்களில் பாத்திரங்கள் எனப்படும் கதைமாந்தர் கதையின் வீரியத்தை வெளிப்படுத்துகின்ற விதமாக அமைகின்றன. சமுதாயத்தில் வாழும் மனிதர்களே பாத்திரங்களாக உருவாக்கம் செய்யப்பட்டுப் பாத்திரங்களின் வழியாக ஆசிரியர்கள் தன் விருப்பப்படி மெருகூட்டி அமைக்கின்றனர். இதன் வாயிலாக நாடகம் போன்ற இலக்கிய வகைகளில் கரு, பின்னல், காலப் பின்னணி, மொழி, நடை போன்ற கூறுகளை தாங்கி வெளிப்படுத்தி நிற்கின்றன. ஒவ்வொரு படைப்பாளிக்கும் தான் படைக்கின்ற படைப்புகளில் பாத்திரப்படைப்பு வெளிப்படுத்துகிற பாங்கு தனித்தன்மை ஆகும். படைப்பாசிரியர் நாடகத்தின் பாத்திரத்தின் தன்மையினை ஓவியனின் புனையா ஓவியம் போல உருவாக்கிக் கொள்கிறான். பின்னர் ஓவியன் தன் ஓவியத்திற்கு வண்ணம் பூசி அழகுபடுத்துவது போல அவன் தன் கதாபாத்திரங்களை உருவாக்கி கொள்கிறான். பாத்திரப் படைப்பில் உயிருள்ள பாத்திரப்படைப்பு சில பொதுமைக் கூறுகள் உண்டு. அதைப் படைப்பாளியின் படைப்பில் கையாளும் முறை வைத்து அறியப்படுகின்றது.

பாத்திரப் படைப்பு என்பது படைப்பாளியின் உணர்வின் வெளிப்பாடே ஆகும். பாத்திரப்படைப்பு எந்த அளவிற்குப் படைப்பாளியின் புல் உணர்வுகளோடு உறவாடி வெளிப்படுகிறது. அந்தப் பாத்திரப்படைப்பு காட்சிகளும் பாத்திரப் படைப்பில் காவியம், சிறுகதை, நாடகம் போன்றவற்றில் ஒவ்வொன்றிற்கும் பாத்திரப்படைப்பு வேறுபாடுகள் உள்ளன. பொருளால் வேறுபட்டும் சூழலால் வேறுபட்டும் பாத்திரப்படைப்பு வெளிப்பட்டு நிற்கும். இதன் அடிப்படையில் திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சியில் இடம் பெற்றுள்ள பாத்திரப் படைப்புக்களின் வெளிப்பாடுகளை ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

பாத்திரப் படைப்பின் பொதுமையான கூறுகள் பெயர், அமைதி, புறத்தோற்றம், மன உணர்வுகள், பேச்சு, செயல்கள், மற்றவர்களோடு நடந்துகொள்ளும் முறை, தனித்திருக்கும்போது நடந்துகொள்ளும் முறை, குடும்பச்சூழல், தொழில்களைச் சூழல், பாத்திரத்தின் கடந்த கால நிலை எனப்

பாத்திரத்தின் முக்கியக் கூறுகளாக அமைகின்றன. பாத்திரத்தின் வகைகளைத் திறனாய்வாளர்கள் பலவாறாக பகுத்துள்ளனர். பாத்திரப் படைப்பு என்பது தனி மனிதப் பண்புகள் மற்றும் அப்பண்புகளின் அடிப்படையில் அவர்கள் செய்யும் செயல்களைக் கொண்டு படைப்பில் பயன்படுத்திக்கொள்ள முடியும். அதனடிப்படையில் குறவஞ்சி நாடகத்தில் பாத்திரங்களின் வழியாகப் நாடகப் பாங்கினை நடத்திச் செல்வதை அறியமுடிகிறது. சமுதாய மேம்பாட்டை நோக்கமாகக் கொண்ட படைப்பாளிகள் இவ்வுயர் பண்பைத் தம் பாத்திரங்கள் வாயிலாக வெளிப்படுத்துகின்றனர். மரமும், கிளையும் போலத் தனி மனித வாழ்க்கையும், சமுதாயமும் பின்னிப்பிணைந்துள்ளபான்மை பாத்திரங்களாக உருப்பெருகின்றன. இதன் வழியாகதான் சொல்ல வந்த செய்தியை விளக்கமாக எடுத்துரைக்க முடிகின்றது.

மேலை இலக்கியச் சொல்லகராதி, 'பாத்திரமும் பாத்திரப் படைப்பும்' (character and characterisation) என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறது, "திறனாய்வுக் கலைகள் தொகுதியில் பாத்திரம் ஒரு முக்கியமான சொல் ஆகும். கற்பனையால் தோற்றுவிக்கப்பட்ட ஒரு மாந்தரை, இச்சொல் குறிக்கும் பாத்திரப் படைப்பு என்பது இத்தகைய பாத்திரம் ஒன்றில் தோற்றம், இயல்புகளை, விளக்கமாகத் தெரியும்படி விழிப்புணர்வு நாடகம் அல்லது கதை வடிவான நூலில் இடம்பெறும் மாந்தரே பாத்திரங்கள் ஆவார்கள். அவர்களின் உரையாடலில் வழியாகவும், செயல்கள் மூலமாகவும் அவர்கள் பெற்றுள்ள ஒழுக்கநெறி மனப்பாங்கும் வெளிப்படுகின்றன. பாத்திரம் ஒன்று நூலின் தொடக்கத்தில் இருந்து முடிவு வரை நிலைத் தன்மை மாறாமல் செயலாற்றச் செய்யலாம் அல்லது புரட்சிகரமான மாற்றத்துக்கு உட்படலாம். ஆனால், இவ்விரு நிலைகளும் அதன் தன்மை ஒரே அமைதல் வேண்டும்."[59] பாத்திரப் படைப்பு என்பது பெயர் சூட்டுவதோ அல்லது அங்க வருணனை செய்வதால் அமைந்ததோ அல்ல. மனம், அறிவு, சிந்தனை, குணவியல்பு இவற்றை எல்லாம் கூர்ந்து அறிந்து வெளிப்படுத்த வேண்டும். பாத்திரப் படைப்பு என்பது கதைக் கருவுக்கு உயிர் தரக் கூடியது. "கருவைக் காட்டிலும் சிறப்பு வாய்ந்தது கருவுக்கு பொருண்மையும் உயிரையும் தரக்கூடியது பாத்திரப் படைப்புதான்."[60] என்று டாக்டர் மு.வரதராசன்

---

[59] . வை.சச்சிதானந்தம், மேலை இலக்கியச் சொல்லகராதி, ப.29.

[60] . டாக்டர் மு.வரதராசன், நாவல்கள், ப. 57.

விளக்கியுள்ளார். “கதைத் திட்டத்தை எலும்புக் கூடு என்றால் பாத்திரப் படைப்பை உயிரையும் உணர்ச்சியையும் மொழியையும் தருவது எனக் கருதலாம்.”[61] என்று ந.பிச்சமூர்த்தி விளக்கியுள்ளார். ”பாத்திரம் கதைக்கோப்பையே உருவாக்குகிறது. கதைக்கோப்பு, பாத்திரத்தின் விளைவாகவும் அதைச் சார்ந்ததுமாகவே அமைகிறது”[62] என்று அறிஞர் ஆர்சர் விளக்குவார் என அகிலன் குறிப்பிடுகிறார்.

**குறவஞ்சி நாடக இலக்கியம்**

தமிழ் மொழியில் முதன் முதலாகக் கிடைக்கப் பெற்ற நாடக நூல்கள் பள்ளு நாடகம், குறவஞ்சி நாடகம், நொண்டி நாடகம் ஆகும். இதில் பள்ளு நாடகம் குறவஞ்சிக்கு முன்னரும், நொண்டி நாடகம் குறவஞ்சிக்குப் பின்னரும் தோன்றிய நூல்களாகக் கருதப்படுகின்றன. குறவஞ்சி நாடக வகையைச் சார்ந்த இலக்கியம் என்பதை,

“செழித்த குறவஞ்சி நாடகத்தைப் பாட”[63] (தி.குற்.குற.பா.5)

“குறவஞ்சி நாடகத்திற்கருள் கணபதி வந்தார்”[64] (சர.குற.பா.5)

“குறவஞ்சி நாடகம் தமிழில் வணங்கிப்பாட”[65] (சோலை.குற.பா.5)

என்று வரும் பல்வேறு குறவஞ்சி பாடல் வரிகள் குறவஞ்சி உறுதிப்படுத்துகின்றன.

**கோவில் விழாக்களில் அரங்கேறிய குறவஞ்சி நாடகங்கள்**

"நாடகம் என்பது எல்லா நாட்டிலும் ஒரு தெய்வத் தொடர்புடைய இலக்கியமாகக் கருதப்படுகிறது."[66] தெய்வத்தோடு தொடர்புடைய நாலகமாக இருந்தாலும் குறிப்பிட்ட ஒரு சில நாடுகளில் முகுந்தும் மக்களிடம் புலக்கத்திலும்

---

[61] ந. பிச்சமூர்த்தி, தமிழ் இலக்கியக்கொள்கை, ப. 13.
[62] . அகிலன், கதைக்கலை, ப. 4.
[63] . தி.குற்.குற.பா.5. ப.9.
[64] . சர.குற.பா.5 ப.9.
[65] . சோலை.குற.பா 5. ப.9.
[66] . கலைக்களஞ்சியம், தொகுதி. 6.ப.352.

காணப்பட்டன. அந்நாடுகளுள், "கிரேக்கம், ரோமன், ஆங்கிலம், பிரெஞ்சு, சீனம் என எந்த மொழியாக இருப்பினும் நாடகத்தின் தொடக்கம் சமயத் தொடர்புடையதாகவே அமைந்துள்ளது."[67]

குறவஞ்சி, கோவில்களில் நடிக்கப் பெற்று வந்துள்ளதென ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், திருக்குற்றாலக் குறவஞ்சி பற்றிய அவரின் ஆங்கிலக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். மேலும் குறவஞ்சி இலக்கியம் சிறந்த நாட்டிய நாடகம் என்றும், நவராத்திரி விழாவின்போது நடிக்கப் பெற்று வந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கருத்தை வழியுருத்தும் விதமாக "தஞ்சை வேதநாயக சாஸ்திரியார், திரிகூடராசப்பக் கவிராயர் எழுதிய குற்றாலக் குறவஞ்சி என்ற நாடக நூல், தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில் நவராத்திரியன்று நடத்தப்பட்டது என்றும், இதனை அறிந்த சாத்திரியார் அந்நூலைத் தழுவி பெத்லகேம் குறவஞ்சி என்னும் நூலைத் தம் இருபத்தைந்தாம் வயதில் 1800 ஆம் ஆண்டு எழுதினார்."[68] என்றும் புலவர் அறிவர் தமிழ்மாமணி சே.சுந்தரராசன் எழுதிய, தஞ்சை வேதநாயக சாத்திரியார் பெத்லகேம் குறவஞ்சி உரையுடன் என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம், தஞ்சைப் பெருவுடையார்கோவிலில் திருவிழாக் காலங்களில் நடிக்கப்பட்டு வந்துள்ளது. "அஷ்டக் கொடி விழாக் காலத்தில் ஆடப்படுவதாதலின் அஷ்டக்கொடி குறவஞ்சி எனவும் இது வழங்கப்படுகிறது"[69] என்று அக்குறவஞ்சியைப் படைத்த உ.வே.சா. குறிப்பிடுகின்றார்.

கும்பேசர் குறவஞ்சி நாடகத்தைக் கும்பகோணத்திலிருந்த கோப்பு நடராஜ செட்டியார் நாட்டியக்காரர்களைக் கொண்டு மாசிமகத் திருவிழாவின்போது மிகச் சிறப்பாக நடைபெறச் செய்தார் என்பதனை,

"அவனிபுகழ் முத்தமிழ்க் கவிராச சேகரன் அருள்பாய நாசநேசன்
ஆதிகும் பேசர் குறவஞ்சி நாடகம் அன்புட னுரைத்து வைத்தான்

---

[67] . Buckner B. Trawick, World Literature, P.60, 154, 175.
[68] . சே.சுந்தரராசன் , பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.3.
[69] . உ.வே.சா, ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், 'குறவஞ்சி நாடக நூன்முகம்,' ப.280.

கவனமுட னிதையெடுத்தி யாவருங் கண்டுகண் களிகூர வரிய பரதக்
கருவியோ ராற்பாடி யாடல்புரி வித்தனன் கருணைமிகு பேட்டை நகர்வாழ்
குவளைமலர் மாலையணி மார்பன்வர தன்தந்த குபேரன் பயந்த மேருக்
கொண்டல் கோப்புக் குமர பூபனருள் செல்வக் குமாரன் மன்னவர் வசீரன்
நவரச மிகுசற்ச வசனநிச தருமநிலை நாட்டினோ னீட்டு புகழோன்
நற்கருணை யாளன்மிகு சொற் புலவ ருக்குதவ நடராச மகிபாலன்”[70]

(கும்.குற.பா.1)

என்னும் பாயிரச் செய்யுளால் நாம் அறியலாம். "தியாகேசர் குறவஞ்சியினைப் பதிப்பித்த வே. பிரேமலாதாவும் அக்குறவஞ்சியும் ‘திருவாரூரில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஆலயத்தின் கீழைக் கோபுரத்திற்கு அருகிலுள்ள தேவாசிரிய மண்டபத்தில் பங்குனி மாதத்தில் நிகழும் பிரம்மோற்சவத்தின்போது நடத்தப்பட்டு வந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்."[71]

**திருக்குற்றாலக் குறவஞ்சி மற்றும் பெத்லகேம் குறவஞ்சி நாடக அமைப்பு**

உரைநடையில் நாடகம் அமைவதைவிடச் செய்யுள் வடிவில் அமைவதே சிறப்புடையதாகும். ‘எலியத்’ என்ற அறிஞரும் செய்யுள் வடிவில் நாடகம் அமைதல் போற்றத்தக்கது என்கின்றார். இக்கருத்திற்கேற்ப குறவஞ்சி நாடகமும் செய்யுள் வடிவிலே கவினுற அமைந்துள்ளதை அறிய முடிகிறது. நாடக நூல்களில் உணர்ச்சிக்கும், உணர்வுகள் நிரம்பிய மெய்ப்பாடுகளுக்குமே முதலிடமாகையால் உணர்வையும், மெய்ப்பாடுகளையும் நன்முறையில் வெளிப்படுத்த வல்ல செய்யுள் வடிவ நாடகமாக விளங்குகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சி பெத்லகேம் குறவஞ்சி நாடகத்தில் போராட்டமும் சிக்கலும்**

போராட்டமும், சிக்கலும் இல்லாமல் அமைந்த நாடகமோ, புதினமோ வெற்றிபெற முடியாது. புகழ்பெற்ற சேக்சுபியரின் நாடகங்களின் வெற்றிக்குக் காரணம் அவரின் நாடக மாந்தர்களிடையே ஏற்படும் போராட்டங்களும்

---

[70] . கும்.குற.பா.1 ப.9.

[71] . வே. பிரேமலதா (பதிப்), தியாகேசர் குறவஞ்சி முன்னுரை, பக். 33 – 34.

சிக்கல்களுமே ஆகும். அவை காண்பவர்களைக் கவர்ந்திழுக்கும் காந்தம் போன்றது. காண்பவர்களின் வேட்கையை வளர்த்தல் நாடகத்தின் வெற்றிக்கும் சிறப்புக்கும் அரணாகும். குறவஞ்சி நாடகத்தில் மிகப்பெரிய போராட்டங்களும், சிக்கல்களும் உருவாக்கப்படவில்லை என்றாலும், இறைவன்மீது காதல் கொண்ட தலைவியின் உள்ளப் போராட்டத்தையும்; தலைவியின் காதல் நோயினைப் போக்க பாடாய்படும் தோழியரின் மனப் போராட்டத்தையும்; குறத்தி குறி சொல்லும்போது தலைவிக்கு ஏற்படும் உளவியல் போராட்டத்தையும்; குறத்தியைத் தேடியலையும் சிங்கனின் மனப்போராட்டத்தையும் நிரல்படக் கூறியிருக்கின்ற முறை "வேட்கையை வளர்த்தல்" என்னும் நாடக உத்தியைப் பின்பற்றியதாலேயாகும்.

**திருக்குற்றாலக் குறவஞ்சி பெத்லகேம் குறவஞ்சி - நாடக இணைவும் முரணும்**

நாடகத்தின் சிறப்பிற்கு இணைவு என்னும் பண்பும், முரண் என்னும் பண்பும் அமைதல் வேண்டும். இணைவு என்னும் பண்பு நாடகத்தின் மையமான ஒரு நிகழ்ச்சியோடு அது போன்று மற்றொரு நிகழ்ச்சியும் அமைவதாகும். உதாரணமாக, மனோன்மணியம் என்னும் நாடகத்தில் மனோன்மணி காதலிப்பதுபோல, வாணி எனும் தோழியும் காதலிக்கின்றாள். இவ்விரு குறவஞ்சிகளிலும் வரும் தலைவித் தலைவனைக் காதலிப்பதுபோலவே, சிங்கன் சிங்கியைக் காதலிப்பதும் கூறப்படுகிறது. முரண் என்பது தலைவனுக்கு மாறான பண்புடைய கதை மாந்தரைப் படைத்தலாகும். குற்றாலக் குறவஞ்சி மற்றும் பெத்லகேம் குறவஞ்சியின் நெடிதுயர்ந்தப் பண்பாடு மிக்கத் தலைவனாக இறைவன் படைக்கப் பட்டுள்ளமையும், எளிய முறையில் சிங்கன் படைக்கப்பட்டுள்ளமையும் முரண் என்னும் நாடகப் பண்புகளுக்குச் சான்றாகும்.

**பாத்திரப் படைப்பு**

பாத்திரப் படைப்பு என்பது வெற்றி என்பது பெயர் சூட்டி விடுவதாலோ, வருணனை நடத்திவிடுவதாலோ அமைவது அல்ல. மனம், அறிவு, சிந்தனை, குணவியல்பு, சூழ்நிலையின்போது வெளிப்படும் உணர்ச்சிகள்

இவற்றையெல்லாம் கூர்ந்து அறிந்து அனுமவமாக வெளிப்படுவதைக் காட்டுவதாகும். கதைத் திட்டத்தை எலுப்புக்கூடு என்றால், அக்கூட்டிற்கு உயிரையும், பொழிவையும் தருவது பாத்திரப் படைப்பாகும். பாத்திரங்கள் நடைமுறை வாழ்க்கையில் காணக்கூடியவர்கள்தான் என்றாலும், அவருள்ளும் சிறந்தவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களிடமுள்ள சிறப்பம்சங்களை காண்பவர் மனதில் பதியுமாறு சிறப்பித்துக் காட்ட வேண்டும். படிப்பவரின் மனதையும், பார்ப்பவனுடைய மனதையும் புரட்டிப் போட்டு அவன் மனதில் நீங்காது நிலைத்து நிற்கும் படியாக விளங்குவது பாத்திரப் படைப்பு ஆகும்.

ஒரு நாடகத்தின் சிறப்பு அந்நாடகத்தில் படைக்கப்பட்டுள்ள கதை மாந்தர்களின் பண்பு நலன்களைப் பொறுத்தே அமையும். அந்த வகையில் குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சியின் கதை மாந்தர்களாக வரும் அனைவரும் தலைசிறந்த பாத்திரப் படைப்புகளாக இருப்பதே நாடக ஆசிரியர்களுக்குக் கிடைத்த வெற்றியாகும். ஆகவேதான் இக்குறவஞ்சிகள் சிற்றிலக்கியத்தில் தலைசிறந்த இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றது.

**பாத்திரப் படைப்பும் உரையாடல் சிறப்பும்**

பாத்திரப் படைப்புகளில் இன்றியமையாதது யாதெனில் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் பிரிதொரு மாந்தராலே விளக்கம் பெறுதல் வேண்டும். பாத்திரங்கள் ஆசிரியர் கூற்றுகளால் அமைவது சிறப்புடையதாகாது. அந்த வகையில் இவ்விரு குறவஞ்சிகளிலும் ஆசிரியர்கள் தலைவியின் பேரழகைக் குறத்தி வாயிலாகவும், குறத்தியின் எழிலைத் தலைவி வாயிலாகவும் புலப்படுத்தும் திறன் போற்றத்தக்கது. இத்தகு படைப்புகளால் ஆசிரியர்களின் நாடகப் புலமை புலனாகிறது. நாடக நூலின் தனிச்சிறப்பே கற்றோரே அல்லாமல் மற்றோரும் கேட்டு இன்புறத் தகுந்த முறையில் இருப்பதாகும். மானிட சமுதாயத்தில் பேசப்படும் கொச்சைச் சொற்களையும் இடையிடையே பயன்படுத்திக் கூறுவது நாடகப் பாத்திரத்திற்கு அணி சேர்ப்பதாக அமைகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சி பாத்திரப் படைப்பு**

திருக்குற்றாலக் குறவஞ்சிக் கதைப் பகுதியில் குற்றாலத்து நாதர் பவனி வருவதை கட்டியங்காரன் முன்கூட்டியே அறிவிக்கின்றான். பிறகு ஈசன் பவனி வருவதைப் பற்றிப் பாடுகிறான். ஈசன் பவனியைக் காண பருவப் பெண்கள் வருகின்றனர். ஈசனைப் போதிக்கின்றனர். அப்போது வசந்தவல்லி வருகிறாள். வசந்தவல்லியின் மேனியழகு வருணிக்கப்படுகிறது. பிறகு வசந்தவல்லி பந்து பயிலும் காட்சி காட்டப்படுகிறது.

பந்து விளையாட்டு முடிந்ததும், வசந்தவல்லி திரிகூடநாதரைக் காண்கிறாள். அப்போது, தோழியர் ஈசனைப் பற்றி வசந்தவல்லியிடம் கூறவே, ஈசன்மீது வசந்தவல்லி மோகம் கொள்கிறாள். பிறகு 'ஈசனிடம் மனதைப் பறிகொடுக்கிறாள்'. இச்செய்திக் கண்டு தோழியர் புலம்புகின்றனர். வசந்தவல்லியைத் தேற்றும் தோழிமார்கள் அவளின் இந்நிலை கண்டு வருந்துகின்றனர். வசந்தவல்லி நிலாவினை ஏசுகின்றாள்; மன்மதனையும் நிந்திக்கிறாள். வசந்தவல்லியின் இந்நிலைகண்டு தோழியொருத்திக் காரணம் வினவுகிறாள்; அவளுக்கு விடை கூறுகிறாள் வசந்தவல்லி. தோழி வசந்தவல்லியைப் பழிக்கிறாள். 'விடையில் ஏறுபவர்மீதா மோகம்?' என்று எள்ளி நகையாடுகிறாள் தோழி. வசந்தவல்லியோ திரிகூடநாதரைப் புகழ்ந்து பாடுகிறாள். பாங்கி என்று அழைக்கும் தோழி, உனக்கும் ஈசனுக்கும் உள்ள தொடர்புக்கு என்ன நியாயம் இருக்கிறது? என்று கேட்கிறாள்.

அப்போது வசந்தவல்லி, ஈசன் தனது மோகத்தைத் தணிக்காமல் இருப்பதைக் குறிப்பிட்டு வருந்துகிறாள். அப்போது தோழி வசந்தவல்லிக்குப் புத்திமதி கூறுகிறாள். வசந்தவல்லி, தோழியைத் தூது அனுப்புகிறாள். தூது சொல்லும் நேரத்தை விளக்கும் முகந்தான், தோழிக்குத் திரிகூடரின் சமயத்தை விளக்குகிறாள் வசந்தவல்லி. பிறகு கூடல் இழைக்கிறாள்.

இந்தச் சூழ்நிலையில்தான் குறத்தி வருகிறாள். வசந்தவல்லி , குறத்தியிடம், உனது மலை, நாடு, நகர் வளத்தைக் கூறு என்று கேட்கிறாள். குறத்தி தனது

மலை வளத்தையும், நாட்டு வளத்தையும், நகர் வளத்தையும் பாடுகிறாள். பிறகு குறத்தி திரிகூடம் எனும் தலத்தின் பெருமைகளையும் பாடுகிறாள். திரிகூடநாதரின் சுற்றம் பற்றியும் குறத்தியிடம் வினவுகிறாள் வசந்தவல்லி. அதனையும் விளக்குகிறாள் குறவஞ்சி. பிறகு, வசந்தவல்லி குறத்தியிடம் குறி பார்த்தலின் சிறப்பை வினவுகிறாள். குறத்தியும் விளக்குகிறாள். குறத்தியிடம், வசந்தவல்லி குறி கேட்கிறாள்; குறத்தி குறி தொடங்கும்முன் தெய்வத்தை வணங்குகிறாள். குறத்தி குறி கூறுகிறாள்; குறி கூறும்போதே வசந்தவல்லி இடை மடக்கிச் சில கேள்விகளை வினவுகிறாள்.

இக்காலக் கட்டத்தில்தான் சிங்கன் தோன்றுகிறான். அப்போது அவன் தன் மனைவியாகிய சிங்கியைத் தேடுகிறான். அப்போது சிங்கனின் நண்பனாகிய நூவன் வருகிறான். அப்போது சிங்கன் பறவை செல்வதைக் காணுகிறான்; பறவைகள் வரும் பாங்கினை அவன் பாடி நூவனுக்கு விளக்குகிறான். இந்நேரத்தில் சிங்கனுக்குச் சிங்கியின் நினைப்பு குறுக்கிடுகிறது. பிறகு கண்ணிகளைக் கொண்டுவந்து தருகிறான். இருவரும் பறவைகளைப் பிடிக்கின்றனர். சிங்கன் சிங்கியை நினைத்துப் புலம்பத் தொடங்குகிறான்.

பறவை வேட்டைப் பற்றி நூவனிடம் கூறுகிறான் சிங்கன். நீ ஆசைப் பேயாக இருக்கிறாயே! சிங்கியைத் தேடுவாயாக என்று நூவன் சிங்கனைப் பழிக்கிறான். சிங்கன், சிங்கியைத் தேடும்படி நூவனுக்குக் கூறுகிறான். அதற்கு நூவன் எனக்கென்ன வந்தது? நீயே தேடிக் கொள் என்று மறுத்து விடுகிறான். பின்னர் சிங்கன் சிங்கியைத் தேடுகிறான்! தேடுகிறான்! எங்கும் காணாது தவிக்கிறான். பிறகு, நூவன் சிங்கியின் அடையாளங்களைக் கேட்கிறான். சிங்கனும் அடையாளங்களைக் கூறுகின்றான். சிங்கியைக் கொண்டுவந்து சேர்ப்பதற்கு நூவன் சிங்கனிடம் கூலி கேட்கிறான் சிங்கனும் இன்னதருவதாகக் கூறுகிறான்.

குறத்தியைக் காணாத சிங்கன் தேடி அலைகின்றான். இறுதியில் சிங்கன் சிங்கியைக் கண்டு மனம் மகிழ்கின்றான். பிறகு இருவரும் குற்றாலநாதரைப் பாடி மகிழ்வதாகக் கதை நிறைவு பெறுகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் கதை மாந்தர்கள்**

குற்றாலக் குறவஞ்சி நாடகத்தில் வரும் கதாப்பாத்திரங்களாகக் கட்டியங்காரன், திருக்குற்றாலநாதர், வசந்தவல்லி, தோழி, குறவஞ்சி (சிங்கி), குறவன் (சிங்கன்), அவனது தோழன் நூவன், ஏகன், நாகன், எலியன், புலியன் முதலான கதை மாந்தர்கள் பலர் இடம் பெறுகின்றனர். இப்பாத்திரங்களுள் முதன்மையானவர்கள்,

1. கட்டியங்காரன்
2. தலைவர் திருக்குற்றாலநாதர்
3. தலைவி வசந்தவல்லி
4. குறவஞ்சி
5. சிங்கன்

என்ற பெயரைத் தாங்கியவர்கள் ஆவார்கள். காரணம் முதலாவதாக இறைவனது வருகையை முன்னறிவிக்கும் கட்டியங்காரன் பாத்திரம், இரண்டாவதாகத் தலைவர் திருக்குற்றாலநாதர் பாத்திரம், மூன்றாவதாகத் தலைவி வசந்தவல்லி பாத்திரம், நான்காவதாக்க் குறவஞ்சி பாத்திரம், ஐந்தாவதாக சிங்கன் பாத்திரம் என அவர்களிலேயே உயிர் ததும்பும் பாத்திரமாக உருவாக்கப்பட்டு முக்கியமாகத் திகழ்பவர்கள் ஆவார்கள்.

**கட்டியங்காரன் பாத்திரம்**

கட்டியம் என்பதை நர்மதாவின் தமிழ் அகராதி "கட்டியம் – புகழுரை"[72] எனவும், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கட்டியம் கூறு என்பதனை "வருகையைத் தெரிவித்து முன்னறிவிப்புச் செய்தல்,"[73] என்பதனைப் பதிவு

---

[72] . நர்மதாவின் தமிழ் அகராதி, ப. 200.
[73] . க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.299.

செய்கிறது. கட்டியங்காரன் – தெருக்கூத்தின் கதாப்பாத்திரங்களை அறிமுகப்படுத்தல் எனவும் பார்வையாளரைச் சிரிக்க வைத்தல் போன்ற செயல்களைச் செய்வோன் எனப் பொருள்படுகிறது. “கட்டியன் அல்லது கட்டியங்காரன் எனப்படுபவன், திரை பின் பாட்டுகள் தொடக்கத்தில் நிறைவடைந்த பின்னர் மேடையில் தோன்றும் மாந்தராவான். நாடகத்தின் தொடக்கத்திலேயும், இடையிலேயுமாக வந்து இசைப் பாடல்களைப் பாடுபவனாகக் காணப்படுகின்றான்.”[74]

‘கதைக் கட்டுதல்’ என்னும் சொல்லாட்சி இன்றைய பேச்சு வழக்கில் உள்ளது. நாடகப் போக்கைக் கட்டுக் கோப்போடு கொண்டு செல்வதால் இவன் ‘கட்டியன்’ என அழைக்கப்படுகின்றான். தற்காலத் தெருக்கூத்துகளில் கட்டியன் நகைப்புப் பாத்திரமாக காணப்படுகின்றான். அக்காலத்தில் இவன் நகைப்பு மாந்தராகக் கருதப்பட்டமைக்கான சான்றுகள் ஏதுமில்லை. ஆனால் நாடகத்தை நடத்திச் செல்லுகின்ற மாந்தராக விளங்குகின்றான்.

குற்றாலக் குறவஞ்சியில் வரும் கட்டியங்காரனது பெயர் குறிப்பிடப்படவில்லை. வெறுமனே கட்டியங்காரன் என்றே இருக்கிறது. ஆகவே மேற்கண்ட பொருளில் கண்டவாறே தலைவர் வருகையைப் புகழ்ந்து, முன்னறிவிப்பு கூறுபவனாகவே கட்டியங்காரனின் பாத்திரத்தைக் கவிராயர் படைத்துள்ளார்.

**கட்டியங்காரனின் தோற்றம்**

குற்றாலத்து நகர வீதியில் உலா வரும் குற்றாலநாதரை முன்னறிவிப்புச் செய்யும் கட்டியங்காரனின் தோற்றத்தினைக் கவிராயர் புலப்படுத்துகிறார். நேர்மை கொண்ட பூணூல் அணிந்த மார்பினையும், கையிலே நெடிய பிரம்பினையும், மழைக்காலத்திலே மழையைச் சுமந்து திரண்டு நிற்கும் கருமேகங்களுள் சிறந்து விளங்கும் கருமேகத்தைப்போலக் கருமை நிறமுடைய

[74] . குறவஞ்சி இலக்கிய நோக்கும் போக்கும். பி. இரத்தினசபாபதி, ப.59.

தோற்றத்தையும் உடையவனாகத் தன்னை அலங்கரித்து வருபவன் எனப் பதிவு செய்கிறார். இதனைக் கவிராயர்,

"தேர் கொண்ட வசந்த வீதிச் செல்வர்குற் றாலத்து ஈசர்
பார்கொண்ட விடையில் ஏறும் பவனி எச்சரிக்கை கூற
நேர்கொண்ட புரிநூல் மார்பும் நெடியகைப் பிரம்பும் ஆகக்
கார்கொண்ட முகிலேறு எனக் கட்டியக் காரன் வந்தான்"[75]

(திரு.குற்.கு.பா.10)

என விளக்குகிறார்.

**கட்டியங்காரன் பாட்டுடைத் தலைவரை அறிமுகம் செய்தல்**

நாடக மாந்தரை அறிமுகப் படுத்தும் வகையில் தொடக்கத்தில் கட்டியங்காரன் வருவது மரபு. நாடக மாந்தர்களின் செயல் பற்றியும், புகழ் பற்றியும் விளக்குவது அவனது கடமையுமாகும். தற்கால நாடக அமைப்பில் அத்தகு நிலைமை இல்லை என்றாலும், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களது தீந்தமிழ் நாடகமான மனோன்மணியத்தில் சுந்தர முனிவரைச் சேவகர்கள் அறிமுகப்படுத்துவதுபோல அமைந்துள்ள முதலங்கத்தின் முதற்களம் கட்டியங்காரன் செய்யும் கடமையையும், அவனது மரபையுமே நினைவூட்டுவதாக அமைந்திருக்கும் திறத்தைக் காணலாம். புகழ்பெற்ற நாடக ஆசிரியரான சேக்சுபியரின் நாடகங்களிலும் கட்டியங்காரன் போன்ற பாத்திரத்தையும், கதை மாந்தர்களை அறிமுகப்படுத்துகிறார். 'அந்தோணியும் கிளியோ பாத்ராவும்' என்னும் நாடகத்தின் தொடக்கக் காட்சியில் பிலோ என்பான் முதலில் அந்தோணியின் புகழையும், அவனது செயல்களையும் சொல்லிக்கோண்டேயிருக்க நாடகம் தொடங்குவதானது நாடக மாந்தரை அறிமுகம் செய்யும் காட்சியாகவே அமைகிறது.

குற்றாலக் குறவஞ்சியில் வரும் கட்டியங்காரன், குற்றாலத்துநாதரின் வருகையை, அவரின் பெருமையைப் பறைசாற்றும் விதமாக உலகத்து மக்களையெல்லாம் முறைசெய்து காப்பவர்கள் மண்ணுலகத்து அரசர்கள்.

---

[75]. திரு.குற்.கு.பா.10. ப.18.

தேவலோகத்துப் பலரையும் காக்கும் தேவேந்திரன் முதலான அவ்வுலகத்து இறைவர்கள் எல்லோரையும் சிவ சன்னதியிலே நெறிமுறை தவறாமல் காக்கும் செங்கோலான பிரம்பினை உடைய மகாமேரு பர்வதத்தையே வில்லாக வளைத்துக் கைக்கொண்ட மேலான உயர்வினையுடையவருமாகிய குற்றாலத்துநாதரின் திருக்கோவிலின் திருவாசலிலே கட்டியங்கூற நிற்கும் கட்டியங்காரன், ஈசன் பவனி வரும் எச்சரிக்கைப் பற்றிய செய்தியை அனைவருக்கும் தெரிவிக்க நகர வீதியிலே எழுந்தருளி வந்தான என்பதனை,

"பூமேவு மனுவேந்தர் தேவேந்தர் முதலோரைப்
புரந்திடும் செங் கோலான பிரம்புடையான்
மாமேருச் சிலையாளர் வரதர்குற் றாலநாதர்
வாசற் கட்டியக் காரன்வந்தனனே"[76] (திரு.குற்.கு.பா.11)

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

அதனைத் தொடர்ந்து முத்தாலான மூக்குத்தியை அணிந்திருக்கின்ற மங்கையர்கள், நன்மை தரும் நகரமாகிய பழமையான குற்றால நகர வீதியில் அணிவகுத்து நிற்க, தனது கட்டளையை ஏற்று இமயத்திலிருந்து தென்திசை நோக்கி வந்த மாமுனி அகத்தியருக்காக மானை ஏந்தியுள்ள கையைக் காட்டி அருளுகின்றவரும், புகழை நிறைத்து வைத்துள்ள நான்மறை வேதங்களும் அவருடைய திருப்பாதங்களில் அமைந்து கிடந்து ஒலி முழக்கம் செய்யும், அவர் ஏறிவரும் விடையோ மலையை ஒத்ததாகும். அதன்மீது ஏறியமர்ந்து, மேற்குத் திசையிலே தோன்றும் இளம் பிறையைத் தன் சடையிலே சூடியவனாகக் கிழக்குத் திசையிலே எழுந்து வரும் இளம் ஞாயிறுபோல அவன் அதோ! காட்சியளிக்கிறான். பாரீர்! பாரீர்! பாரீர்! என்று கூவி கொண்டே வருவதை,

"மூக்கெழுந்த முத்துடையார் அணிவகுக்கும்
நன்னகர மூதூர் வீதி
வாக்கெழுந்த குறுமுனிக்கா மறிஎழுந்த
கரங்காட்டும் வள்ள லார்சீர்த்
தேக்கெழுந்த மறைநான்கும் சிலம்பெழுந்த

[76] . திரு.குற்.கு.பா.11. ப.20.

பாதகர்விடைச் சிலம்பில் ஏறி
மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த
ஞாயிறுபோல் மேவினாரே"[77]

(திரு.குற்.கு.பா.12)

என்ற பாடல்வரிகள் மூலம் கட்டியங்காரனின் கூற்றை அறிய முடிகிறது.

**குற்றாலநாதர் வருகையைப் புகழ்ந்துரைத்தல்**

பவனி வருகின்றார் இதோ! பவனி வருகின்றார். இளமைப் பொருந்திய விடையின் மீதேறி பவனி வருகின்றார்! உலகத்தாரெல்லாம் போற்றிய பெருமான்; குறும்பலாவின் அடியிலே வீற்றிருக்கின்றவர்: மவுன நாயகனாகவும் விளங்குபவன்; சிவனுமாகவும்; அரியுமாகவும்; அயனுமாகவும் விளங்கும் ஏகமூர்த்தி! விரைந்து செல்லுகின்ற எருதின் மீதேறி இதோ! பவனி வந்து கொண்டிருக்கின்றார்! பாரீர்! பாரீர்! பாரீர்! என்ன கூட்டம்! என்ன ஆரவாரம்! என்ன களிப்பு! தேவர்களின் கூட்டமும், முனிவர்களின் கூட்டமும், அசுரர்களின் கூட்டமும், தொண்டர்களின் கூட்டமும் கண்ணிமைப்பில்லாதவராயினர் போலும் என்று சொல்லுமளவிற்கு, ஒருவரையொருவர் கலந்து தனித்தனியே மயக்கம் உடையவராயினர். நந்தி பகவான் தொன்மையான பக்த இனத்தவர் தேவலோகக் கூட்டத்தைத் தனித்தனியாகப் பிரித்து நிறுத்தினான். இறைவனைக் காண வந்த மன்னர்களின் மகுடங்களின் மீது பிரம்படிபடும்படி அடித்து ஒதுக்கிவிட அவ்வடிகள் அவர்களின் மகுட கோடிகளிலேபட்டு அவரை வருத்தும் வண்ணமாக குற்றாலத்துநாதர் இதோ! பவனி வந்து கொண்டிருக்கின்றார் பாரீர்! பாரீர்! பாரீர்! என்று கட்டியங்காரன் பாடுவதாகக் கவிராயர் பின்வருமாறு விளக்குகிறார்.

---

[77] . திரு.குற்.கு.பா.12. ப.22.

பல்லவி

"பவனி வந்தனரே! மழவிடைப் பவனி வந்தனரே!

அனுபல்லவி

அவனி போற்றிய குறும்ப லாவுறை

மவுன நாயகர் எவன நாயகர்
சிவனுமாய்அரி அயனுமானவர்
அவனி போற்றிய குறும்ப லாவுறை
மவுன கவன மால்விடை அதனில் ஏறியே." (பவனி)

(திரு. குற்.கு.பா.13 - 2)

சரணங்க

அண்டர் கூட்டமும் முனிவர் கூட்டமும்

அசுரர் கூட்டமும் மனிதர் ஆகிய
தொண்டர் கூட்டமும் இமைப்பி லாரெனச்
சூழ்ந்து தனித்தனி மயங்கவே.
பண்டை நரரிவர் தேவர் இவர்எனப்
பகுத்து நிறுவிய வேளை தொறுந்தொறும்
மண்டல் ஈசரை நந்தி பிரம்படி
மகுட கோடியிற் புடைக்கவே. (பவனி)

(திரு. குற்.கு.பா.13 - 3)

தடுப்ப தொருகரம் கொடுப்ப தொருகரம்
தரித்த சுடர்மழு விரித்த தொருகரம்
எடுத்த சிறுமறி பிடித்த தொருகரம்
இலங்கப் பணியணி துலங்கவே
அடுத்த ஒருபுலி கொடுத்த சோமனும்
ஆனை கொடுத்தவி தானச் சேலையும்
உடுத்த திருமறுங் கசைய மலரயன்
கொடுத்த பரிகலம் இசையவே..." (திரு. குற்.கு.பா.13-4)

என்று சிவபெருமானின் நான்கு கைகளின் சிறப்புகளை எடுத்துக் கூறி முழங்குகிறான் கட்டியங்கூறுகிறான். சிவபெருமானுக்கும் அவரது மாமனுக்கும் இடையே ஏற்பட்ட பகையின் போது மருமகன்மீது மாமன் ஏவப்பட்ட சாபத்தைக் கூறும்விதமாகத் தட்சன் ஏவிய சர்ப்பத்தைத் தனது ஒரு கையால் பிடித்து கழுத்தில் வசக்கி அதை மாலையாகப் போட்டுக் கொண்டர். மறு கையானது தட்சன் ஏவிய வஞ்சனை மிக்க மானை அடக்கி வசப்படுத்தியதையும், மூன்றாவது கையானது தட்சன் ஏவிய கொடிய மழுவாயுதத்தைப் பிடித்துத் தனது படையாயுதமாக மாற்றியதையும், நான்காவது கையானது ஆங்கார வெறியில் தட்சன் அனுப்பிய புலியையும், யானையையும் வகிர்த்து தோலையுரித்து, அத்தோலை வேட்டையாகவும், போர்வையாகவும் போர்த்திக் கொண்டதை நினைவு கூறும்விதமாக நான்கு கைகளையும் ஆட்டிக் காட்டுவதுபோலக் குற்றாலநாதர் பவனி வருவதைக் கட்டியங்காரன் பறைசாற்றுகிறான்.

குற்றாலநாதர் மட்டுமல்ல அவருடன் மூத்தவரான விநாயகர் பெருச்சாளியின் மீதேறி வெற்றிப் படையைத் தாங்கி வருகிறது. விஷப்பாம்பையே கொத்தி நார்நாரய்க் கிழித்துவிடும் வலிமை பொருந்திய மயில் மீதேறி, வெற்றி வேலைத் தாங்கி முருகன் வருவதையும், விரிந்த மார்பினில் கொன்றை மாலையுடன் பதக்கமணி ஒளிவீச அடியவர்களை உடைய தலைவன் உலா வருவதைக் கண்டால் இவ்வுலகமே தழைத்து ஓங்கி காணப்படுகிறது. தலைவன் உலா வருவதை வரவேற்கும் விதமாகப் பூலோகமே நடுநடுங்கும் விதமாக இடியினை ஒத்த முழக்கமும், யானையின் பேரிகை முழக்கமும், அடியவர்களின் திருப்பல்லாண்டு முழக்கமும், பொன்னால் செய்த தம்புரா, கின்னரம், மிகுந்த விருப்பதை எழச் செய்யும் வீணையின் ஓசையும், அழகு மிகுந்த முத்துப் பல்லக்குகளும், திருக்குடையும், ஆலவட்டங்களும் நிழலைத் தந்திட, வனிதை மாதர்கள் பலர் குஞ்சம், சாமரை, விசிறி ஆகியவறை வரிசை வரிசையாக இருபுறமும் நின்று சுழற்றிக் கொண்டே உடன்வர, குபேரன், இந்திரன், வருணன் முதலிய சகல தேவர்களும் குற்றாலநாதரைப் பாடிக்கொண்டே வர உலா வருகின்றார் யாவரும் காண வாரீர்! வாரீர்! வாரீர்! எனவும் கூறி கூவி அழைப்பதை,

"இடியின் முழக்கொடு படரும் முகிலென
யானை மேற்கன பேரி முழக்கமும்
துடியின் முழக்கமும் பரந்து திசைக்கரி
துதிக்கை யாற்செவி புதைக்கவே
அடியர் முழக்கிய திருப்ப லாண்டிசை
அடைந்த செவிகளும் துறக்க மூவர்கள்
வடிசெய் தமிழ்த்திரு முறைகள் ஒருபுறமும்
மறைகள் ஒருபுறமும் வழங்கவே" (திரு. குற்.கு.பா.13 - 6)

என்றும்,

"கனக தம்புரு கின்ன ரங்களி
ஆசை வீணை மிழற்றவே
அனக திருமுத்தின் சிவிகை கவிகைபொன்
ஆல வட்டம் நிழற்றவே
வனிதை மார்பல குஞ்சம் சாமரை
வரிசை விசிறிச் சுழற்றவே
தனதன் இந்திரன் வருணன் முதலிய
சகல தேவரும் வழுத்தவே" (திரு.குற்.கு.பா.13-7)

என்றும் உலா வருவதாகக் கட்டியங்காரன் உரைக்கின்றான்.

குற்றாலநாதர் உலா வருவதைக் காணக் கூடிவரும் கூட்டத்தைக் கவிராயர் கட்டியங்காரன் வாயிலாக வெளிப்படுத்துகிறார். சைவர்கள் உயரவும், சமணர்கள் தாழ்ந்திடவும், சகல சமயத்தவரும் ஏற்றுக் கொள்ளவும், தன் கையில் மிகுந்த சக்கரப் படையைத் தாங்கியுள்ள திருமாலும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் இருபுறமும் காவல் புரிந்துவர, ஐந்து பெரும் கடவுள்களும், தேவர்களின் தலைவர்களும், தெய்வங்களுக்கெல்லாம் தலைவனும் திருச்சின்னத்தைக் கையிலெடுத்து ஆர்ப்பரித்து ஆடுவதாகவும் குறிப்பிடுகிறார். அவற்றைக் காணக் கண்ணுக்கெட்டின தூரம் வரையிலும் திருவிழாக் கூட்டம், பக்தர்கள், முனிவர்கள், வானவர்கள், நாட்டார்கள், நகரத்தார்கள், பெருமக்கள், ஆயுதங்களின் பெருக்கம், படை வீரர்களின் பெருக்கம், தேர்ப் பெருக்கம், கொடிப்படையின் பெருக்கம்,

யானையின் பெருக்கம், குதிரைகளின் பெருக்கமும் எங்கும் நெருங்கிவர முதன்மையான கொடிகளாகிய காடு வான்வெளிவரை ஓடி இருளை செய்ய, மிகுந்த ஒளியுடன் கூடிய இடபக் கொடி மேல் எழுந்து எட்டுத் திசைகளும் விளக்கமுற ஒளிதரக் குற்றாலநாதர் உலா வருகின்றார் பாரீர்! பாரீர்! என்கிறார். அவரின் வருகையை வரவேற்கும்விதமாக தெய்வ மங்கைகள் கொத்தான மலர்களைச் சூடி குரவையாட்டம் ஆடும் ஓசையானது, கடலின் அலையோசையை ஒடுக்குமாறு எங்கும் ஆர்ப்பரிக்க, கனகரின் கம்பளரின் பாடல்களின் ஒலியானது ஏழு உலகங்களையும் உலுக்கிட, மத்தளங்களின் ஓசையானது இடையைப்போல முழங்கிட, மயிலைப் போன்ற மங்கையரின் நடனம் அனைவரையும் ஈர்த்திட, சக்தி, பயிரவி, கௌரி ஆகிய திருப்பெயர்களையுடைய குழல்வாய்மொழி அம்மையானவள் குற்றாலநாதரின் இடப்பக்கத்திலே அமர்ந்துவர இதோ! வீதி உலா வந்து கொண்டிருக்கின்றார். பவனியைக் காண வாரீர்! வாரீர்! வாரீர்! என்ற கட்டியங்காரனின் ஆரவாரக் குரலொலிஅனைவரின் காதுகளிலும் ஒலிப்பதாக கீழ்வரும் பாடல்வரிகள் விளக்குகின்றன.

"சேனைப் பெருக்கமும் தானைப் பெருக்கமும்
தேரின் பெருக்கமும் தாரின் பெருக்கமும்
ஆனைப் பெருக்கமும் குதிரைப் பெருக்கமும்
அவனி முழுதினும் நெருங்கவே
மோனைக் கொடிகளின் காடு நெடுவெளி
மூடி அடங்கலும் ஓடி இருண்டபின்
ஏனைச் சுடர்விரி இடப கேதனம்
எழுந்து திசைதிசை விளங்கவே" (திரு.குற்.கு.பா,13-9)

என்றும்,

"கொத்து மலர்க்குழல் தெய்வ மங்கையர்
குரவை பரவையை நெருக்கவே
ஒத்த திருச்செவி இருவர் பாடல்கள்
உலகம் ஏழையும் உருக்கவே

மத்த ளம்புயல் போன்முழங்கிட
மயிலனார் நடம்பெ ருக்கவே
சக்தி பயிரவி கௌரி குழல்மொழித்
தைய லாளிடம் இருக்கவே” (திரு.குற்.கு.பா.13-)

எனத் திருக்குற்றாலநாதரின் உலா வருகையை முன்னறிவிப்புச் செய்து இக்குறவஞ்சியைப் புகழ்ந்து கூறும் முதல் பாத்திரமாக்க் கட்டியங்காரனின் பாத்திரம் சிறந்து விளங்குகிறது.

**கதைத் தலைவர் குற்றாலநாதர் கதாப் பாத்திரம்**

நாடகத்தில் தோன்றும் அனைத்துக் கதை மாந்தர்களாலும் பாராட்டப்படுபவர் பாட்டுடைத் தலைவர் குற்றாலநாதரே ஆவார். நாடகத்தின் முதற்காட்சியில் எழுவகைப் பருவ மகளிரும் கண்டு காமுரும் வண்ணம் உலா வருபவர் குற்றாலநாதர் ஆவர். அவர் பவனி வரும் காட்சியுடன் அவரது பாத்திரத்தின் பங்கு நிறைவு பெறுகிறது. எனினும் அவரைப் பற்றிய சிறப்புச் செய்திகள் நூல் முழுவதுமாக எங்கும் நிரம்பிக் காணப்படுகிறது. கதைத் தலைவரை புகழ்வதற்காகவே ஏனைய பிற கதை மாந்தர்களை உருவாக்கியுள்ளார் கவிராயர்.

**கதைத் தலைவி வசந்தவல்லி கதாப் பாத்திரம்**

**வசந்தவல்லி அறிமுகம்**

குற்றாலக் குறவஞ்சியில் வரும் தலைவியின் கதைப் பாத்திரமானது நூலாசிரியரே அறிமுகப்படுத்தும் பாத்திரமாக விளங்குகிறது. குறவஞ்சி நூல்களில் தலைவியாகவரும் பெண்களுக்குக்குக் கீழ்க்காணும் பெயர்களைச் சூட்டிப் பல்வகைக் குறவஞ்சிகளைப் படைத்துள்ளனர். அப்பெயர்கள் மோகினி, மோகனாங்கிளி, செகன்மோகினி, வசந்தவல்லி, வாலகோகிலம், காமவல்லி, காமரசவல்லி, வாலகோகில மோகினி, தெய்வ மோகினி, மதனவல்லி, இராசமோகினி, மதனரதி, மோகனவல்லி, சரசமோகினி, சுகமோகினி, வாலமோகினி, சுரதமோகினி, மனோன்மணி போன்ற பலவகையான பெயர்களைத் தலைவிகளுக்குச் சூட்டி குறவஞ்சி நூல்களைப் படைத்துள்ளனர்.

குறவஞ்சி நூல்களுக்கு முன்னோடியாகத் திகழும், திருக்குற்றாலக் குறவஞ்சியில் வரும் தலைவியின் பெயரை ‘வசந்தமோகினி,’ ‘வசந்தவல்லி,’ ‘வசந்த சவுந்தரி’ போன்ற பெயர்களால் ஆசிரியர் அறிமுகம் செய்து வைக்கின்றார். “1. ‘வசந்தம்’ என்ற சொல்லுக்கு, ‘க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி’ வசந்த காலம். செடி, கொடி, மரம் ஆகியவை பூக்கத் தொடங்கும் பருவம்; 2. மகிழ்ச்சியும் உல்லாசமும் நிலவும் காலம்”[78] எனப் பொருள் கூறுகிறது.

“மோகினி என்ற சொல்லுக்கு நர்மதாவின் தமிழ் அகராதி, 1.அழகிய பெண் வடிவம் எடுத்து மயக்கும் பேய் என்று பொருள் கூறுகிறது. ‘மோகனம்’ என்பதற்கு நர்மதாவின் தமிழ் அகராதி, மனதினை வசிகரிக்கும் இனிமை, ரம்மியமான தன்மை”[79] எனப் பொருள் கூறுகிறது. ‘வல்லி’ என்ற சொல்லுக்குக் கதிரைவேற் பிள்ளையின் ‘தமிழ் மொழியகராதி’ அளவு, ஆயப்பாடி, கலியாணம், கால் விலங்கு நீக்குதல், படர்கொடி, பிரிதல், பூமி, பெண், முருக்கு, வல்லிக்கொடி எனப் பல பொருள்களைக் குறிப்பிடுகிறது. கவிராயர் ‘வசந்தவல்லி,’ ‘வசந்த மோகினி’ என்பதற்கு என்ன பொருளில் வைத்திருப்பார்? ஏதோ ஒரு சிறப்புக் காரணம் கருதித்தானே வைத்திருக்க வேண்டும். ‘மோகினி’ ‘வல்லி’ ஆகிய பெயர்களை பின்னொட்டாக வைத்திருப்பதற்கும் ஒரு சிறப்புக் காரணமாகப் புலவர். தமிழமுதன் என்பார், “வசந்தவல்லியின் அழகைப் பல இடங்களில் கூறவரும் கவிராயர், ‘மோகனம்’,’தேவரம்பை’, ‘பேடையன்னம்’, ‘கொண்டையாள்’, ‘கெண்டையாள்’, ‘இதழினாள்’, ‘வரிச்சிலை’, ‘நுதலினாள்’, ‘புருவத்தாள்’, ‘மயக்குமொரு கருவம்,’ ‘மங்கைப் பருவம்’, ‘சொல்லினாள்’, ‘பல்லினாள்’, ‘மூக்கிலொரு முத்தினாள்’, ‘அழகு குடிகொள்ளும் முத்தினாள்’, ‘கமுகை வென்ற கழுத்தினாள்’, ‘நொய்யில் எழுத்தினாள்’, ‘செங்கையாள்’, ‘கொங்கையாள்’, ‘உத்தியாள்’, ‘பந்தியாள்’, ‘சின்ன இடையாள்’, ‘கதலி வாழைத் தொடையினாள்’, ‘நெறிபிடித்த உடையினாள்’, ‘நடை பயிலும் நடையினாள்’,

---

[78] . க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.892.

[79]. நர்மதாவின் தமிழ் அகராதி, ப.766.

‘மேனியாள்’, ‘சீனியாள்’, ‘வல்லிக்கொடி’, ‘வல்லிப் பெருக்கம்’, ‘சித்தம் உருக்கம்”[80] என்று தனது கற்பனை வளத்தால், கவிதை நயத்தால் வசந்த வல்லியை அறிமுகம் செய்து வைத்துள்ளார் என்பதை வைத்துப் பார்த்தால் நாம் ஒரு முடிவுக்கு வர முடிகிறது. ‘வசந்தவல்லி’ என்பது வசந்த காலத்தில் பூக்கத் தொடங்கிய நல்ல மணமுடைய வல்லிக் கொடி போன்ற வசந்தவல்லியின் அழகின் பெருக்கத்தை அறுபத்து மூன்று சக்தி பீடங்களில் ஒன்றாகிய திருக்குற்றாலத்தில் வீற்றிருக்கும் திரிகூடராசரின் சித்தத்தை உருவகச் செய்யும் வண்ணமாகப் படைத்திருக்கின்றார்.

**வசந்தவல்லியின் தோற்றமும் வருகையும்**

பொன்போலும் அணி செய்வதாகிய பொட்டினை நெற்றியிலே தீட்டிக் கொண்டு, கூந்தலிலே அழகிய மலர்மாலையைச் சூட்டிக் கொண்டு, அழகில் சிறந்த மோகினியைப்போலத் தன்னை அழகுறக் கொண்டுள்ளது. குற்றாலத்து நகரப் பெருமானின் முன்னர் சென்று, தம் நாணமும் ஆடையும் இழந்து நின்ற கன்னியர்களுக்குத் தானும் ஒரு துணையாள்போலக் காட்டிக் கொண்டவளாக, ஆடவரின் பகுதி முழுவதுமாகக் காமவேலின் கலகச் செயலை மூட்டி விடுபவள்போல, மன்மதனையும் தன் கண்களால் மயங்க வைக்கும் அழகுடன் மோகனப் பெண்ணாகிய வசந்தவல்லி தேவலோக அரம்பையைப்போலவும் உள்ளார். தன்னால் பார்ப்பவரின் கண்களுக்குத் தன் இருகண்களால் ஏற்ற பதிலைக் குறிப்பால் கூறவும், நெற்றிக் கண்ணுடையத் திரிகூடராசரைத் தன் பார்வையால் வெல்லவும், தன்னைக் கண்ட பெண்களும் தன் அழகில் மயங்குமாறு பெண் அன்னத்தைப்போலவும், தன் ஆசை தீர கை நிறைய வளையல்களை அணிந்து கொண்டு, தன்னைப் போன்ற பிற இள மங்கையர்களை வெற்றி கொள்ளும் பொருட்டு, கண் சிமிட்டுதலாகிய நாடகத்தை நடத்தி, ஏதும் அறியாதவளைப் போல, ஒய்யாரமாக நடை நடந்து, ஓவியத்தைப் போலக் குற்றாலநாதர் உலா வந்து கொண்டிருக்கும் சங்க வீதியிலே, உல்லாசம் பொருந்திய ரதிதேவியைப்போல, ஊர்வசியும் வெட்கப்படுமாறு வசந்தவல்லி

[80] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 27.

பெருமானின் உலாவைக் காண வந்தாள் என்று கீழ்வரும் பாடல் வரிகள் விளக்குகின்றன.

> “வங்காரப் பூஷணம் பூட்டித் திலகம் தீட்டி
> மாரனைக் கண்ணாலே மருட்டி
> சிங்கார மோகனப் பெண்ணாள் வசந்தவல்லி
> தேவரம்பை போலவே வந்தாள்.
> கண்ணுக்குக் கண்ணினை சொல்லத் திரிகூட
> கண்ணுதலைப் பார்வையால் வெல்லப்
> பெண்ணுக்குப் பெண்மயங்கவே வசந்தவல்லி
> பேடைன்னம் போலவே வந்தாள்.
> கையாரச் சூடகம் இட்டு மின்னாரை வெல்லக்
> கண்ணிலொரு நாடகம் இட்டு
> ஒய்யார மாக நடந்து வசந்தவல்லி
> ஓவியத்தைப் போலவே வந்தாள்.
> சல்லாப மாது லீலர் குற்றால நாதர்
> சங்கநெடு வீதிதனிலே
> உல்லாச மாது ரதிபோல வசந்தவல்லி
> உருவசியும் நாணவே வந்தாள்”[81]

என்று கவிராயர் வசந்தவல்லி பவனியைக் காணவரும் காட்சியை விளக்குகிறார்.

**வசந்தவல்லி பந்து பயிலும் காட்சி**

வசந்தவல்லியை அறிமுகப்படுத்தும் காட்சியில் கவிராயர், அவளைப் பேரழகியாகச் சித்தரித்துக் காட்டுகிறார். பந்தடிக்கும்போது அவளது உடல் உறுப்பு ஒவ்வொன்றையும் சிற்றின்பச் சுவைபடக் கூறுகிறார். பந்தடிக்கும்போது அவள் தன்னையும் தன் நிலையினையும் மறந்தவளாக, ‘காற்றிலே கலந்த கீதம்போல்’ அவ்விளையாட்டிலே ஒன்றி வெற்றி ஒன்றை மட்டுமே நெஞ்சில் நினைத்து ஆடுவதாகக் கவிஞர்,

---

[81] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 28.

“செங்கையில் வண்டு கலின்கலின் என்று
செயம்செயம் என்றாட – இடை
சங்கதம் என்று சிலம்பு புலம்பொடு
தண்டை கலந்தாட – இரு
கொங்கை கொடும்பகை வென்றனம் என்று
குழைந்து குழைந்தாட – மலர்ப்
பைங்கொடி நங்கை வசந்த சவுந்தரி
பந்து பயின்றாளே.
பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை
புரண்டு புரண்டாடக் – குழல்
மங்குலில் வண்டு கலைந்தது கண்டு
மதன்சிலை வண்டோட – இனி
இங்கிது கண்டுல கென்படும் என்படும்
என்றிடை திண்டாட – மலர்ப்
பங்கய மங்கை வசந்த சவுந்தரி
பந்து பயின்றாளே."[82]

என்று விளக்குகிறாள். அவளது பந்து பயிலும் அழகினைப் பார்த்த மக்கள் கூட்டம் இவள்,

“இந்திரையோ இவள் சுந்தரியோ தெய்வ
ரம்பையோ மோகியோ”[83]

என்று யாவரும் வியக்கும் வண்ணம் சங்கணி வீதியிலே,

"கொந்தடிப்பூங் குழல்சரிய நன்னகரில்
வசந்தவல்லி கொடிய காமன்
முந்தடிபிந் தடிஇடைபோய் மூன்றடி
நாலடிநடந்து முடுகி மாதர்
சந்தடியில் திருகியிட சாரிவல

[82] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 21.
[83] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 35.

சாரிசுற்றிச் சகிமார் சூழப்
பந்தடிக்கும் பாவனையைப் பார்க்க அயன்
ஆயிரங்கண் படைத்தி லானே."[84]

என்று வசந்தவல்லி பந்து விளையாடும் காட்சியைக் கண்ட ஆடவர்கள், இந்த அதிசயக் காட்சியைக் காண்பதற்கு 'நான்முகன்' ஆயிரம் கண்களை எங்களுக்குப் படைக்கவில்லையே என்று வருத்தும் அளவிற்குச் சிறப்பாகப் பந்து பயின்றாள். அப்படிப் பந்து விளையாடும்போது, மந்திர மலை போன்ற கொங்கைகள் இகழ்ந்திடவும், குழைகள் ஊசலாடுவதும், அழகிய விழிகள் கலகம் செய்வதாகவும், 'தொக்கத் தொங்கத் தொம்' என்று ஒலி எழுப்பும் விதமாக,

"மந்தர முலைகள் ஏசலாட
மகரக் குழைகள் ஊசலாடச்
சுந்தர விழிகள் பூசலாடத்
தொங்கத் தொங்கத் தொங்கத்
தொம்மெனப்"[85]

ஆனந்தமாகத் தோழியருடன் ஆடிப்பாடி ஒலி எழுப்பி ஆனந்தமாகப் பந்து பயின்று வருகிறாள் என கவிராயர் விளக்குகிறார்.

**வசந்தவல்லியின் காதல்**

பந்து பயிலும் நேரத்தில், பவனி வரும் குற்றாலநாதரை எதிரில் காண்கிறாள் வசந்தவல்லி. அப்போது இறைவனது அருள்கண் பார்வை அவள்மீது பட்டதும், அவளது மேனியானது 'உருக்கிவிட்ட தங்கத்தைப்போல' அவளது மேனியும் உருகிட, குற்றாலநாதரைத் தன் நெஞ்சில் ஏற்று அவர்மீது காதல் கொண்டு,

"வாகனைக்கண்டு உருகுதையோ - ஒரு
மயக்கமதாய் வருகுதையோ

---

[84]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 36.
[85]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 37.

மோகமென்பது இதுதானோ – இதை

முன்னமேநான் அறிவேனோ?

ஆகமெல்லாம் பசந்தேனே – பெற்ற

அன்னை சொல்லும் கசந்தேனே

தாகமன்றிப் பூணேனே – கையில்

சரிவளையும் காணேனே”[86]

என்று புலம்பித் தவிக்கின்றாள். வசந்தவல்லியின் இந்நிலைகண்டத் தோழியர் அவளது காமத்தீயை அணைக்க,

“மேனியார் அழகு தோற்ற
மின்னனார் விழுந்த பேரைக்
கூனைகொண் டமிழ்த்து வார்போல்
குளிர்ச்சியால் வெதுப்பு வாரே”[87]

என்று அவளின் இந்நிலையை மாற்ற, கிணற்றில் விழுந்தவரைக் காப்பாற்றுவதற்கு நீர் இரைக்கும் சாலைக் கிணற்றுக்குள் செலுத்தி மேலும் அவரை நீருக்குள் அழுத்துவது போல, அவளின் காமத்தீயைப் போக்க, மேலும் காமத்தைத் தூண்டும் குளிர்ச்சியான சந்தனம் போன்ற பொருள்களைப்பூசி அவளது புலம்பலை மாற்ற முயலுகின்றனர். பிறகு நன்னகரில் குறும்பலாவின் அடியில் வீற்றிருக்கும் ஈசனின் திருமுடியில் குடிகொண்டிருக்கும் நிலவின்மீது சினம் கொண்டு,

“பெண்ணிலே குழல்மொழிக்கோர்
பங்குகொடுத்தவர் பிரமையாலே
மண்ணிலே மதிமயங்கிக் கிடக்கின்றேன்
உனக்கும் மதிமயக்கம்தானோ
கண்ணிலே நெருப்பை வைத்துக்
காந்துவாருடன்கூடிக் காந்தி காந்தி
விண்ணிலே நெருப்பை வைத்தாய் தண்ணிலாக்

[86] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 40.
[87] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும் ப. 43.

கொடும்பாவி வெண்ணிலாவே”[88]

என்றும்,

“ஆகடியம் செய்தல்லவோ வெண்ணிலாவே – நீதான்
ஆட்கடியன் போல்குறைத்தாய் வெண்ணிலாவே
மோகன்வரக் காணேனென்றால் வெண்ணிலாவே – இந்த
வேகமுனக் கானதென்ன வெண்ணிலாவே”[89]

என்றும் பலவாறு வெண்ணிலாவைப் பழித்துரைத்தும், மன்மதனைப் பழித்துரைத்தும் புலம்பிய வசந்தவல்லி, தோழியைத் தூதாக அனுப்புகிறாள். தூது போகும் தோழியிடம்,

“உறங்க உறக்கமும் வாராது மாயஞ் செய்தாரை
மறந்தால் மறக்கவும் கூடாது பெண்சென்மம் என்று
பிறந்தாலும் பேராசை ஆகாது அஃ்த றிந்துஞ்
சலுகைக் காரர்க்கு ஆசையாயினேன் இப்போது.....

வந்தாலிந் நேரம்வரச் சொல்லு வாரா திருந்தால்
மாலையா  கிலும்தரச் சொல்லு குற்றாலநாதர்
தந்தாலென் நெஞ்சைத் தரச்சொல்லு தாரா திருந்தால்
தான்பெண்ணாகிய பெண்ணை நான் விடேன் என்று”[90]

குற்றாலநாதரிடம் தூது சென்று அவரை நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் என் நிலையைக் கூறுவாயாக! என்று புலம்பிக் கொண்டிருக்கும் வேளையிலேயே வஞ்சிக் கொடி போன்ற குறவஞ்சி, காதல் நோய் தீர்க்கும் மருந்தாக வந்தாள்.

**குற்றாலக் குறவஞ்சி பாத்திரப் படைப்பு**

**குறவஞ்சி சொல்லடையின் பொருள்**

‘குறவஞ்சி’ என்னும் சொல்லுக்கு, “க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, தலைவன் உலாவரும் போது அவன் மீது காதல் கொண்டு தவிக்கும் பெண்ணுக்குக் குறத்தி அவளது எதிர் காலத்தைப்பற்றிக் குறி சொல்வதாக

[88] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 45.
[89] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 46.
[90] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 59.

அமைத்துப் பாடப்படும் ஒரு சிற்றிலக்கிய வகை"[91] என்று பொருள் கூறுகிறது.(A poem in a kuravan woman is represented as describing to a maiden the future course of her love by reading her palm) இதே கருத்தை வழியுறுத்தும் விதமாக "நர்மதாவின் தமிழ் அகராதி, 'குறவஞ்சி' என்னும் சொல்லுக்குத் தலைவன் உலா வரும் சமயத்தில் அவன் மீது காதல் கொண்டு தவித்திடும் ஒரு பெண்ணுக்குக் குறத்தி குறி சொல்லுவதாக அமைத்துப் பாடும் ஒரு சிற்றிலக்கிய வகைப் பாடல்"[92] ( A poem in which a kurava woman is represented as describing to the love – sick maiden the future course of her love by reading her palm) என்று பொருள் கூறுகிறது. கவிராயரும் இவ்விரு அகராதிகளும் உணர்த்தும் பொருளிலே குறவஞ்சி என்னும் சொல்லடையைப் படைத்துள்ளார்.

**குறவஞ்சியின் தோற்றமும் வருகையும்**

குற்றாலக் குறவஞ்சியில் தலைவிக்கு அடுத்தபடியான தலை சிறந்த பாத்திரமாகக் கவிராயர் படைத்திருப்பது குறவஞ்சி என்னும் பாத்திரமே ஆகும். குறவஞ்சி என்னும் பாத்திரம் நாடகத்தின் இடைப்பகுதியில் வந்தாலும், நாடகத்தின் இறுதி வரையிலும் நின்று வெற்றியுடன் நடத்திச் செல்லும் பாத்திரமாக குறவஞ்சி பாத்திரம் விளங்குகிறது. இக்குறவஞ்சியில், குறவஞ்சியின் தோற்றத்தை அவளது பாத்திரத்திற்கேற்ப அழகுபட வருணிக்கும் விதமாக,

"ஆடல்வளை வீதியிலே அங்கணர்முன்
போட்டசங்கம் அரக்கு வீட்டில்
தேடல்வளைக்கும் குறிபோல் கூடல்வளைத்
திருந்துவல்லி தியங்கும் போதில்
கூடல்வளைக் கரம்அசைய மாத்திரைக்கோல்
ஏந்திமணிக் கூடை தாங்கி
மாடமறு கூடுதிரி கூடமலைக்
குறவஞ்சி வருகின்றாளே"[93]

---

[91] . க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.339.
[92] . நர்மதாவின் தமிழ் அகராதி, ப.29.
[93] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.66.

என்று குறவஞ்சியின் வருகையை விளக்குகிறார் கவிராயர். வளையல்கள் நிரப்பிய தன் கைகளை அசைத்தவாறே மந்திரக் கோலினை ஏந்திக் கொண்டும்; மணிக் கூடையினை இடுப்பிலே தாங்கிக் கொண்டும்; திருநீற்றை நெற்றியிலே போட்டுக் கொண்டும்; பாசிமணி மற்றும் குன்றிமணி மாலையை அணிந்து கொண்டும்; கண்டவர் போற்றும் வடிவோடும்; பூத்த மலர் கொடியானது அப்படியே நடந்து வருவது போலவும்; சொக்கட்டான் காய்களைப் போன்ற முலைகளை உடையவளும், நுட்பமான இடையையுடையவளும், வில்போன்ற நெற்றியையுடையவளும், முல்லையரும்புகளைப் போன்ற பற்களையுடையவளும், பின்நடப்பதைக் குறித்துக் குறி சொல்லுவளுமாகிய, இமயமலையில் பிறந்த குழல்வாய்மொழிச் செல்வியாகிய, வஞ்சிக் கொடியான குறவஞ்சி நடந்து வரும் எழில்மிகு கோலத்தோடு குறி சொல்ல வரும் குறவஞ்சியின் தோற்றத்தை,

> “சலவை மருங்கில் சாத்திய கூடையும்
> வலதுகைப் பிடித்த மாத்திரைக் கோலும்
> மொழிக்கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்
> விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டும்மாய்
>
> உருவசி அரம்பை கருவமும் அடங்க
> முறுவலின் குறும்பால் முனிவரும் அடங்கச்
> சமனிக்கும் உரையால் சபையெல்லாம் அடங்கக்
> கமனிக்கு மவரும் கடைகணால் அடங்கக்
> கொட்டிய உடுக்குக் கோடங்கிக் குறிமுதல்"[94]

என்று கற்பனைத் திறத்தால் ஏற்றிக் கூறுகிறார் கவிராயர்.

**வசந்தவல்லி - குறவஞ்சி உரையாடல்**

வஞ்சிக்கொடியைப் போன்றவளும், உருக்கிவிட்ட பொன்னைப் போன்றவளும், எதற்கும் அஞ்சாத திண்ணிய மனதினை உடையவளும், குறும்பலாவின் அடியில் வீற்றிருக்கின்ற ஐந்து சடைமுடிகளை உடைய

[94] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.68.

மெய்யுணர்வினனும், குற்றமில்லாதவனுமாகிய திரிகூட நாதரை நெஞ்சில் ஏற்றி, காதல் கொண்டவளுமாகிய வசந்தவல்லியின் காதல் நோய் தீர்க்கும் மருந்தாக, உண்மையான குறி சொல்ல குறவஞ்சி வந்தாள்.

வசந்தவல்லி : வஞ்சிக்கொடி போல வந்த குறவஞ்சியைப் பார்த்து மன மகிழ்சி கொண்டு, நாட்டு வளம், நகர் வளம், தலவளம் பற்றி, சந்தமுலை துவளுமிடைத் தவளநகைப் தையலே உன் சொந்தமலை எந்தமலை அந்தமலை வளம் எனக்குச் சொல்லென் றாளே! என்று வசந்தவல்லி கேட்கிறாள்.

குறவஞ்சி : அதற்கு மறுமொழியாக்க் குறவஞ்சி, ஆண் குரங்குகள் பலவகையான பழங்களைப் பறித்து, பெண் குரங்குகளோடு உண்டு, கொஞ்சிக் கொண்டிருக்கும்; அப்போது அம்மந்திகள் சிந்தும் கனிகளுக்காகத் தேவர்கள் ஏங்கிக் கொண்டிருப்பார்கள்; வேடுவர்கள் தம் கண்களால் உறுத்து நோக்கி, அந்த வானவர்களைக் கீழே வருமாறு அழைத்துக் கொண்டிருப்பார்கள்; வானிலே உலாவும் சித்தர்கள் வந்து காயசித்தி மூலிகைகளை வளர்த்துக் கொண்டிருப்பார்கள்; தேனருவியானது வானைத் தொடும் அளவிற்குத் தன் அலையை எழுப்பி, வானில் ஒழுகிக் கொண்டிருக்க, அந்த வழியாகத் தேரிலே செல்லும் செங்கதிரோனின் தேர் குதிரைகளின் கால்களையும் சக்கரத்தையும் வழுக்கி விழச் செய்யும்; முழக்கமிடும் நீர் வீழ்ச்சியானது தானும் கழங்காடுவதுபோல முத்துக்களைச் சொரிந்து கொண்டிருக்கும்; கானவர்களின் முற்றங்களிலெல்லாம் பரவி பெண்களின் சிற்றில்களையும் வருடிச் செல்லும் என்று குறவஞ்சி விளக்குகிறாள். மேலும் மலைச் சாரலிலே கிழங்குகளைக் கிள்ளி எடுத்தும், தேன் இறால்களை எடுத்தும் மலை வளங்களைப் பாடி நடனமாடுவோம்; யானைகளின் கொம்புதனை ஒடித்துப் பூண்கட்டி, வருத்த தினையினை உரலிலே இட்டு இடிப்போம்; குரங்கு கூட்டங்கள் இனிமை தரும் பலா மரங்களின் பழங்களைப் பறித்துப் பந்து விளையாடும்; செண்பக மலரில் பெருகியிருக்கும் தேனானது வானுலகிற்கும் சென்று பரவும்; படமெடுத்து ஆடும் முதிர்ந்த நாகப் பாம்புகள் கக்கும் நாகரத்தினக் கற்கள் கோடிகோடியாக ஒளிபரப்பிக் கொண்டிருக்கும்; வெண்ணிலாவைத் தாம் உண்ணும் கவளம் என

நினைத்து வழி மறைத்து நிற்கும்; தினை விதைப்பதற்காகக் காடுகளை அழிக்க நெருப்பிடும்போது சந்தனம், குங்குமம் மணங்கமலும்; காடுகள் முழுவதும் வரையாடுகள் துள்ளி விளையாடும்; காகங்கள் கூட நுழைய முடியாத கானகத்தில் மேகக் கூட்டங்கள் நுழைந்து படிந்து கொண்டிருக்கும்; அருளோடு அடியவர்களுக்கு வழங்கும் கொடைத்தன்மையுடைய குற்றாலநாதர் குடிகொண்டிருக்கும் மலை குற்றால மலையாகும் என்று விளக்கினாள்.

வசந்தவல்லி:இதைக் கேட்ட வசந்தவல்லி, 'மழைத் துளியைக் கண்ட மரத்தைப்போல' மகிழ்ச்சி கொண்டு,

> "கார்வளர்க் குழலார்க் கெல்லாம்
> கருதிநீ விருந்தாச் சொல்லும்
> சீர்வளர்க் குறியின் மார்க்கம்
> தெரியவே செப்புவாயே"[95]

என்று வேண்டிக் கேட்கிறாள்.

குறவஞ்சி : அதற்கு மறுமொழியாகக் குறவஞ்சி தனது குறியின் சிறப்புகளைக் கூறும் விதமாக, வித்தாரம் என் குறி அம்மே! மணி முத்தாரம் பூணும் முகிழ்முலைப் பெண்ணே வித்தாரம் என் குறி அம்மே!

> "என்ன குறியாகிலும் நான் சொல்லுவேன் அம்மே – சதுர்
> ஏறுவேன் எதிர்த்தபேரை வெல்லுவேன் அம்மே! "[96]

என்று தனது குறியின் சிறப்புகளைக் கூறி, "முத்திரை மோதிரம் இட்ட கையைக் காட்டாய் அம்மே! முன்கை மூதாரி இட்ட கையைக் காட்டாய் அழகிய கடகம் புனைந்த கையைக் காட்டாய் பொன்னின் அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய்" என்று பலவாறு வசந்தவல்லியின் கையைப் புகழ்ந்து, குறி சொல்லத் தொடங்குகிறாள்.

---

[95] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.95.
[96] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.98.

"சொல்லக் கேளாய் குறி சொல்லக் கேளாய் – அம்மே
தோகையர்க் கரசே குறி சொல்லக் கேளாய்
முல்லைப்பூங் குழலாளே நன்னகரில் வாழ் முத்து
மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்..."[97]

என்று வசந்தவல்லியைப் பார்த்து விளித்துச் சொல்கிறாள் குறவஞ்சி.

வசந்தவல்லி : அதைக் கேட்ட வசந்தவல்லி நன்று! நன்று! குறவஞ்சி! நீ பெரிய நாடகக்காரியாக இருக்கிறாய். நீ சொல்வதெல்லாம் நன்றாக இருக்கிறது. காதல் மயக்கம் உள்ளவர்களுக்கு ஏற்றாற்போல் பேசுகிறாய் என்பதை நான் அறிய மாட்டேன் என்று நினைத்தாயோ? நன்றாக ஒன்று விடாமல் குறி சொல்லி வந்த நீ, சொல்ல வந்ததைச் சொல்லாமல் மழுப்புகிறாய் அதனால் குறியை குழப்பி விட்டாய். திருவிழாவில் வரும் படையைக் கண்டு அச்சமுற்ற பெண்களுக்கு இந்த மயக்கமும் கிறுகிறுப்பும் வருமோ? இன்றுவரை உடலில் குளிரும் காய்ச்சலும் இருக்குமோ? பின்னர் எந்த வகையினால் இவை ஏற்பட்டது என்பதை ஆராய்ந்து குறி சொல்லுவாயாக என்று கூறுகிறாள்.

குறவஞ்சி : வசந்தவல்லியின் காதல் நோயினை 'இலைமறைக் காயாக' உணர்த்திய குறவஞ்சி, வசந்தவல்லியின் குழப்பத்தைத் தீர்க்கும் விதமாகச் சட்டென்று போட்டுடைக்கிறாள் இப்படியாக,

"வாகனத்தில் ஏறிவரும் யோகபுருடன் – அவன்
வங்காரப் பவனியாசைப் பெண்களுக் குள்ளே
தோகைநீ அவனைக்கண்டு மோகித்தாய் அம்மே – அது
சொலப் பயந்திருந்தேன் சொல்வேன் முன்னே
...............................................
காய்ச்சலல்ல காய்ச்சலல்ல காமக் காய்ச்சல்

[97] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.107.

மோகினியே உன்னுடைய கிறுகிறுப்பெல்லாம் – அவன்

மோகக்கிறு கிறுப்படி மோகனக் கள்ளி!”[98]

என்றும், காமக் கள்ளி என்றும் சொல்லுகிறாள்.

வசந்தவல்லி : அதற்கு வசந்தவல்லி இந்த நன்னகருக்குள்ளே கன்னியாக இருக்கிற என்னைப் பார்த்து ‘காமக் கள்ளி’ என்று கூறிவிட்டாயே என்றது, அப்படி நீ கூறியது உண்மையென்றால் அவனுடைய மாலையையும் ஊரையும் பெயரையும் இப்பொழுதே கூறக் கேட்டு அடம்பிடிக்கிறாள்.

குறவஞ்சி : அதற்கு மறு மொழியாகக் குறவஞ்சி, பெண்ணுக்கு அரசியே! உன்னைப்போல அவன் எனக்கு அறிமுகமானவனோ? ஊரும் பேரும் குறியில் சொல்லுவது சிறப்பாகுமா? இருந்தாலும் உனக்காக நான் சொல்லுகிறேன் என்று,

“...............................................அவன்

பெண்சேர வல்லவன் காண் பெண்கட்கரசே”[99]

என்று குறிப்பால் உணர்த்திக் கூறுகிறாள் குறவஞ்சி.

வசந்தவல்லி : குறத்தியின் இப்பேச்சைக் கேட்ட வசந்தவல்லி கோபம் கொண்டு, குறத்தியே! உனக்கு என்ன திமிரு! உன் இளமையின் குறும்பா? வாய்க் கொழுப்பா? குறி சொல்லும் ஆற்றலில் உள்ள வாய்ச் செருக்கா? மதிக்காமல் என்முன்னே அவனை ‘பெண்சேர வல்லவன்’ என்று கூறுகிறாய் என்று,

“கண்மயக்கால் மயக்காதே உண்மை சொல்லடி – பெருங்

கானமலஒக் குறவஞ்சி கள்ளி மயிலி”[100]

என்று கோபமாக கடிந்து கொள்கிறாள்.

குறவஞ்சி : வசந்தவல்லியைச் சாந்தப்படுத்தும்விதமாக, குறவஞ்சி, பெண்ணரசியே!

---

[98] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.109.
[99] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.110.
[100] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.110.

"பெண்ணரசே பெண்ணென்றால் திரியும் ஒக்கும்
பெண்ணுடனே சேரவென்றால் கூடவும் ஒக்கும்
திண்ணமாக வல்லவனும் நாதனுமொக்கும் பேரைத்
திரிகூட நாதனென்று செப்பலாம் அம்மே"[101]

என்றும்,

"நன்னகரில் ஈசருன்னை மேவ வருவார் – இந்த
நாணமெல்லாம் நாளை நானும் காணவேபோறேன்
கைந்நொடியில் பொன்னிதழி மாலைவருங்காண் – இனி
கக்கத்தில் இடுக்குவாயே வெட்கத்தை அம்மே"[102]

என்றும் கூறுகிறாள். 'திரிகூடநாதர்' என்று குறத்தி கூறியதும், மாணிக்க அணிகலன்களை அணிந்துள்ள வசந்தவல்லியின் முகத்தில் நாணம் கொண்டு தலை கவிழ்ந்தாள். 'நன்னகரிலே ஈசன் உன்னைத் தழுவி மகிழ விரைவில் வருவார். அப்போது இந்த நாணத்தின் அழகையெல்லாம் நாளை நானும் காணவே போகிறேன். நொடிப்பொழுதில் பொன்போன்ற இதழ்களையுடைய கொன்றை மாலை உனக்கு வந்து சேருவதைக் காண்பாயாக. அப்போது உன் வெட்கத்தை எல்லாம் கக்கத்தில் அடக்கிக் கொள்' என்று வசந்தவல்லியைக் கேலி பேசுகிறாள் குறவஞ்சி. திருக்குற்றாலநாதர்மேல் கொண்ட காதல் நோய் தீர்க்கும் சிரஞ்சீவி மருந்தாக வந்த குறவஞ்சிக்கு தான் சேர்த்து வைத்திருந்த அணிகலன்கள் அனைத்தையும் அணிவித்து மகிழ்வுடன் வசந்தவல்லி, குறவஞ்சியை அனுப்பி வைக்கிறாள்.

இன்று எளியவளாகக் கருதப்படும் குறத்தியைக் குறி சொல்லும் தமிழகக் கலையரசியாக்கி, கற்பொழுக்கத்தால் உயர்ந்தவளாக்கி, காவியத் தலைவியுமாக ஆக்கியுள்ளார் என்று திரிகூடராசப்பக் கவிராயரைத் தமிழறிஞர்கள் பாராட்டி உரைப்பதற்குக் குறவஞ்சியின் பாத்திரப் படைப்பின் சிறப்பே காரணம் ஆகும்.

---

[101]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.110.
[102]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.111.

**குற்றாலக் குறவஞ்சி சிங்கன் கதாப் பாத்திரம்**

'சிங்கன்' என்னும் சொல்லுக்கு, நர்மதாவின் தமிழ் அகராதி "குறவன்"[103] எனப் பொருளைக் கூறுகிறது. 'குறவன்' என்னும் சொல்லுக்கு, 'க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, "பாசி, ஊசி விற்றல், காடை, கவுதாரி முதலிய பறவைகளை வேட்டையாடுதல் முதலியவற்றைத் தொழிலாகக் கொண்ட ஊர் ஊராகச் சென்று வாழும் ஓர் இனத்தைச் சேர்ந்தவன்"[104] என்று பொருள் கூறுகிறது. 'குளுவன்' என்னும் சொல்லுக்கு, 'நர்மதாவின் தமிழ் அகராதி, 'வேட்டைக்காரனுடைய உதவியாளன்' எனப் பொருள் கூறுகிறது. அப்பொருள்களுக்கு ஏற்றது போலவே இக்குறவஞ்சி நூலிலும் கவிராயர் சிங்கனது பாத்திரத்தை வேட்டையாடுவதில் வல்லவனாகப் படைத்திருக்கிறார். குறவஞ்சிகளில் கட்டியங்காரன், சிங்கி பாத்திரம் ஒரு நகைச் சுவைப் பாத்திரமாக விளங்குகிறது.

**சிங்கனது வருகையும், தோற்றமும்**

சிங்கனது வருகையை அறிமுகம் செய்து வைக்கும் கவிராயர், சிங்கங்களை ஒத்த வலிமையும், துடிப்பும் மிக்கவனாகச் சிங்கன் திருக்குற்றாலக் குறவஞ்சியில் அறிமுகமாகும்போதே, மிடுக்கான புலி, கரடி போன்றவை நடுநடுங்க வெறித்து நோக்கி தொக்கான நடை நடந்து,

"மாமாலைப் பூண்டசிங்கன் வங்கணச்சிங்
கியைத்தேடி வருகின்றானே"[105]

என்று சிங்கியைத் தேடி அலைந்து கொண்டு வருவதாக அறிமுகப்படுத்துகிறார். மேலும் சிங்கனது தோற்றத்தை அறிமுகப்படுத்தும் கவிராயர்,

"வக்காவின் மணிபூண்டு கொக்கிறகுச்
சிகைமுடித்து வரித்தோல் கச்சைத்

---

103 . நர்மதாவின் தமிழ் அகராதி, ப.352.
104 . க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.339.
105 . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.113.

தொக்காக வரிந்திறுக்கித் தொடர்புலியைக்
கண்டுறுக்கித் தூணி தூக்கிக்
கைக்கான ஆயுதங்கள் கொண்டுசில்லிக்
கோலெடுத்துக் கண்ணி சேர்த்துத்
திக்கடங்காக் குளுவசிங்கன் குற்றாலத்
திரிகூடச் சிங்கன் வந்தான்”[106]

என்றும், பறவையைப் பிடிப்பதற்கு வேண்டிய ஆயுதங்களைத் தோளில் போட்டுக் கொண்டு எட்டுத் திசைகளிலும் அடங்காத ஆற்றலுடையவனாகச் சிங்கன், சிங்கியைத் தேடிவருவதாகக் கவிராயர் அறிமுகப்படுத்துகிறார்.

**சிங்கன் வேட்டையாடும் காட்சி**

வேட்டையாடுவதில் வல்ல சிங்கன், வேட்டையாடும் திறனைக் கற்றுக் கொண்டு பறவை வேட்டையின் போது சிங்கன் நாய் போலத் தடம் பார்த்தும், பூனை போலப் பதுங்கியிருந்தும், நரி போல பம்மிக் கொண்டும், பேய் போலப் பின் தொடர்ந்தும் வேட்டையாடும் குளுவன், நான் தானே என்று தன்னை அறிமுகம் செய்து கொள்கிறான். பிறகு ஊர்க்குருவிகளையும், உள்ளானையும், வலியானையும், கரிக் குருவிகளையும், கானான் கோழியையும் பிடிப்பதற்குப் பலவகையான கண்ணிகளையும், பொறிகளையும், வில்களையும் எடுத்துக் கொண்டு கவண்டன், மல்லன், ஏகன், நாகனை அழைத்துக் கொண்டு, கொட்டகைக்கு நட்டிருக்கும் தூண்களைப் போன்ற நீளமான கால்களையும், ஒட்டகம் போன்று நீண்ட உடம்பும் உடைய நூவன், கல் குடித்து, ஈ மொய்க்கின்ற வாயுடன், குற்றாலருடைய விளை நிலங்களில், பாவனையாகப் பலவிதமான பறவைகளைப் போல ஒலி எழுப்பி, மாமரத்தின்மீது ஏறி நின்று அவ்வொலியைக் கேட்டு வரும் பறவைகளைப் பார்க்கிறான். அவனது குறளைக் கேட்ட பறவைகளான, காடைகள், கம்புள்கள், காக்கைகள், கொண்டைக் குலாத்திகள், மாடப்புறாக்கள், மயில்கள், கொக்குக் கூட்டங்கள் எல்லாமும்,வெள்ளைப் புறாக்கள், சகோதரப் பறவைகள், ஆந்தைகள், மீன்கொத்திப் பறவைகள்,

[106] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.122.

மரங்கொத்திப் பறவைகள், பஞ்சவர்ணக் கிளிகளின் கூட்டம், நாகணவாய்ப் பறவைகள், உள்ளான், சிட்டு, வலியான், அன்றில் போன்ற பறவைகள்,

"ஓராயிர முகமாய் ஓங்கியகங் காநதிபோல்
பாரார் பலமுகமும் பட்சிநிரை சாயுதையே"[107]

என்று சிங்கனின் வேட்டையாடும் திறத்தால், பட்சிகள் யாவும், 'சிற்றாற்று வெள்ளம் போல' அணியணியாக, மேலப் பாட்டப் பற்று, நெடிய சுண்டைப் பற்று, மேட்டுப் பற்று, முனிக் குருக்கள் பற்று, ஏரிவாய்ப் பற்று, சீவல பேரிப் பற்று, வடகால் பற்று, இராசகுல ராமன் பற்று, கண்டுகொண்டான் பற்று, மேலை மாரிப் பற்று, கீழைமாரிப் பற்று போன்ற விளை நிலப்பகுதியிலெல்லாம் இருந்து பறவைகள் வந்து சாய்வதாகவும்,

"பாரைக் குளந்தெற்கு மேல்வழு திக்குளம்
பாட்டப் பெருங்குளம் செங்குறிஞ்சி குளம்
ஊருணிப் பற்றும் திருப்பணி நீளம்
உயர்ந்த புளியங் குளத்து வரைக்குளம்
மாரனே ரிக்குளம்"[108]

போன்ற இடங்களிலிருந்து வந்து சிங்கன் விரித்த வலையில் சாய்கிறது என கவிராயர் விளக்குகிறார்.

**சிங்கனின் புலம்பல் காட்சி**

சிங்கன் தான் வேட்டையாடும் காட்டை நோக்கும் நேரத்தில், அன்ன சேவல் ஒன்று தன் பேடையுடன் இணைவதைக் கண்டான், அப்போது தன் மனைவி சிங்கியின் நினைவு வர மயங்கி நிற்கும் சமயத்தில்,

---

[107]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.123.
[108]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.123.

"...................அன்னப் பேட்டைச்
சேவல்போய்ப் புணரக் கண்டான்
சிங்கிமேல் பிரமை கொண்டான்"[109]

என்றும்,

"சிங்கியைக் காணேனே! என் வங்கணச்
சிங்கியைக் காணேனே!

சிங்கியைக் காமப் பசுங்கிளிப் பேடையைச்
சீர்வளர் குற்றாலர் பேர்வளம் பாடிய
சங்கீத வாரியை இங்கித நாரியைச்
சல்லாபக் காரியை உல்லாச மோகனச்"[110]

சிங்கியைக் காணாமல்,

"எங்கேதான் போனாள் ஐயே! என்சிங்கி இப்போது
எங்கேதான் போனாள் ஐயே!

வேளாகிலும் மயக்குவள் வலியத் தட்டிக்
கேளாமலும் முயக்குவள்
ஆளாய் அழகனுமாய் யாரைஎங்கே கண்டாளோ
தோளாசைக் காரிசிங்கி சும்மா கிடக்க மாட்டாள்"[111]

என்று சிங்கியைக் காணாது புலம்பித் தவிக்கிறான். இச்சமயத்தில் நூவனையும் தேடச் சொல்லுகிறான். அதற்கு நூவன் குறவஞ்சியின் அடையாளங்களைக் கேட்க, சிங்கியின் அடையாளத்தை சிங்கன் தன் காதல் ததும்ப,

"கண்கள் இரண்டும் அம்புக் கணைபோல் நீண்டிருக்கும்
கையத்தனை அகலம் காணுமடா

[109]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.141.
[110]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.152.
[111]. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.159.

பெண்கள் மயக்குமவள் விரகப்பார்வை சிங்கி
பிடித்தால் மதப்பயலும் பெலப்பானோ!...

விடையில் வரும்பவனி உடையர் திருக்குற்றாலர்
சடையில் இளம்பிறைபோல் தனி நுதலாள்
நடையில் அழகும் இரு துடையில் அழகும்அவள்
உடையில் அழகுமென்னை உருக்குதையோ!”[112]

என்று அடையாளத்தைக் கூறுகிறான், பின்னர் சிங்கன், திருவண்ணாமலை, காஞ்சி, திருக்காளத்தி, சீர்காழி, சிதம்பரம், திருவாரூர், காசி, குருநாடு, கேதாரம், கோல்கொண்டா, சீரங்கம், கோகரணம், செகநாதம், கும்பகோணம், அரியலூர், திருவானைக்கா, திருசிராப்பள்ளி, மதுரை போன்ற பல ஊர்களில் தேடி இறுதியாகத் திரிகூட மலையிலே காண்கிறான்.

**சிங்கியைக் கண்ட சிங்கனது கூடலும், காதலும்**

நாடு நகர் முழுவதுமாகச் சிங்கியைக் காணாமல் புலம்பித் தேடித் திரிந்த சிங்கன், திரிகூடமலையிலே ‘மாண்டவர் மீண்டதுபோல’ காணாமல் தேடிய, கண்கண்ட ஓவியமான சிங்கியைக் கண்டு, காதல் கொண்டு, ‘தரிகொள்ளாமல் கை கலக்கும் போது கரை குறுக்கிட்டாற்போல’ வீதி வந்து குறுக்கிட்டதால் வெட்கம் கொண்ட சிங்கிதனை நோக்கி,

“இங்கே வாராய் மலர்ச் சங்கை தாராய் மோகச்
சங்கை பாராய் காமச் சிங்கியாரே!
பாதம் நோமே நொந்தால் மனம் பேதமாமே
பாதநோக நிற்ப தேது பாவமினிக்
கூதலோ கொடிது காதலோ கடினம்
வருக்கை மூலர்வட அருவித் திருக்குற்றாலர்
பெருக்கம் பாடிக்கொள்ள மருக்கள் சூடிக் கொள்ள
ஒருக்கால் ஊடிக் கொள்ள இருக்கால் கூடிக் கொள்ள”[113]

---

[112] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.155.
[113] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.162.

என்று சிங்கியைத் தன்னருகே அழைக்கின்றான். பாதம் நோகுமே! உன் பாதம் நொந்தால் என் உள்ளம் வருந்துமே! இனியும் பொருத்திருப்பது பாவம். குளிர் மிகக் கொடுமையாக உள்ளது. என் காதலோ என்னைத் துன்புறுத்துகிறது என்றும், குறும்பலாவின் அடியில் வீற்றிருப்பவரும், வடவருவியினை உடையவருமாகிய குற்றாலநாதரின் பெருமைகளைப் பாடிக் கொள்ளலாம். மணமிகுந்த மலர்களைச் சூடிக் கொள்ளலாம். ஒருமுறை ஊடிக் கொள்வோம், அதற்கு ஈடாக இருமுறை கூடிக் கொள்வோம். என் கண்ணே இங்கே வருவாயடி என்று காதல் மோகத்தில் கூத்தாடுகிறான்.

**சிங்கன் சிங்கி உரையாடல்**

சிங்கியைக் கண்ட சிங்கன் ‘மலர்தனில் தேனைக் கண்ட தேனீயைப்போல’ ஆடிப் பாடி கூத்தாடுகிறான். குறத்தியின்மேல் கிடக்கும் ஆபரண அணிகலன்களைப் பார்த்த சிங்கன் பலவிதமாக கேள்வி கேட்க இருவருக்கும் இடையே தர்க்கம் நடை பெறுகிறது.

"சிங்கன் : “இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல் எங்கே நீ நடந்தாய் சிங்கி?

சிங்கி : கொத்தார் குழலார்க்கு வித்தார மாகப் குறிசொல்லப் போனனடா சிங்கா!

சிங்கன் : காலுக்கு மேலே பெரிய விரியன் கடித்துக் கிடப்பானேன் சிங்கி?

சிங்கி : சேலத்து நாட்டில் குறிசொல்லிப் பெற்ற சிலம்பு கிடக்குதடா!

சிங்கன் : நீண்டு குறுகியும் நாங்கூழு போல நெளிந்த நெளிவென்னடி சிங்கி?

சிங்கி : பாண்டிய நார்மகள் வேண்டும் குறிக்காக பாடகமிட்டதடா சிங்கா!

சிக்கன் : ஊருக்கு மேற்கே உயர்ந்த அரசிலே சாரைப்பாம் பேது பெண்ணே சிங்கி?

சிங்கி : சீர்பெற்ற சோழன் குமாரத்தி யார்தந்த செம்பொன் அரைஞாணடா சிங்கா!

சிங்கன் : “வள்ளிக் கொடியிலே துத்திப்பூப் பூப்பானேன் சிங்கி?

சிங்கி : காதில் வங்காளத் தாரிட்ட சிங்காரக் கொப்படா சிங்கா!

சிங்கன் : கட்டிக் கொண்டே சற்றே முத்தம் கொடுக்கவா சிங்கி?

சிங்கி : நடுப் பட்டப் பகலில் நான் எட்டிக் கொடுப்பேனோ சிங்கா!

சிங்கன் : முட்டப் படாமுலை யானையை முட்டவோ சிங்கி?

சிங்கி : காமம் மட்டுப் படாவிடில் மண்ணோடே முட்டடா சிங்கா!

சிங்கன் : சேலை உடைதனைச் சற்றே நெகிழ்க்கவோ சிங்கி?

சிங்கி : சும்மா நாலுபேர் முனெனை நாணம் குழையாதே சிங்கா!

சிங்கன் : நாக்குத் துடிக்குது உன் நல்வாய் இதழுக்குச் சிங்கி!

சிங்கி : உன்றன் வாய்க்கு ருசிப்பது மாலைக்கள் அல்லவோ சிங்கா!

சிங்கன் : ஒக்கப் படுக்க ஒதுக்கிடம் பார்க்கவோ சிங்கி?

சிங்கி : பருங் கொடுக்குப் படுக்கக் குறியிடம் பாரடா சிங்கா!

சிங்கன் : நன்னகரில் குற்றால நாதரை வேண்டினேன் சிங்கி!

சிங்கி : மணிப் பன்னகம் பூண்டாரைப் பாடிக் கொள் வோமடா சிங்கா!

சிங்கன் : பாடிக்கொள் வாரெவர் ஆடிக்கொள் வாரெவர் சிங்கி!

சிங்கி : நீதான் பாடிக்கொண்டாற் போதும் ஆடிக்கொள் வேனடா சிங்கா!

சிங்கன் : பார்க்கப் பொறுக்குமோ பாவியேன் ஆவிதான் சிங்கி!

சிங்கி : முன்னே ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறார்களோ சிங்கா!”[114]

---

[114] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், பக். 166 – 169.

என்று இருவருக்கும் இடையே காரசாரமான தர்க்கம் நடைபெறுகிறது. பின்னர் இருவரும் இணைந்து, இறைவனை வணங்கி, ஆடிப்பாடி மகிழ்ந்து,

“சுற்றாத ஊர்தோறும் சுற்ற வேண்டாம் புலவீர்
குற்றாலம் என்றொருகால் கூறினால் – வற்றாத
வடவருவி யானே மறுபிறவிச் சேற்றில்
நடவருவி யானே நமை.
கொற்றமதிச் சடையானைக்
குறும்பலா உடையானை
வெற்றி மழுப் படையானை
வாழ்த்துகிறேன்…

காமனுக்கும் பூமனுகும்
கன்னி தெய்வ யானைக்கும்
மாமன் எனவே பகரும்
வள்ளல்தனை வாழ்த்துகிறேன்…

ஆதிமறை சொன்னவனை
அனைத்துயிர்கும் முன்னவனை
மாதுகுழல் வாய்மொழிசேர்
மன்னவனை வாழ்த்துகிறேன்.”[115]

என்று வாழ்த்தி வணங்கி, கச்சு பொருந்தியிருக்கிற தனபாரங்களை உடைய குழல்வாய் அம்பிகையே வாழ்க! அவளை மணம் செய்ய இறைவன் சூட்டிய மலர்மாலையே வாழ்க! திரிகூடத்து மக்கள் வாழ்க! அகத்திய குருமுனி சொன்ன பேராகிய குற்றாலநாதர் நாமம் வாழ்க! அரசர்களின் செங்கோலாட்சி வாழ்க! குற்றாலத்தின்பால் அன்புடைய அனைவரும் நீடூழி வாழ்க! என்று வாழ்த்தி திருக்குற்றாலக் குறவஞ்சி என்னும் நாடகத்தை நிறைவு செய்கின்றனர்.

திருக்குற்றாலக்குறவஞ்சிப் படைத்த திரிகூடராசப்பக் கவிராயர் கட்டியங்காரன் பாத்திரம், கட்டியங்காரனின் தோற்றம், கட்டியங்காரன்

---

[115] . புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், பக். 171 – 173.

பாட்டுடைத் தலைவரை அறிமுகம் செய்தல், குற்றாலநாதர் வருகையைப் புகழ்ந்துரைத்தல், கதைத் தலைவர் குற்றாலநாதர் கதாப் பாத்திரம், கதைத் தலைவி வசந்தவல்லி கதாப் பாத்திரம், வசந்தவல்லியின் தோற்றம், வசந்தவல்லியின் காதல், குறவஞ்சியின் தோற்றமும் வருகையும், வசந்தவல்லி - குறவஞ்சி உரையாடல், சிங்கன் கதாப் பாத்திரம், சிங்கனின் புலம்பல் காட்சி, சிங்கியைக் கண்ட சிங்கனது காதல் எனப் பல்வேறு வாயிலாகப் பாத்திரப் படைப்பினைப் புலப்படுத்துகிறார்.

**பெத்லகேம் குறவஞ்சி பாத்திரப் படைப்பு**

**பெத்லகேம் குறவஞ்சி – கதைச் சுருக்கம்**

பெத்லகேம் குறவஞ்சி பாயிரம் முதல் வாழ்த்து வரை எழுபத்திரண்டு உட்பிரிவுகளைக் கொண்டுள்ளதாய் அமைந்துள்ளது. அதனை இறைவாழ்த்து, இயேசுவின் பவனி, தேவமோகினியின் காதல், குறவஞ்சி குறிகூறுதல், ஞானசிங்கன் வளம் என ஐந்து பெரும் பகுதியாக பகுக்கலாம்.

கட்டியங்காரனாகிய யோவான் பெத்லகேமில் பிறந்த தூய்மையான இயேசுவின் வருகையையும், அவரது பெருமைகளையும் கூறி யாவரும் அவரை மனதார ஏற்றுக் கொள்ளும்படியாக அறைகூவல் விடுக்கின்றார். அப்பொழுது கதைத் தலைவராகிய இயேசுநாதர் பாவத்தைப் போக்கவும் பாவியைக் கை தூக்கவும், பாசம் மிகுந்த இயேசுநாதர் எருசலேம் வீதியிலே, பன்னிரெண்டு சீடர்கள் சூழ்ந்து வர, நறுமணத்தையுடைய கேரூபீன் ஊர்தியாக உடைய மறியாகிய கழுதையின் மீது ஏறி, ஜாலர், வீணையோடு பாலகர்கள் ஓசன்னா பாடுவோம், இயேசுவின் தாசரே! தாவீதின் குமாரனுக்கே உன்னதத்தில் ஓசன்னா! என்று கீதங்கள்பாடி வர, குருத்தோலை கையில் ஏந்தி உலா வருகின்றார். இயேசுநாதர் உலா வருவதைக் காண, ஏதேன் தோட்டத்து மக்கள், சீயோனைச் சேர்ந்த திருச்சபைக் கண்ணிப் பெண்கள் யாவரும் காண ஓடி வருகின்றனர். அந்நேரத்தில் இயேசுவைக் கண்டு மையல் கொள்கின்றாள் 'சீயோன் குமாரத்தி.' இயேசுவின் மரபில் இத்தொடர் திருச்சபையைக் குறிக்கின்கிறது. மையல்

கொண்ட சீயோன் குமாரத்திக்கு விசுவாச சிங்கி (குறவஞ்சி) குறி கூறுகிறாள். விவிலிய மலையின் சிறப்புகளையும், கானான் நாட்டு வளத்தையும் கூறுகின்றாள். பிறகு சீயோன் மகளின் மன உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு, உலா வந்தவருக்கு மனைவியாகப் போகிறாள் என்ற நற்செய்தியை எடுத்துரைக்கின்றாள்.

சிங்கியின் கணவனாகிய ஞானச் சிங்கன், நூவன் என்பவனோடு சேர்ந்து வலைகளையும் கண்ணிகளையும் வைத்துப் பறவைகளைப் பிடிக்கின்றான். குறி சொல்லச் சென்ற சிங்கி நெடுநேராமாகியும் வராததால் சிங்கியின் பிரிவு தாங்காமல் சிங்கன் புலம்புகிறான். இந்நிலையில் சிங்கி வீடு திரும்புகிறாள். அவளை வரவேற்கும் சிங்கன், அவளிடம் அடுக்கடுக்காகப் பல கேள்விகளைக் கேட்கிறான், சிங்கியும் நறுக்குத் தெறித்தார்போலப் பதில் சொல்கிறாள். பிறகு யாருக்குக் குறிசொல்லி பரிசு பெற்று வந்துள்ளாள் என்பதை அறிந்து மகிழ்ச்சியடைகின்றான். பிறகு இருவரும் சந்தோசமாக இயேசுவைப் பாடி மகிழ்வதாகக் கதை நிறைவுபெறுகிறது.

**பெத்லகேம் குறவஞ்சி கதாப்பாத்திர மாந்தர்கள்**

பெத்லகேம் குறவஞ்சியில் வரும் கதையானது, பரிசுத்த வேதாகமத்தில் சொல்லப்படும் கருத்துக்களை மையமாக வைத்தே கூறப்படுகிறது. இக்குறவஞ்சியில் வரும் கதாப் பாத்திரங்கள் யாவையும் உருவகப் பாத்திரங்களாகவே சாஸ்திரியார் படைத்திருக்கின்றார். முதலாவதாக வரும் கதாப் பாத்திரமாகக் கட்டியங்காரன் பாத்திரமும், இரண்டாவதாக வரும் பாத்திரமாகத் தலைவராகிய இயேசுநாதரின் பாத்திரமும், மூன்றாவதாக வரும் கதாப்பாத்திரமாகத் தலைவியாகிய சீயோன் குமாரத்தியின் பாத்திரமும், நான்காவது கதாப் பாத்திரமாக விசுவாச சிங்கியின் பாத்திரமும், ஐந்தாவது கதாப் பாத்திரமாகச் சிங்கனது பாத்திரமாகப் பெத்லகேம் குறவஞ்சியைப் படைத்து கிறிஸ்தவ இலக்கிய உலகத்திற்குப் பெருமை சேர்த்திருக்கின்றார்.

**பெத்லகேம் குறவஞ்சி கட்டியங்காரன் கதாப் பாத்திரம்**

**கட்டியங்காரன் தோற்றம்**

பொதுவாகக் குறவஞ்சிகளில் வரும் கட்டியங்காரனை வெறுமனே கட்டியங்காரன் என்றே அழைக்கின்றனர். கட்டியங்காரனுக்கு என்று தனிப் பெயர் சூட்டி அழைப்பதாகத் தெரியவில்லை. ஆனால் பெத்லகேம் குறவஞ்சியில் வரும் கட்டியங்காரனுக்கு என்று ஒரு வரலாறு இருக்கிறது. "ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களில் யோவான் ஸ்நானனைப் பார்க்கிலும் பெரியவன் ஒருவனும் எழும்பினதில்லை."[116] ஆகையால் 'யோவான்' என்ற பெயரின் உருவகமாகவே கட்டியங்காரன் என்று சூட்டி அழைக்கின்றார் சாஸ்திரியார். குற்றமில்லாதவராகப் பெத்லகேமில் பிறந்த இயேசுவின் வருகையை முன்னறிவிப்புச் செய்யும் கட்டியங்காரனாகிய யோவானின் தோற்றத்தைப் பரிசுத்த வேதகாமத்தில் குறிப்பிட்டுள்ளவாறே, "ஒட்டகமயிர் உடையைத் தரித்து, தன் அரையில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டும்; வெட்டுக்கிளியும் காட்டுத் தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்தது"[117] என்பதைக் சாஸ்திரியார்,

"ஒட்டகத்தோல் உடையுடுத்து, யூதேயாவின்
நெட்டில்வன வாசமடுத்துக் குணப்பட்டவர்
மட்டில்லாப் பவங்கள் தடுத்து யோர்தான்நதியில்
திட்டமாய்த் தீட்சைகள் கொடுத்து

……………………………………………….

…………………………………………………..

கானத்தின் தேனை அருந்தி, வெட்டுக்கிளிகள்
ஆனத்தி னையே அருந்திச் சுவிசேடமறை
ஞானத்தின் வழிதிருத்தி, வார்க்கச் சைதனை
மோனத் திடையில் பொருந்திக் கிறித்தரசு

---

[116] . பரி.சு.வே, லூக். 7:28. புதிய ஏற்பாடு, ப.89.

[117] . பரிசு.வே, மத் : 3 – 4. புதிய ஏற்பாடு, ப.5.

வானத்தின் பெத்லேகே மானத்தின் வருதலை
தானத்திருமறை நிதானத்திலே பகர்ந்து”[118]

வருவதாக இயேசுவின் பவனி வருகையைக் கட்டியங்காரன் முன்னறிவிப்பதாக விளக்குகிறார்.

**பாட்டுடைத் தலைவரை அறிமுகப்படுத்தல்**

தேவனால் அனுப்பப்பட்ட மனுஷனான யோவான், இயேசுவின் வருகைக்கு முன்னதாக வழியை ஆயத்தம் பண்ணும்படியாக யூதேயா நாட்டிலுள்ள யோர்தான் நதிக்கரையில் நின்று முன்னர்த் தீர்க்கர்கள் எழுதியவாறு இயேசு பெருமான் வரவுள்ளார் மனந்திரும்புங்கள்; உங்களது செயல்களுக்கு ஏற்ற பயனைத் தருவார்; நல்லவர்களுக்குப் பலனைத் தந்து அன்பை அறிவுறுத்துவார்; நல்லவர்கள் அல்லாத விரியன் பாம்புக் குட்டிகளைப் போன்றவர்களைக் கடிந்து கொள்வார்; மனந்திரும்பி நன்மை தரும் கனி மரங்களைப் போன்ற மக்களை உறுதிப்படுத்துவார்; கனி தராத தீய மக்களாகிய மரங்களை வெட்டி வீழ்த்தி நெருப்பிலே போடுவார்; அவரது கையில் கோதுமை தூற்றும் கூடை இருக்கும்; கோதுமையைத் தூற்றிக் கணக்குப் பார்த்து நல்ல கோதுமை மணிகளைக் களஞ்சியங்களில் சேர்ப்பார்; பயனில்லாத பதற்களைத் துடைப்பத்தால் சேர்த்து நெருப்பால் எரித்துப் அழித்துப் போடுவார். ஆகவே அவரிடத்தில் மனதுருகி, மனம் திரும்பி, நோன்பிருந்து இறைவேண்டுதல் செய்ய வேண்டும். பாவ வாழ்வு என்னும் நரக வாழ்வை விட்டு நீங்கி, நன்மை தரும் இறை ஒழுக்கின்படி வாழ்ந்து, தன்னைப் போலவே பிறரிடம் அன்பு காட்ட வேண்டும். இரண்டு சட்டையுடையவன் ஒன்றை எடுத்து மிகவும் துன்பப்படும் ஏழைகளுக்குக் கொடுத்து, மிகுதியாக உண்பவர்கள் உணவின்றித் துன்பப்படும் அனைவருக்கும் உணவளித்து இயேசுவின் எண்ணப்படி வாழ வேண்டும் என்பதை,

“கனிந்து இருதயத்தின் நினைவுகண்டு, அதைக்
கண்டவிடத்து அலையாமல் முனைவு கொண்டு
நினைந்திருந்து ஆவியின் கனிகள் முன்னம் கன

[118] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.42.

நேசம் தயை நீண்ட சாந்தமோடு இன்னம்
இன்னம் தருமகுணம் விசுவாசம், துர்
இச்சை அடங்குதல் சந்தோச நேசம்
உன்னும் தயவுமெத் தனவான அருள்
உள்ளபல பத்தியெனும்
ஞானக் கனிகள் எல்லாம் தருவீர்கள்"[119]

என்றும், வாழை மரங்களை நாட்டி அம்மரங்களைப் போல உயர்ந்தும்; பேரீச்சை, தென்னை குருத்தோலைகளைத் தொக்கவிட்டு; இருதயமாகிய மலரை உயர்த்தி; அழகு மிகுமாறு தெருக்களையெல்லாம் சுத்தம் செய்வீர்; மலர் தூவி வழிபட்டு தாவீது மன்னனுக்கு ஓசன்னா என்று வெளிப்படுத்துங்கள்; நீதியின் ஆடைகளை உடுத்திக் கொள்ளுங்கள்; இறைமைந்தன் இயேசு கிறிஸ்து பெரியவர் வரப்போகின்றார் என்று கட்டியங்காரன் வழியாகச் சாஸ்திரியார் அறிமுகப்படுத்துகிறார்.

**இயேசுவின் உலாக் காட்சியை அறிமுகப்படுத்தல்**

கட்டியங்காரனாகிய யோவானால் இயேசுவைப் பற்றி முன்னறிந்த மக்கள், தங்கள் மனங்களை ஒருமுகப்படுத்தி, பன்னிரண்டு சீடர்களை எருசலேம் மாநகரை அழகுபடுத்த, கழுதையாகிய ஊர்தியில் உலா வருவதை,

"பவனி வந்தனரே கேருபின்
பவனி வந்தனரே

அவனி வாழ்த்திய பெத்லே கேம்வளர்
புவன மானியர் கவன ஞானியர்,
தவனு மாயனு பவனு மானவர்…"[120]

என்றும், புனிதமான பெத்லகேம் நாட்டைக் காணவரும் சுற்றுலாப் பயணிகளும், ஒளி பொருந்திய பெண்களும் குருத்தோலைகளைக் கையில் ஏந்தியவாறு, பாவத்தை அழிப்பவரே! கிறிஸ்து இயேசுவே! கழுதையை ஊர்தியாகக்

---

[119] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 49-50.
[120] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 53-54.

கொண்டவரே! இப்பொழுது விடுதலையாக்கும் என்று உரக்கமாகப் பாட உலா வருவதாகவும்; தீர்க்கதரிசிகள் உரைப்போர் எழுதிய வழியில் மிகுதியாகத் திரண்டுள்ள நன்னெறி கடைப்பிடிப்பவர்களோடு ஆரவாரம் செய்யும் யூதர்களும்; அவரை அறியாதவர்களும்; பன்னிரு சீடர்களோடும் வந்த கூட்டத்தைப் பார்க்கும்போது ரோமப் போர்வீரர்களைக் கவர்ந்தது. அப்படி வரும் வேளையிலே ஏரோது மன்னன் சினம் கொண்டான். மக்கள் அவற்றையெல்லாம் ஒரு பொருட்டாக எண்ணாமல் திருமறைகள் ஒலிக்க உலா வருகின்றார் என்பதை,

“தீர்க்கர் எழுதிய மார்க்க மாய்உயர்
சேர்க்கை யானசன் மார்க்க ரோடு
ஆர்க்கும் கிறித்தினத் தோர்க்கும் அறிவதில்
ஆர்க்கும் பன்னிரு பேர்க்குமே,
ஏர்க்கையே செய்து போர்க்க ணத்தினை
ஈர்க்க ஆதிபன் மூர்க்கமாய்,
பார்க்குள் எருசலை ஊர்க்குள் மனுடர்கள்
பார்க்க மறைகளும் ஆர்க்கவே பவனி”[121]

வருவதாகவும், வண்ண நீண்ட அங்கி, பொன்னிற இடைக்கச்சை, நிலையான உடையென ஒளிவிட, பொன்னின் நிறமுடி, வெண்மை என்று சொல்லுமாறு இருகண்களில் பொருந்திய தீங்கொழுந்து போன்றதாய், இயற்கைப்பண் பின்னழகை நினைக்குமாறு, அலைமடித்துவரும் கடலைப் போன்று ஒலிக்கும் மொழியைக் கூறி, எனக்கு முன்னிருந்தும், பின்னிருந்தும் என்னை ஆட்சி செய்யும் இயேசு பெருமான் உலா வருதாகக் கட்டியங்காரன் அறிமுகப்படுத்துகிறான்.

**இயேசுநாதர் உலா வருவதைப் புகழ்ந்துரைத்தல்**

அல்பாவும் ஓமேகாவும் ஆதியும் அந்தமுமாக இருந்து உலக மக்கள் யாவரையும் பாதுகாத்து, சிறந்த மனத்தையுடைய பெத்லகேமில் பிறந்த இயேசு

---

[121] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 55.

பெருமான், பன்னிரண்டு சீடர்கள் தம்மை சூழ்ந்துவர, நறுமணமிகுந்த கேருபீனை ஊர்தியாகக் கொண்டு, கழுதையின் மீது ஏறி பாசமிகுந்த ஏசையா பவனியாக உலா வரப் புறப்பட்டார் யாவரும் காண வாருங்கள்! வாருங்கள்! என்று,

"தாவீ தேந்தல் கோத்திர சாயல் கன்னியா ஸ்திரீமிக்க
ஆவைமரி கற்பமுற்று அற்பமாய் உற்பவித்து – தேவ

ஏதன்வன மீதில் ஆதம் ஏவைமான்செய் தீதினாலே
ஏதம் அணுகாத பரன்ஸ் திரீயின் வித்தின்மேலே
ஆதியான ரட்சகனை அருள்வோம் என்று அன்பாய்ச் சொன்ன
நிதித வறாது மேன்மை நீடு பெத்லகேகம் இன்ன – தேவ

சம்மனசோர் சேனை சூழக் சதுர்நீடிய சருவேசன்
செம்மையுடன் செங்கோல் மேவும் தேசுலவும் ஏசுராசன்,
தும்மனசாம் பேய்க்கணத்தைச் சூழ்ந்தவெற்றி செய்தங்கே
நன்மனதாய் யூதேயாவின் ராச்சியத்தில் காட்சியாக"[122]

பவனியாக உலா வருகின்றார் காண வாருங்கள்! வாருங்கள்! என்றும், மலர் போன்ற திருவடிகளை உடையவரே! அடியவர்களின் மனதில் தங்கியிருந்து துன்பங்கள் நீங்க அருள்புரியும் கருணைச் செல்வரே! பழங்காலத் திருமறைகள் முழுவதையும் இறைவன் ஒருவராக விளங்குகின்ற அமுதம் போன்ற வடிவினையுடையவரே! சூழ்ச்சி செய்கின்ற கொடிய நஞ்சினையுடைய பேயின் தலையை நசுக்கிப் போர் செய்து வெற்றிக் கொள்ளும் வரம் அருளும் இறைவா! ஒவ்வொரு நாளும் எல்லா உயிர்களுக்கும் அறிவுக் கண்ணைத் திறந்து வளமளிக்கும் கருணைக் கண்ணனே! திருமறையின் வழி நின்று மனித வடிவமாகக் கொண்டு எங்களோடு உறவாடும் இறைவா! தாவிதின் மரபில் வந்த இறைவா! எருசலேம் நகரில் வரும் நாசரேத்து அரசே வாழ்க! வாழ்க! என்று,

"அரியவிணும் அதின் அமலர் உலகினுயிர் பலபொருளும்
அறுதினமது அருளும் அருளா!

[122] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 58-59.

அரவினுரை உரிமையொடு கருதியொரு கனநுகரும்
அதன்வினைகள் அகல வருவாய்!..
விரிவுபெருகிய மலையின் இடையுயரும் அனல்நடுவின்
விளையுமறை அருளும் விமலா!
விருதுபெறு தவிதரசன் மகனெனவும் இடையர்குடில்
விடையின் முனம் ஒளிர் சிறுவனே!
பெரிய இரு மறியின்மிசை பவனிஎரு சலையின்மிகு
பிரபலமொடு உலவி யவனே!
பிசகணுவும் இலதுவள மையினிலுயிர் விடுமதிக
பிரியமுள நகரை யரசே!"[123]

வாழ்க! வாழ்க! பராக்கு சுவாமி! பராக்கு! என்று புகழ்ந்து கூறுகின்றான். இவ்வாறாக இயேசுநாதரின் வருகையைப் புகழ்ந்து முன்னறிவிப்புச் செய்யும் கட்டியங்காரனாகிய யோவானின் பாத்திரம் ஆகும்.

**கதைத் தலைவர் இயேசுவின் கதாப் பாத்திரம்**

பெத்லகேம் குறவஞ்சி நாடகத்தின் அனைத்துக் கதை மாந்தர்களாலும் புகழப்படும் ஒரு பாத்திரமாக இயேசுவின் கதாப்பாத்திரம் விளங்குகிறது. வேதகாமத்தில் இயேசு பவனி வருவதைப் பற்றி பல இடங்களில் அறிய முடிகிறது. சகரியா தீர்க்கதரிசி எழுதிய புத்தகம் அதிகாரம் 9:9 இல் முன் குறிப்பிட்டுள்ளவாறு, சீயோன் குமாரத்தியே, மிகவும் களிகூறு, எருசலேம் குமாரத்தியே கெம்பீரி, இதோ, உன் ராஜா உன்னிடத்தில் வருகிறார். அவர் நீதியுள்ளவரும், இரட்சிக்கிறவரும், தாழ்மையுள்ளவரும் கழுதையின்மேலும் கழுதைக் குட்டியாகிய மறியின்மேலும் ஏறி வருகிறவருமாயிருக்கிறார். இந்த வார்த்தையை வைத்தே சாஸ்திரியாரும் தாம் படைத்த பெத்லகேம் குறவஞ்சி நாடக இலக்கியத்தின் தலைவர் பவனி வரும் வாகனமாகக் கழுதையைக் குறிப்பிடுகின்றார். நாடகத்தின் முதல் காட்சியில் வரும் இயேசுநாதர் பன்னிரண்டு சீடர்கள் தம்மைச் சூழ்ந்துவர, நறுமணமிகுந்த கேருபீனை ஊர்தியாகக் கொண்டு, கழுதையின் மீது ஏறி உலாவரும்போது, ஏதேன் தோட்டத்து மக்கள், சீயோன்

---

[123] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 63.

சபையைச் சேர்ந்த திருச்சபை மக்கள் திரளாக வந்து தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா! ஓசன்னா! என்று களிகூர்ந்து பாடிவர பவனி வருகிறார். இப்பவனிக் காட்சியுடன் அவரது பாத்திரமும் நிறைவு பெறுகிறது. ஆனாலும் நூல் முழுவதுமாக அவரைப் போற்றிப் புகழ்வதற்காகவே பிற அனைத்துப் பாத்திரங்களையும் படைத்துள்ளார் சாஸ்திரியார்.

**தேவமோகினி பத்திரப்படைப்பு**

**தேவமோகினி அறிமுகம்**

பெத்லகேம் குறவஞ்சியில் வரும் கதைத் தலைவியின் கதைப் பாத்திரம் என்பது நூலாசிரியரே அறிமுகப்படுத்தும் பாத்திரமாக விளங்குகிறது. “பெதல்கேம் குறவஞ்சியில் வரும் கதைத் தலைவிக்கு இரு பெயர்களைச் சூட்டி அழைக்கின்றார் சாஸ்திரியார். அவை: 1. தேவமோகினி 2. சீயோன் குமாரத்தி ஆகியவையாகும். தேவமோகினி என்னும் சொல்லுக்குத் தேவன்மீது காதல் கொண்டவள் எனப் பொருள் கொள்ளலாம். 2. “எருசலேம் குமாரத்தியே, நான் உனக்குச் சாட்சியாக என்னத்தைச் சொல்லுவேன்? உன்னை எதற்கு ஒப்பிடுவேன்? சீயோன் குமாரத்தியாகிய கன்னிகையே”[124] என்று சொல்லும் பதத்தைப் பார்க்கும்போது, ஒழுக்கமான திருச்சபை என்பதைக் குறிப்பதாகத் தெரிகிறது. ‘சீயோன் குமாரத்தி’ என்னும் சொல்லானது ‘இஸ்ரயேல்’ மக்களைக் குறிக்கிறது.இதனை மையமாக வைத்துத் தான் சாஸ்திரியார் “சிட்ட சபை யெனும் சீயோன் மகளே, தேவமோகினி”[65] என்று உருவகப் பாத்திரமாகக் குறிப்பிடுகிறார் என்பதை அறிய முடிகிறது. இவள் கானான் நாட்டினாள்; சீயோன் மலையினாள்; தாவீதுதரசனால் புகழப்பட்டவள்; நற்செய்தியாகிய ஒளியையுடையவள்; கட்டழகைக் கொண்டவள்; கருணை மிக்கவள்; பக்தி நிறைந்தவளாகக் குறிப்பிடப்படுகிறது. இக்கதைப் பகுதியில் குறிப்பிடப்படும் மணவாளன் என்பது திருச்சபைத் தலைவராகிய இயேசுவைக் குறிக்கிறது. மணவாட்டி என்பது திருச்சபை மக்களைக் குறிக்கிறது. இயேசுவானவர் தனது விசுவாசிகளுடன்

[124] . பரிசு.வே, புலம்: 2 -13.பழைய ஏற்பாடு, ப.954.

கொண்ட உறவுக்குப் பெயர் ‘மணவாளன்’ என்பதாகும். ‘மணவாட்டி’ என்னும் உறவு இன்னும் சபையானது இயேசுவுக்கு மணவாட்டியாகவில்லை. அதனால்தான் சாஸ்திரியார் பெத்லகேம் குறவஞ்சியில் வரும் தலைவரை இயேசுவாகவும், திருச்சபையாகிய மக்களை மணவாட்டியாகவும் குறிப்பிடுகின்றார்.

**தேவமோகினி தோற்றமும் வருகையும்**

தேவமோகினியாகிய சீயோன் குமாரத்தியின் வருகையை அறிமுகப்படுத்தும் சாஸ்திரியார், அவளை பரிசுத்த வேதகாமத்தில் குறிப்பிடப்படும் தலைசிறந்த பெண்மணிகளான ஏவாள், சாராள், ரெபேக்காள், லேயாள், ராகேள், தாமார், சிப்போராள், இராகாப்பு, மீரியாம், தெபொராள், சாரிபாத்தூர் விதவை, யாகேல், நகோமி, ரூத்து, அபிகாயில், யோராமின் மகள் யோசேபாள், எஸ்தர், சூசன்னாள், அன்னாள், எலிசபெத், மகதலேனா மரியாள், உண்மையான கன்னிமரியாள், கிலேயோப்பாமரியாள், மார்த்தாள், காத்தரீனாள், கித்தேரியாள், தொற்காள் போன்ற பெண்மணிகளுடன் ஒப்பிட்டு, எல்லாவற்றிலும் தலைசிறந்தவளாக,

“அதிகசுப பரம சபையின் மின்வந்தாள்
அறிவின் உயருமறை முறைமனது உவந்தாள்
வேலுட காதல் மிகுந்தாள்
சுவிசேட சபைமுனம் மேவி எழுந்தாள்”[125] எனவும்,

“மங்கள மாக மகிழ்ந்துற வாடி
சங்கீத ஞான பதம்பல பாடி
எங்கும் விளங்கும் அனங்கனைத் தேடி
தூங்கமி கும்பர மன்சபை நாடி”[126]

தேவமோகினி வருவதாக அவளது வருகையைக் கூறுகிறார் சாஸ்திரியார்.

[125]. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 88.
[126]. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 89.

அவ்வாறு வரும் தேவமோகினியின் தோற்றத்தைக் கூறும் சாஸ்திரியார், அவளின் உடல் அழகினை,

"விஞ்சைச் சுரர்களுக்கு மிஞ்சித் தலைமைபெற்ற வரத்தினாள் கர்மேல்
விந்தைப் பருவதம்போல் அந்தத் தபரஞ்சிப்பொன் சிரத்தினாள்,
மஞ்சுற்று உலவுகொடிச் சஞ்சொத்து ஒளிர்சிறந்த கொண்டையாள்
மணி மாடப் புறாவின் கண்ணென்று ஓடிப் பரந்த விழிக் கொண்டையாள்,
கஞ்சத் ததலீலியா வின் சுத்தத் தின்சுகந்த விழியினாள் பரம
காணிக் காசெனப்பொன்  னாணிப் பட்டம்தரித்த நுதலினாள்
செஞ்சொற் பரமமாத ரும்சொல் புகழ்ந்து மெச்சும் புருவத்தாள் - தேவ
சிந்தை உருக்கும் செப விந்தையிருக்கு மங்கைப் பருவத்தாள்.

தந்துச் சூத்திரக்காரன் விந்தைப்பூஷணம் என்றவிடையினாள் பார்வோன்
சரியும் ரதத்தில் பூண்ட பரியின் பவுஞ்சு போன்ற நடையினாள்,
அந்தத்து அபரஞ்சிப்பொன் சொந்தத்து ஆதாரத் தூணின் துடையினாள்
காசி யாவும் சந்தனவாசம் மேவும் சித்திரத்தையல் உடையினாள்,
தொந்தத்துடன் நீலக்கல் தந்தத்தினில் பதித்த மேனியாள் – தேவ
சுருதிமறை யனைத்தும் மருவிக்கற்ற அவதானியாள் பந்தத்து
உறும்லீபனோன் விந்தத்து எழும்கேதூரின் சாயலாள் கானான்
பரம ராச்சியத்தின் அரிய மோக்கிஷத்தின் வாயினாள்."[127]

என்று புகழ்ந்து தேவமோகினியின் தோற்றத்தைக் கூறுகின்றார்.

**தேவமோகினியின் காதல்**

வானவர்கள் அணியும் ஞானமாகிய அணிகலன்களையுடைய பெட்டியை உடையவளும்; ஆகாசு மன்னனின் வீட்டிலுள்ள பொன்தங்கக் கட்டியைப் போன்றவளும்; இயேசுவின் பெருங்கொடையில், மகிமையில் வெண்மையான ஆடையையுடையவளும்; நுண்ணறிவால் தன்வயப்படுத்தும் சாயலையுடையவளும்; இறைவன் தரும் தண்ணீரைக் குடிக்கும் தொண்டையுடையவளும்; மூடர்களுக்கு அறிவுரை கூறி சண்டை செய்பவளும்;

[127] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 97-98.

கத்தூரி மணம் வீசுபவளும்; ஒளிர்வதில் விண்மீனைப் போன்றவளுமாகிய தேவமோகினி, பெத்லகேமில் பிறந்த இயேசு பெருமான் பவனி வருவதைக் கண்டு அவரைத் தன் மனதிலே நிலையாக ஏற்று காதல் கொள்கிறாள். தேவனின் பவனி முடிவடைந்த நிலையில், தலைவியின் தேனிலாவின் பவனி தொடங்குகிறது. தலைவன்மீது கொண்ட காதலால் குளிர்ச்சி பொருந்திய வெண்ணிலாவின் ஒளியானது தேவமோகினிக்குத் துன்பந்தரும் சுட்டெரிக்கும் சூரியனாகத் தோன்றுகிறது. ஆகவே வெண்ணிலாவைப் பழித்துக் கூறும்விதமாக,

“சின்ன வெளிச்ச மல்லோ வெண்ணி லாவே! நால்
தினத்தில் உண்டா னாயல்லோ வெண்ணி லாவே!
தன்னொளி உனக்கில் லாததால் வெண்ணி லாவே!
தன்னொளி யைக்கொண்டு உயர்ந்தாய் வெண்ணிலாவே!
என்னமதி கொண்டே ழுந்தாய் வெண்ணி லாவே!
எருச லேம்வீதி யிலே வெண்ணி லாவே!
கன்னி யர்க்குள் நானொ ருபெண் வெண்ணி லாவே! எனைக்
காய்ந்து கொல்ல வேண்டாம் வெண்ணி லாவே!

சிந்தை கருவம் கொண்டதால் வெண்ணி லாவே! நீ
தேய்ந்துக் குறைந்து போனாய் வெண்ணி லாவே!”[128]

என்று, வெண்ணிலாவைப் பலவாறு பழித்துக் கூறிகின்றாள். மேலும் நாள்தோறும் சீயோன் மலையிலிருந்து வீசும் இதமான தென்றல் காற்றானது, எருசலேம் மக்களுக்கு இன்பத்தை அள்ளித்தரும் அமுதமாக அமைகிறது. ஆனால் இயேசுவை நெஞ்சில் நினைத்திருக்கும் சீயோன் குமாரத்திக்கோ உபத்திரத்தைத் தரும் தென்றலாக அமைகிறது. அதனால் தனக்குத் துன்பத்தைத் தரும் தென்றலை, தென்றலே! நீ வருமுன் உரைப்போருக்குத் துன்பத்தைக் கொடுத்தாய், சாத்ராக், மேசாக், ஆபேத்நேகோ என்பவர்களை நெருப்பிலே போட்டுக் கொளுத்தினாய், தானியேலை சிங்கக் குகையிலே உருளுமாறு

[128] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 113-114.

செய்தும் அவரை அழிக்க முடியவில்லையே! இறை நெறியில் நடந்த எரேமியாவை தண்ணீரில்லாக் கிணற்றிலே தள்ளினாய் அவன் செத்துப் போகாமல் காப்பாற்றப்பட்டான் அல்லவா! யோசபாத் போரிலே பகைவர் சூழ்ந்து கொண்டபோது அவன் அழிந்து போகாமல் காக்கப்பட்டான் அல்லவா! என்றும்,

"கேணியில் யோசேப்பைப் போட்டது நீயல்லோ தென்றலே! அவன்
கெட்டழியாது எகிப்பத்தினில் சென்றதென் தென்றலே!
ஆவணங் கொண்டிச ரேலரின் பாலரைத் தென்றலே! நீ
ஆற்றுத் தண்ணீரில் அமிழ்த்திக் கொன்றாய் அல்லோ தென்றலே!
தோணும்படி பரவோன் செய்த பாதகம் தென்றலே! மிகச்
சுற்றியவனைக் கடலில் தணித்தே தென்றலே!
வீணினில் மாய்ந்தவர் கோடியில் கோடியே தென்றலே! நீ
மிக்க அப்போஸ்தவ மாரையும் கொன்றையே தென்றலே!"[129]

என்று, வேதாகமத்தில் இடம்பெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியையையும் தம்மனதில் ஏந்திக் கொண்டு, ஒவ்வொரு சம்பவத்திற்கும் தென்றல்தான் காரணம் என்று, தென்றலை பழித்துக் கூறுகிறாள். அதனைத் தொடர்ந்து தேவனுக்குக் கீழ்ப்படியாத காரியத்தைச் செய்த மன்மதனாகிய பழைய ஆதாமை,

"முந்து மனுடர்தமை நிந்தைப் படுத்த வேண்டி
முடுகி வனத்தில் அடுத்தாய் ஆதி
தந்த வரங்களை இழந்து போவதற்குச்
சதிசற் பனைகள் தொடுத்தாய் இப்போ
எந்தை உனை அழிக்க வந்தது அறிவாய் நீ செய்
இடக்கும் பவத்தின் இச்சை, கொடுக்கும் அக்கினி அம்பைத்
தொடுக்கும் உனதுடைய துடுக்கும் என்னடாசெய்யும்"[130]

என்று பலவாறு சினங்கொண்டு கடிந்து பேசுகிறாள்.

---

[129] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 117.
[130] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 121.

**தேவமோகினி பந்து பயிலும் காட்சி**

“தேவன், பகலை ஆளப் பெரிய சுடரும், இரவை ஆளச் சிறிய சுடரும் ஆகிய இரண்டு மகத்தான சுடர்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார். அவைகள் பூமியின்மேல் பிரகாசிக்கவும், பகலையும் இரவையும் ஆளவும், வெளிச்சத்துக்கும் இருளுக்கும் வித்தியாசம் உண்டாக்கவும், தேவன் அவைகளை வானம் என்கிற ஆகாயவிரிவிலே வைத்தார்; தேவன் அது நல்லது என்று கண்டார்.”[131] என்ற வேதகாம வார்த்தைகளை மனதிலே ஏற்றுக்கொண்டு, தேவமோகினி வான் சுடர்களை எண்ணி எண்ணி, பூமியைப் பந்தாகக் கொண்டு பந்து பயின்று விளையாடுவதை,

> “சூரியனைச் சந்திரனை உடுக்களை அந்தரத்து
> இருத்தித் துலங்கச் செய்தோன்,
> பாரியென நியமிக்கப் பட்ட சியோன்
> குமரிமிகப் பரிவாய்த் தோன்றி
> வீரிய மாய்க் கிரகங்கள் ஓட்டங்கள்
> இவையெல்லாம்வியந்தாள் அந்தச்
> சீரியைவாய் விளையாடிப் பந்தடித்தாள்”[132]

என்று சாஸ்திரியார் விளக்குகிறார். மேலும் சாஸ்திரியார் வான சாஸ்திரத்தைப் பற்றி நன்கு அறிந்தவராகையால், சூரியனை மையமாகக் கொண்டு இயங்கும் சூரியக் குடும்பத்தைப் பற்றி தேவமோகினி வாயிலாக,

> “இரவுபூமி பதிமூன்று இலட்சத்து எண்பத்து உடனான நாலாயிரத்
> தோற்றம் ஆனது நானூற்று அறுபத்து இரண்டதின் மேலேதே
> விரிமதி மகன்பதி நைந்தொன்று வெள்ளி எட்டில் ஒன்பது
> மிக்கசந்திரன் நாற்பத்தி தொன்பதில் ஒன்றது அறிவன் ஏழொன்றே
> உரிய அந்தணன் ஆயிரத்திரு நூற்றொடு எண்பது ஒன்றதே,
> உற்றசனி தொளாயிரத் தோடு ஒன்பது பத்துடன் ஐந்தே,

[131] . பரிசு.வே.ஆதி:1. 16 – 18. பழைய ஏற்பாடு ப.1.

[132] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 124.

பெரிய திங்கள் எண்ப தோடு அரைபிச கிலாத கணக்கெனப்
பிரிய சீயோன் மகள்குலாவிப் பெலப்ப தாகப்பந் தடிப்பாளாம்"[133]

என்று தவறில்லாமல் கணக்கிட்டுக் கூறி, மகிழ்ச்சியுடன் பலமாகப் பந்து விளையாடுகிறாள். மேலும், சக்கர வழியில் ஒவ்வொரு மணி நேரத்திலும் கிரகங்கள் நடக்கின்ற தகுதி ஒழுங்கு ஆங்கில நாழிகை காந்தம் ( சௌமியம்) நூறாயிரத்துக்குப் பதினோராயிரத்து இருநூற்று ஐம்பத்து ஆறு. வெள்ளி எண்பத்தோராயிரத்து முன்னூற்றுத் தொண்ணூற்று எட்டு. நெருக்கடியான பூமி எழுபத்தையாயிரத்து இருநூற்று இருபத்து இரண்டு. அழகான சந்திரன் இரண்டாயிரத்து முன்னூற்று முப்பது, செவ்வாய் ஐம்பத்து ஆறாயிரத்து நூற்றுப் பதினான்கு. காற்று முப்பதாயிரத்து முன்னூற்று ஐம்பத்து எட்டு. மயக்கம் தரும் சனி இருபத்து இரண்டாயிரத்து முன்னூற்று ஐப்பத்து ஒன்று. அதில் காணப்படும் வளையம் அப்படிக்கொள்ள ஒளியாகிய திங்களோ பதினைந்தாயிரத்து எண்ணூற்று நாற்பது என்று ஒவ்வொன்றாகச் சொல்லிப் சொல்லி, ஆகாய மண்டலங்களை வியந்து நின்று தேவமோகினி பந்து விளையாடுவதாகச் சாஸ்திரியார் கூறுகிறார்.

### பெத்லகேம் குறவஞ்சி பாத்திரப் படைப்பு

பெத்லகேம் குறவஞ்சியில் வரும் குறவஞ்சி என்னும் சொல்லை சாஸ்திரியார் 'விசுவாசம்' என்பதற்கு உவமையாகக் கூறுகிறார். "குறவஞ்சி யென்றபெண்ணே விசுவாசம், திருவாக்கே குறியின் கூறு,"[134] என்கிறார். குறவஞ்சியின் வாயிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு சொல்லும் இயேசுவின் திருவார்த்தையைக் குறிக்கிறது. இயேசுவின் மீது காதல் கொண்டுள்ள தேவமோகினிக்கு, இயேசுவின் அன்பைக் கூறி, ஆறுதல் கூறி, அவளை ஆற்றுப்படுத்தும் விதமாகப் படைக்கப்பட்டுள்ள பாத்திரமே குறவஞ்சி என்னும் பாத்திரமாகும்.

---

133 . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 125.
134 . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 14.

**குறவஞ்சியின் தோற்றமும் வருகையும்**

பெத்லகேம் குறவஞ்சியில் நாடகத்தின் போக்கை முன்னின்று நடத்திச் செல்லும் பாத்திரமாக விளங்கும் குறவஞ்சியின் தோற்றத்தைக் கூறும் சாஸ்திரியார்,

“நீதியினாடையணிந்து ஞானாபரண
வேதசெப மாலையணிந்து, மெஞ்ஞானமுடன்
ஆதியம லனைப்பணிந்து, சத்தியமறை
ஓதுநெறி யாலைதுணிந்து, வெகுவிதமாய்க்
காதினில்பணிகளிட்டுக், கர்த்தரின் சபைக்குட்பட்டுச்

திட்டமுடன் குறிகாட்டிச், சீயோன்மகட்கு
மட்டிலது மயல்மூட்டித், திருவசனக்
கட்டளையின் புகழ்நாட்டி, நுதலிலொரு
பட்டமழ குடன்சூட்டிச், சிலுவையிட்டு,
வட்டமணிக் கூடைதாங்கி, மாத்திரைக்கோ லோன்று வாங்கிச்,
சட்டமாய்ச் சபையிலோங்கிச், சகல துன்பமுநீங்கி,

சத்திய சபையைநாடிக், கிறிஸ்துவின்பரி
சுத்தமொழி யுடன்கூடிச், சங்கீதஞ்சொலிப்
பக்தியுடன் பதம்பாடி, யூதித்தெனும்
இஸ்திரீயைப் போலேயாடி……………
……………………………………………
………………வித்தைகற்றுச் சபைமெய்க்க”[135]

குறவஞ்சியானவள் நீதியின் உடையுடுத்தி; அறிவு என்னும் அணிகலன்களை அணிந்து கொண்டு, செபமாலையாகத் தன்னை அழகுபடுத்திக்கொண்டு; மெஞ்ஞானமுள்ள இறைவனை வணங்கி; திருமறை கூறும் நெறியால் ஐயத்தை

[135] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 164.

நீக்கித் துணிந்து கொண்டு; பலவிதமான காதணிகளை அணிந்து கொண்டு; இறைவனின் திருச்சபை ஒழுங்கிற்குக் கட்டுப்பட்டு; வெண்மையான நிலையில் நல்லாடை விளங்க; பன்னிரண்டு வகையான மணிகள் ஒளிவீச; கிறிஸ்தரசனின் கொடை வள்ளலின் நறுமண மாலை அசைய; கொடியவரின் வஞ்சக மனம் குழம்ப; இளமையான அன்ன பறவைபோல நடந்து; வெட்கப்பட்டு நாணம் கொண்டு; சீயோன் மக்களுக்கு உறுதியுடன் அடையாளங்களை எடுத்துக்கூறி; அளவில்லாத பேரின்பத்தைத் தூண்டிவிட்டு; திருமறை வாக்கின் கட்டளைகளின்படி புகழை உறுதிப்படுத்தி; நெற்றிப்பட்டம் சூட்டி அதில் சிலுவைக் குறியிட்டு; வட்டமான கூடை சுமந்து; மாத்திரைக் கோலைக் கையில் எடுத்துக் கொண்டு; உண்மையான திருச்சபையை நாடி; இயேசுவின் தூய்மையான வார்த்தைகளை மனதில் ஏற்று; சங்கீத வசனத்தைப் பாடிக்கொண்டு; நடனமாடிக்கொண்டு குறவஞ்சி வருகின்றாள்.

**தேவமோகினி – குறவஞ்சி உரையாடல்**

தேவமோகினி உரையாடலாக விசுவாசம் என்னும் தூய்மையான குறவஞ்சி, இயேசு பெருமான் மீது காதல் கொண்ட சீயோன் மகளுக்குச் செம்மையான நன்மைதரும் தேவ வார்த்தையைக் குறியாகக் கூற தூய்மையான குறவஞ்சி வந்தாள் எனப் பேசவைக்கிறார். அவையாவன,

தேவமோகினி : குறவஞ்சியின் வரவால் அகம் மகிழ்ந்த தேவமோகினி, அவளது சொந்தமலை எது? அதன் செழுமையைப் பற்றியும் நாட்டு, நகர, தலவளம் பற்றியும் சொல்லுவாயாக! என்று கேட்கிறாள்.

குறவஞ்சி : வானவர்கள் ஒன்று சேர்ந்து இறைவனை வாழ்த்திப் போற்றுவார்கள்; வளமையுள்ள சித்தர்கள் யாவரும் சிறந்த வழிபாடுகளைக் கடைப்பிடிப்பார்கள்; முல்லை நிலத்தில் வாழும் தலைவர்கள் அறிவுடன் வணங்குவார்கள்; வான சாஸ்திரக் கலைஞர்கள் இறைவனுக்குக் காணிக்கைகளைப் படைத்து அங்கு வாழும் ஏழைகளுக்குப் பெருங் கொடை கொடுத்து உதவுவார்கள்; கொடிய தீமையாகிய குற்றமெல்லாம் அண்டாமல்

தடுத்துக் காப்பார்கள்; இழிவான காரியங்களைச் செய்யும் பேய்க் கூட்டங்களைத் தடுக்கும், இறைமைந்தன் இயேசு பிறந்த பெத்லகேம் எங்களுக்குப் பெரிய மலையாகும் என்று திருமறையில் வரும் ஏதேன், ஆரியனாத், மோரியா, மேரிபா, சீனாய், ஒரேப், நோபோ, எப்பிராயீம், ஒலிவமலை, தாபோர், சீயோன், கொல்கதா மலை ஒவ்வொரு மலையின் சிறப்புகளைப் பற்றியும் கூறுகிறாள்.

தேவமோகினி : இச்செய்தியைக் கேட்ட தேவமோகினி, மிகவும் மகிழ்ச்சி கொண்டு, மாட்சிமையுடன் எளிமையாக்க் கழுதை வாகனத்தில் வந்தது யார்?

குறவஞ்சி : இம்மானுவேலனாகிய மேசியா! இவ்வுலகத்தின் இறைவன். உன்னுடைய மணவாளன் என்று கூறுகிறாள்.

தேவமோகினி: குறவஞ்சியே! மேன்மை பொருந்திய கடவுளை விந்தூதர்கள் தேற்றுவதேன்?

குறவஞ்சி : மக்கள் பெற்ற சாபத்தினால் இறைவனுடைய சினத்திற்கு ஆளாகி மூழ்கிய ஆபத்தில் புலம்பினதால் ரஞ்சி என்று கூறுகிறாள்.

தேவமோகினி : செம்மையான இறைமைந்தன் சிலுவையில் ஆடையில்லாமல் நிற்பது ஏன்? என்று கேட்கிறாள்.

குறவஞ்சி : அதற்குக் குறவஞ்சி, இறைவனின் மேலான விருப்பமான தூய்மையானவருக்கு நீதியின் ஆடையைத் தர நினைத்ததால் ரஞ்சி என்று விளக்குகிறாள்.

தேவமோகினி: குறவஞ்சியே! உண்மையின் காரணரான இயேசு பெருமான் சிலுவையில் வலிமையில்லாதவர்போல் இருப்பதென்ன! என்று வினவுகிறாள்.

குறவஞ்சி : புடமிடப்பட்ட பொன் போன்ற சீயோன் மகளே! உலகத்தைத் தம்முடைய மறை மொழியால் படைத்த தூயவர் மூன்று ஆணியில் தொங்கவில்லையா? என்று பதில் கூறுகிறாள்.

தேவமோகினி : குறவஞ்சியே! பாழ் என்னும் கொடிய பாம்பு என்று, பிசாசுக்குப் பெயர் வந்ததற்குக் காரணம் என்ன? என்று கேட்கிறாள்.

குறவஞ்சி : பாம்பின் வடிவம் கொண்டு, தன்னைப் பாதுகாத்துக் கொண்டு மக்களுக்குத் தீங்கு செய்யும் செயலுக்காகவே ரஞ்சி! என விளக்கமளிக்கிறாள்.

தேவமோகினி : மிருகம் என்றும் வேசி என்றும் கூறிய சொற்கள் யாரையடி குறவஞ்சி?

குறவஞ்சி : சீயோன் குமாரத்தியே! திருமறை முழுவதையும் புரட்டுகின்ற தீமை மிகுந்த ரோம் நகரின் கொடிய பாம்பைச் சாதித்த சொல்லைக் குறிக்கும் ரஞ்சியே! என்று கூறுகிறாள்.

தேவமோகினி: குறவஞ்சியே! திருடன், அந்திக் கிறிஸ்து, கள்ளத் தீர்க்கதரிசி என்ற பெயர்கள் எவர்க்கு வந்தது?

குறவஞ்சி : அதற்கு மறுமொழியாக, பேயின் தலைவனுக்கு ஒப்பிட்டுக் கூறக்கூடிய கோடிக்கணக்கானோர் இவ்வாறு உண்டு சீயோன் குறவஞ்சியே என்று கூறுகிறாள்.

தேவமோகினி: ஒளி பொருந்திய குறவஞ்சியே! பெத்லகேம் தலைவனின் அருளைப்பற்றி, அமைதியாக எடுத்துக் கூறி தெளிவடையச் செய்தாய். இப்போது உனது குறியின் வித்தை வளத்தைக் கூறுவாயாக!

குறவஞ்சி : அறிவுமிக்கச் சீயோன் மகளே! நான் கற்ற கல்வியைக் கூறுகிறேன் கவனமாகக் கேட்பாயாக! கானானிய மன்னனின் படைத்தலைவன் சிசெராவைப் பாராக் துரத்தி வந்தபோது, கேனியன் ஏபேரின் மனைவி யாகேலின் கூடாரத்தில் ஒளிந்து கொண்டான். அவனை ராகேல் நெற்றியில் ஆணியடித்துக் கொன்றாள். இந்தச் சித்திரக் கல்வியையும் நான் அறிவேன். முன்னொரு நாள் ரூத் என்பவள் அமைதியாகப் போவாசைச் சேர்ந்து பாதுகாத்த கலையையும் அறிவேன். மலடி என்று எண்ணப்பட்ட அன்னாள் சாமுவேலைப்

பெற்றமுறையையும் அறிவேன். வெட்கம் சிறிதும் படாமல் லோத்தின் மக்கள் செய்த கூட்டுக் கலையையும் அறிவேன். இராகேல் ஒட்டகச் சேணத்தின் கற்குவில்லின் கீழ் தெய்வ உருவங்களை ஒளித்து வைத்த கலையையும் அறிவேன். இராகேலின் கணவனான யாக்கோபு தன் மாமனின் ஆடுகளை மேய்த்த போது, ஆடுகளெல்லாம் கலப்பு நிறப் புள்ளிகளுள்ள குட்டிகளை ஈன்ற கலையையும் அறிவேன். 'கானானிஸ்திரி பேச்சிட்டுத் தர்க்கித்துக் கட்டின வித்தையுந்தெரியும்' என்றும் 'சிலுவை சுமந்தவன்பேச மறுகியழும் வித்தை தெரியும்' என்றும் என்று பல்வேறு வேதாகமக் நிகழ்வை எடுத்துக் கூறுகிறாள்.

தேவமோகினி : பெத்லகேம் நாட்டில் உன் வித்தைக் கலைகள் யாவற்றையும் மகிழ்ச்சி பொங்கக் கூறினாய் குறவஞ்சியே! இப்போது உனது குறியின் வளத்தைப் பற்றிக் கூறுவாயாக!

குறவஞ்சி : மானிட மகனாகிய தலைவனுக்கு உரிமையுள்ள சீயோன் மகளே! யோர்தான் ஆறு பாயும் கானான் நாடு முழுவதும் உண்மையான அடையாளங்களைச் சொல்லி, நான் பெற்றுக் கொண்ட வெற்றிச் சின்னங்களைக் கேட்பாயாக அம்மையே! எகிப்து நாட்டைச் சிறப்பாக ஆட்சி செய்த பார்வோனுடைய ஆட்சியில் அமைச்சனாகப் பணிபுரிந்த யோசேப்பு குறவன் கூறிய அடையாளத்தினால் பெற்ற மோதிரத்தைப் பார்! தானியேல் தீர்க்கதரிசியின் சொல்லிய தரிசனுக்கு அடையாளமாகப் பெற்ற வைரமணி! மார்பணியைப் பார்! எலியா தீர்க்கதரிசி வாழ்ந்த காலத்தில் ஏற்பட்ட பஞ்சத்தினால் கவலையுற்றிருந்த, சாரிபாத்து விதவையிடம் திகையாதே! உன் களங்கியத்தில் எண்ணையும், மாவும் இனி குறையாது என்று கூறிய எலியாவிற்கு, தோசைகள் சுட்டுக் கொடுக்க, எண்ணையும் மாவும் பஞ்சம் நீங்கும் வரை குறையாத அடையாளத்தைக் காணவில்லையா என்று விளக்குகிறாள்.

தேவமோகினி : திருமறையின் தேனுக்குள் இருக்கும் இனிமையான வார்த்தையைக் குறியாகச் சொல்லும் மின்னல் கொடி போன்றவளே! உடலுக்குள் உயிர்போல என்மேல் ஒரு குறி சொல்லுவாயாக!

குறவஞ்சி : "அதற்கு மறுமொழியாகக் குறவஞ்சி,

துய்யதுய்ய பரிசுத்த வெள்ளச்சியம்மே, நித்திய,
சோபனமுண் டாகுதுபார் வெள்ளச்சியம்மே,
……………………………………………………
………………………………………………………
பொய்யல்லஎன் குறியெல்லாம் கைமேலாமம்மே, உயர்,
புத்தியினா லத்தனையு முற்றாயுமம்மே.
வெற்றியுடனுன்னையணைத் தாற்றுவானம்மே, மண,
வீட்டினுக்குள் சேர்த்துன்மனத் தேற்றுவானம்மே,
நித்தியகண் காட்சியெல்லாங் காட்டுவானம்மே, பெரும்
நீதியினா டையணிகள் பூட்டுவானம்மே.
பற்றியுனை மணஞ்செய்து கொள்ளுவானம்மே, யவர்,
பாதமதில் நீயிருந்து துள்ளுவாயம்மே."[136]

என்றும், "காய மைந்தன் கருணைக் கினியின் கண்ணன், வாட்டமற்றுயர்ந்தோன் ஞான மாப்பிள்ளை வருவானம்மே என்று கூறி, அம்மையே! திருமறை மொழியை உண்மையாக உரைப்பாயாக! மனமாகிய வீட்டைத் தூய்மை கூட்டி அழகுபடுத்தி வைப்பாயாக! பத்துக் கட்டளையை மூன்று முறை விரைவாக உரைப்பாயாக! இயேசு பெருமான் சொன்ன இறை வேண்டலை எப்போதும் சொல்லிக் கொண்டிருப்பாயாக! எல்லாத் திசைகளிலும் இறைவனைச் சோர்வடையாமல் வணக்குவாயாக!"[137] குலக் கடவுளுக்கு உடன்பட்டு மெய்யான திருமறையைச் சேர்ந்து வாழ்வாயாக! என்று நல்மொழி கூறுகிறாள்.

தேவமோகினி : இதுவரையிலும் குறவஞ்சி சொன்னதையெல்லாம் மகிழ்ச்சி பொங்கக் கேட்ட சீயோன் குமாரத்தி, இறுதியாகக் கூறியதற்கு ஒப்புக் கொள்ள மறுத்துக் கூறுகிறாள்.

---

[136] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 228.
[137] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 230.

குறவஞ்சி : ஒளி பொருந்திய பெண்ணே! தாழ்மையான கழுதையின்மேல் வரும் தலைவரைக் கண்டு ஆசை கொண்டாய். அதனை யான் சொல்லவே அஞ்சி இருந்தேன். ஆனாலும் சொல்லுவேன். குற்றம் நீங்காதபடி பெத்லகேம் மலையின் மேல் மயக்கம் பொருந்திய மறைப்பவளே! இது மிகவும் வஞ்சனையாகும். கிறிஸ்துவின் அன்பினால் நீ காய்ச்சல் கொண்டது போன்ற கலைகள் எல்லாம் பழகியதை நானறிவேன் என்று கூறுகிறாள்.

தேவமோகினி : அதற்கு மறுமொழியாக குறவஞ்சிப் பெண்ணே! என்ன கூறினாய்? சிறிதும் நினைத்துப் பார்க்காமல் அறிவுக்குப் பொருந்தாத வார்த்தைகள் யாவும் பழமொழிக்கு ஒப்பாகும். நான் நன்மைதரும் கன்னிப் பெண் என்று நானிருக்கும்போது, வெட்கப்படாமல் காதல் அதிகரித்துக் கொண்டே செல்கிறது என்று கூறினாய். அதுமட்டுமல்லாமல் இன்பக் காய்ச்சல் தண்டனை என்று கூறினாய். இயேசு பெருமானின் நட்பால் ஆசை கொண்டாய் என்று கூறினாய்! நினைத்து நினைத்துச் சொன்னக் குறியை அழகுபடுத்திச் சொல்லுவாயானால் அவரது பெயர், ஊர் என்ன என்பதைச் சொல்லுவாயாக! என்று கூறுகிறாள் தேவமோகினி.

குறவஞ்சி : அம்மையே! ஏது உன்னைப்போல் எனக்கு அறிமுகமோ? அவருடைய பெயரைச் சொல்லுவதற்கும், அடையாளமாக அவருக்கு வழங்கும் பெயரைச் சொல்லுவதற்கும், காதல் அதிகரித்து நீ அனுப்பிய தூதரை நான் பார்த்தேனோ? மாலை வேளையில் கன்னியாக உன்னைப் பெற்றுக் கொள்ளப் போன அந்தக் குறிப்பைக் கண்டேனோ? என்று பலவாறு கூறி அவர் பெண்ணை அடைய ஆற்றல் மிகுந்த பெரிய மணமகனாவார் என்று கூறுகிறாள்.

தேவமொகினி : அறிவுமிக்க குறத்தி என்ற வேடிக்கைப் பெண்ணே! அழகான அவர் பெண்ணை அடைய வல்ல ஆற்றல் மிக்கவர் வஞ்சகியே! என்னுடைய பெரிய மணமகன் என்றும் பேசுவாயோ? கூட்டம் கூடுவதற்காகக் கலந்து கொள்ளும் பெருமையோ? உன் கல்வியின் செருக்கோ?இல்லை

வாய்க்கொழுப்போ? விண்ணுலகை அடைவதற்காக நான் கலக்கம் அடையாதபடி உண்மையை எனக்குச் சொல்லுவாயாக! என்று கேட்கிறாள்.

குறவஞ்சி : அதற்குக் குறவஞ்சி, பெண்ணே! இதுவரையிலும் நீ கூறிய எல்லாவற்றையும் பொருத்துக் கொண்டேன். திருச்சபையின் முன் இழுத்து விடாதென்று தண்டித்தேன். முன்னால் பெத்லகேம் தலைவர் இயேசு பெருமான் அனுப்பிய தூதிலே சிறப்பான மன்னன் மிகவும் மென்மைத் தன்மையுடையவனாய் உன்னால் அல்லவா தாழ்மையான கழுதை ஊர்தியின்மேல் உனக்காக வருகிறார் என்று சீயோன் மகளுக்குச் சொன்னாள் சொல்லுங்கள் என்று சொல்லி அனுப்பியது முதல் அவர் மீது காதல் கொண்டாய் அல்லவா! என்று சொல்லுகிறாள்.

தேவமோகினி : குறவஞ்சியின் இந்தப் பதிலைக் கேட்டவுடன் அறிவு மங்கையான சீயோன் குமாரத்தி, இரு கைகளையும் கூப்பி, துள்ளிக் குதித்து, மகிழ்ந்து, கண் குளிர்ந்து வணங்கி, தூணின் இடையில் வெட்கத்தினாலே நாணி, முற்றுத் தலை கவிழ்ந்து கிளிபோல் மென்மையாக நா தடுமாற்றமடைந்து மழலைமொழி பேசி, மன ஊக்கத்தினாள் மிகுந்த மன மகிழ்ச்சி கொண்டாள்.

குறவஞ்சி : “அம்மையே! பெத்லகேம் தலைவன் உன்னை மணந்து கொள்ளவே வருகிறார். நாளையன்று நீ பாதுகாக்கும் வெட்கத்தையெல்லாம் நான் பார்க்கத்தான் போகிறேன். தூய்மையான வெண்மையான ஆடையொன்று வரும்; தூய்மையான புடமிடப்பட்ட செபமாலையொன்று வரும்; திருமணப் பரிசுப் பொருள்கள் எல்லாம் வரும்; அறிவின் அணிகலன் நிறைந்த பெட்டி வரும்; உண்மையான சிலுவை முத்திரை பதித்த மோதிரம் வரும்; நீ பேரின்பத்தால் பலவகைச் செல்வங்களோடு இருப்பாய்” என்று இன்மொழி கூறுகிறாள்.

தேவமோகினி : இப்படிச் சொன்ன பெதல்கேம் நகர அறிவுக் குறவஞ்சியைப் பார்த்து, எருசலேம் கன்னிப்பெண் காரணம் சொல்வாள்.நன்மை மிகுந்த குறி சொல்ல உன்னைப்போல் இந்நாட்டில் எங்கும் காணவில்லை என்று அணிகலன் பல அணிவித்து; மகிழ்ச்சியாய் பொன்னாடையும் பொருள்களையும் கொடுத்து;

இரத்தின அணிகலன்களால் ஒப்பனை செய்து மன நிறைவுடன் வழியனுப்பி வைக்கிறாள்.

**பெத்லகேம் சிங்கன் பாத்திரப் படைப்பு**
**சிங்கனது தோற்றமும் வருகையும்**

பெத்லகேம் சிங்கனது தோற்றத்தைக் கூறும் சாஸ்திரியார், "நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்டயாவையும் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்,"[138] என்ற இயேசுவின் வார்த்தையை மையமாகக் கொண்டு, சிங்கனுக்குச் சத்தியத்தின் கச்சையைக் கட்டி, நீதி என்னும் மார்க்கவசத்தை அணிந்து, எல்லாத் திசைகளிலும் பேய்கள் யாவும் அஞ்சி அலறுமாறு சத்தமிட்டு, நற்செய்தி என்னும் ஞான வலையைக் கையில் எடுத்து, பறவை என்னும் சபை மக்களைப் பிடிக்கும் கயிறு முடிச்சுகளைக் கொண்டு, மோசேக்கு ஆரோனைப் போலவும், எலியாவுக்கு எலிசாவைப் போலவும், யோசுவாவுக்குக் காலேபைப் போலவும், பவுலடியாருக்குத் தீமோத்தைப் போலவும், பவுல் சீலாவைச் சேர்த்துக் கொண்டது போலவும், பர்னபா மார்க்குவைச் சேர்த்துக் கொண்டது போலவும், அன்பான தம்பி யோவானையுடைய யாக்கோபைப் போலவும் தூய்மையான நற்செய்தி அருளுரை கூற சிங்கன், "சத்தியத்தின் கச்சைக்கட்டி நிதியின்மார்க் கவசமற்றும் சனுவாய் பூண்டு, அலகையெல்லாம் பயந்தலறக் கூவிவிரைந் தெதிர்ந்து நோக்கி, வித்தகஞ்சேர் சுவிசேட ஞானவலைக் கண்ணிகளும் வெகுவாய்க் கொண்டுசுத்தவு பதேசியெனப் பெத்தலே மலைக்குழுவன் தோன்றினானே. பத்திக்குவித்தாய் முளைத்தபராபரன் பாதத்தைநாவொத்துப் பாடிக்கொண்டாடியே, தத்தித்திமித்தெய்யத் தாதிந்தத்தாவென்று சகலர்க்குமருளிட்ட கிருபைக்கு

---

[138] . பரிசு.வே. மத். 28.19 – 20. . புதிய ஏற்பாடு, ப.47.

முடிவுற்ற சாமிக்குகந்த சுவி சேடச்சபைநடுவே,"[139] பெத்லகேமில் வளர்ந்த கிறிஸ்து இயேசுவின் திருப்பெயரை வாழ்த்தி, தாளத்துடன் ஆடிப்பாடி,

நூவன் வந்தானே, மறைப்புலி
நூவன் வந்தானே

"நூவன்வந்தானே தேவதிருச்சபை
நூங்குபெத்லேம்பதி யோங்கலிருகழல்,
காவலுபதேசிக் கேயுதவிக்காரன்
ஆனானைப்போலே ஞானச் சிங்கன் வங்கணத்துக்,
காசித்து நன்னேசத்துடனே, யதிகன
பாசப்பிரகாசத்திடனே, துதித்தெழில்
ஆகத்திரு வேதப்பொருள் போதித்தருள் நீதிப்படி"[140]

நற்செய்தி கூற சிங்கன் வருவதாக சாஸ்திரியார் கூறுகின்றார்.

**சிங்கன் வேட்டையாடும் காட்சி**

இயேசுநாதர் பிறந்த நாட்டிலே வலிமையான சிங்கனுடன், திருமறையில் தேர்ந்த புலி நூவனும் சேர்ந்து, ஒருமனப்பட்டுப் பேசி, விண்ணுலகில் பறவைகளாகிய எல்லா மக்களையும் சேர்ப்பதற்காக, நூவன் நின்ற பறவைகளாகிய மக்களைக் கூவி அழைக்க வரங்களைத் தருகின்ற வாழ்வாகிய மரத்தில் ஏறிச் சிங்கனும் புதிய ஏற்பாட்டின் காலத்தில் குளிர்ச்சியான தமிழில் நற்செய்தியின் நெறியில் வரும் பறவைகளான, "எத்தியோப்பியர், ஏத்தியர், சீரியர், கல்தேயர், யூதேயர், மேதியர், ஆங்கிலேயர், அராபியர், கப்பதோக்கியர், ரோமர்கள், மாகோகர், கோகர், புருசியர், எபிரேயர், எபேசியர், மீதியர், சமாரியர், பிரெஞ்சியர், மெசெப்பொத்ரோமியர், எபூசியர், இந்துஸ்தானியர், கொரிந்தியர், இக்கோனியர், கொனஸ்தாஞ்சியர், கானியர், அம்மோனியர், வெஸ்தியர், சீதோனியர், பொடுத்தீசர், உலாந்தர்கள், சேரயீரீசர், கிரேத்தர், மோவாப்பியர்,

---

[139] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 252.
[140] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 263.

மலாகிகள், இலத்தீனர், தானீஷர், அமலேக்கியர், பெலிஸ்தர்கள், அங்கர், கிராடர், திராவிடர், ஆந்திரர், ஓட்டியர், பாஞ்சாலர், பாண்டியர், கொங்கணர், கேரளர், கேகையர், சீனர், கரூசர், கலிங்கர், யுகந்தரர், கொடியவங்கர், வங்காளர், மராரோ, மலையாளர்"[84] முதலான பல நாடுகளிலிருந்தும், ஊர்களிலிருந்தும், "மேலானசாதியும் கீழானசாதியும், வெள்ளைக் கறுப்பு என வேறுபட்ட சாதியும், சைவ வைணவ மதக்கார சாதியும், மாமிசம் உண்ணும் மதமில்லாத சாதியும், தாலி சங்குத் தாலி கட்டியசாதியும் பொட்டு இட்ட சாதியும்"[85]என்ற பலவகையான சாதிகளிலிருந்தும் பறவைகளெல்லாம் பெத்லகேம் நாட்டின் ஜெப வீட்டிற்கு வருகிறது.

பிறகு இறைவனுடைய திருவடிகளை வணங்கி, இறைவன் உரைத்த பத்து வழியின் தூய்மையான வலையை விரித்து வீசடா! என்று கண்ணி குத்தும் முறையை நூவனுக்கு விளக்குகிறான். பறவைகள் விழித்துக் கொள்கின்றன. எனவே பேசாது பறவைகளை அமர்த்திடுமாறு சிங்கன் கூறுகிறான். சிங்கனும் நூவனும் பறவை பிடிக்க வலை விரிக்கின்றனர். சிங்காரத் தோட்டத்திலே பொன்னான பறவைகள் பறக்கின்றன. அவ்வாறு பறந்த பறவைகளெல்லாம் வலையில் சிக்குகின்றன. பறவைகள் யாவும் கையில் கிடைத்து விட்டது. செல்லமான குருவிகளை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி வைத்து, செங்கால் நாரையின் கறியை அதிகமாக்கி, மீதியான துண்டுகளை மூடிவைத்து, இயேசுவின் சீடர்கள் எல்லோர்க்கும் பங்கை உண்டாக்கி வைத்து, மிகுந்த நன்மைகளை சேர்த்து வைத்து பிறகு இயேசு என்னும் மேன்மையான இறைமைந்தனைக் கைக் கூப்பி வணங்கி நிற்கின்றான்.

**சிங்கன் புலம்பல் காட்சி**

இறைவனது பேரறிவு வலையை அழுத்திக் கட்டும்போது ஆர்வத்துடன் நம்பிக்கையுடைய சிங்கியின்மேல் நினைவுவர, சிங்கன் நூவனிடம் சினங்கொண்டு, பறவைகளைச் சத்தமிட்டு அழைத்து அப்பறவைகளிடம்,

"கூப்பிட்டுக் கூப்பிட்டிட் டோடிபோ குங்கரும் குயிலே, கெஞ்சி,
கூப்பிடக் கூப்பிட வாராத தேனத்தக் குயிலே,
நாபிட்டி டேச்சுத்திரிகின்ற காடையே, என்கண்,
ணாட்டியைக் கண்டால் திறந்துபார்ப் பேனேமுக் காடையே,
சீப்பிட்டுச் சீப்பிட்டுச் சேர்த்தக்கொண்டைக்கொண்ட லாத்தியே,
எந்தத், தேசத்தி லேசுற்றப் போனாளோ நான்கொண்ட லாத்தியே,
சாப்பிட்டுச் சாப்பிட்டுக் கெம்பீரிக் கும்தாராக் கூட்டமே, வெகு,
தர்மமுண் டென்பெட்டைத் தாராவைக் கொண்டாந்து காட்டுமே"[141]

என்று புலம்பிக் கூறுகிறான். மேலும்

"அந்தரமேபரமே, யுடுவே
சுந்தரமேகணமே, யெனின்
சுந்தரமாதுநலாள், இங்கே யெங்கும்
வந்தனளோசொல்லுங்கோ,

பூவனமே, அடர்ந்துயிர்
காவனமேகனமே, எனின்
மாவனம்வந்ததுண்டோ, அருங்கொடு
மாவனமே சொல்லுவீர்"[142]

என்றும் புலம்புகிறான். மேலும் "காடையே! செம்மையான மயிலே! பெண்கிளியே! உப்புத்தூணான லோத்துனுடைய பெண்களே! இந்த வழியை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றீர்கள் அல்லவா! சிங்கி இவ்வழியே வந்தாளா! கூறுங்கள். கெட்ட குமாரர்களே! நீங்கள் எல்லா இடங்களுக்கும் சென்று அலைந்து வந்துள்ளீர்! எனது சிங்கியைக் கண்டீர்களா?"[143]

---

[141] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 343.
[142] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 337.
[143] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 340.

“சிங்கியைக்காணேனே, விசுவாசச்

சிங்கியைக்காணேனே.

சிங்கியைக் கற்பலங் காரியை நாரியைச்
சித்திரப்பெத்தலேம் அத்தனைப்பாடிய
மங்கள வினோதசங் கீதமாதாந்த
வேதாந்த மதங்கியென்வங்கண”[144]

எனது சிங்கியைக் காணவில்லை. எத்துணை எடுத்துரைத்தாலும், அவ்வளவும் ஒப்பாகாத பெத்லகேம் இயேசு பெருமானின் அருளை விளக்கிக் கூறிய தூய்மையான சிங்கியானவள், எங்கு நின்று அப்பத்தையும் திராட்சை இரசத்தையும் வாங்கி ஆனந்தமாய்க் குடித்து நிற்கின்றாளோ! எங்கே போனாளோ என் சிங்கி என்று புலம்பித் தவிக்கிறான்.

**சிங்கியைக் கண்ட சிங்கனது கூடலும் காதலும்**

‘காணாமல் போன வெள்ளிக்காசைக் கண்டது போல’ இயேசுநாதர் பிறந்த பெத்லகேம் நாட்டுத் தெருவிலே, வஞ்சிக் கொடி போன்ற சிங்கியைக் கண்டபோது இன்பமென்னும் மகிழ்ச்சிக் கடலில் பொங்கிக் குற்றம் நீங்க தழுவுவதற்கு ஒன்று சேர்ந்த போது, கொடி போன்ற மின்னல் தடையாய் நின்றது போல், நகரத்தின் தெருவை நெருங்கி அங்கு விரைந்து ‘இராகேலை விரும்பின யாக்கோபைப் போல’ ஏக்கமுற்று,

“இங்கே வாராயாசை பொங்கப்பாராயுடல்

அங்கம்சேராய்நல்ல சிங்கியரே மானே”[145]

என்று பெத்லகேம் மலையில் காணாத சிங்கியைக் கண்ட சிங்கன், முன்காலத்தில் சிறையில் அடைக்கப்பட்டிருந்த பேதுரு, ‘சிறையிலிருந்து விடுபட்டபோது அடைந்த மனமகிழ்ச்சையைப் போல’ அகமகிழ்ந்து இறைவனை வேண்டி

[144]. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 365.
[145] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 382.

நடனமாடி நின்றான். அப்பொழுது சிங்கனுக்கும் சிங்கிக்கும் இடையே தர்க்கம் நடக்கிறது.

சிங்கன்: இத்தனை காலமா என்னிடங்கேளாமல் எங்கே நீசென்றனை சிங்கி?

சிங்கி : மா பெத்லேகேநகர் சீயோன் குமாரிக்குப் பத்திக் குறிசொலச் சிங்கா!

சிங்கன்: உற்றதுணையெனக் காருனைப்போலொன்று மோதாமலோடினாய் சிங்கி?

சிங்கி : நான் மெத்தப்பவுசுகள் பெற்றுவந்தேனெனை முற்றுங்கவனியே சிங்கா!

சிங்கன்: காலுக்குக்கீழே கடிக்கும் பாம்பைக் கடித்து உதைத்தது ஏன் சிங்கி?

சிங்கி : பாம்பினால் கொடிய நஞ்சினை நீக்கின இயேசு பெருமானின் புதுமையாலடா சிங்கா!

சிங்கன்: முழங்கால் முழுவதும் வீங்கிக் கறுத்துப் போனதன் தந்திரம் என்ன சிங்கி?

சிங்கி : நான் இடைவிடாமல் இயேசு கிறிஸ்து பெருமானை வேண்டி செபம் செய்து நற்செய்தி கூறியதால் சிங்கா!

சிங்கன்: விண்ணுலக நாட்டவரால் வந்த பரிசுப் பொருள்களான அனைத்தையும் காட்டடி சிங்கி?

சிங்கி : நன்கொடையால் வந்த அனைத்துப் பொருள்களையும் காட்டி, இவையெல்லாம் தலைவர் இயேசு பெருமான் கொடுத்த பொருள்களடா சிங்கா!

சிங்கன்: மண்ணினால் உண்டாக்கப்பட்ட மனிதர்களுக்குத் தன்னையே தந்த இயேசுவுக்குப் பதில் நன்மை என்ன செய்யப்போகிறார்கள் சிங்கி?

சிங்கி : எண்ணி முடியாத கோடிக்கணக்கான நன்மைகளுக்கு எக்காலத்திலும் இதுவரை இணையேதும் உண்டா சிங்கா!

சிங்கன்: நாவு துடிக்கின்றது சிங்கி! அழகான வாயின் உதடுகளைப் பார்க்கப் பொறுமை கொள்ள முடியவில்லை சிங்கி!

சிங்கி : உன்னுடைய வாய்க்குச் சுவையைத் தருவது நற்கருணை அல்லவா சிங்கா! அதனை வாங்கி உண்டு மனமகிழ்ச்சி கொள்ளடா சிங்கா!

சிங்கன்: நாம் ஒருமித்து இருக்கத் தனியான இடம் தேடட்டுமா? உண்மையைச் சொல்லடி சிங்கி!

சிங்கி : பெரிய கொக்கைப் பிடிக்கப் பதுங்கி இருக்கும் இடம் தக்க சமயத்தில் பாரடா சிங்கா!

சிங்கன்: இல்லாத போதனைகளையும் கருத்துக்களையும் எங்கே படித்தாய்? பெத்லேகேமிலா சிங்கி!

சிங்கி : அவரில்லாமல் சிறிதாகிலும் பேச முடியுமோ? இவையெல்லாம் தேவனின் பயனடா சிங்கா!

சிங்கன்: புதுமைக்காரியாகிய உன்னை வெற்றி பெற முடியாதபடி என் மனம் மயக்கமடைகிறது சிங்கி!

சிங்கி : இதில் என்ன சந்தேகம் இருக்கிறது சிங்கா! நான் உன் குடும்பத்தின் தலைவியல்லவா! உன்னை சிறிதும் பின்னடைவேனோடா சிங்கா!

சிங்கன்: ஒன்று கூடி, மகிழ்ந்து உரையாடி, சுற்றித் திரிந்து பெத்லகேம் இயேசுவை வணங்குவோமா சிங்கி?

சிங்கி : நாம் பாடி வணங்கி மகிழ்ந்து, ஆரவாரத்துடன் அவரைத் தேடி அடைவோமடா சிங்கா!

என்று பலவாறு தங்கள் மனதில் இருந்தவைகளையெல்லாம் மனந்திறந்து பேசி உரையாடி மகிழ்ந்தனர். பின்னர் இருவரும்,

“ஊரெங்கும் ஓடி உலைவதேன் பெத்தலேம்,
சீரேசு நாதரைநாம் சேர்ந்தக்கால், தீருமே,
பாவம் பிணிநோய் பசாசு நர கம்மரணம்,
பாவலரே பாடிமகிழ் வோம்.

வாழ்த்துகிறேன், வாழ்த்துகிறேன்,
மனுவேலை வாழ்த்துகிறேன்.

தந்தையில்லாத் திருமகனைத்
தாதையருக் கொருமகனை,
சந்தமரித்தலைமகனைக் கலைமகனை
வாழ்த்துகிறேன்.

வேதமறை சொன்னவனை
மேதினியின் முன்னவனை,
வாதைவென்ற மன்னவனைத் தன்னவனை
வாழ்த்துகிறேன்.

ஒருமலையில் மறுரூபம்,
திருமலையில் செரூபம்,
அருள் மலையி லுயிரீயும் ஆண்டவனை
வாழ்த்துகிறோம்.”[146]

என்று மனதார பெத்லகேமில் பிறந்த இயேசு பெருமானை வாழ்த்தி, ஆடிப் பாடி மகிழ்ந்து, நிலையான இறவன் வாழ்க! தூய்மையான உண்மையான தெளிவினைத் தரும் தூய ஆவி வாழ்க! உலக மக்களை பாவத்திலிருந்து விடுதலை செய்யும் சீயோன் மணவாளன் இயேசு கிறிஸ்து வாழ்ந்த விருப்பமுடன் இந்நூலை ஆராய்ந்து அறியும் பெருமக்கள் அறிஞர்கள் வாழ்க! நிலையான நன்மைகள் பல்லாண்டு காலம் வாழ்க! என வாழ்த்திச் செல்கின்றனர்.

---

[146] . சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக்.382-383..

**திருக்குற்றாலக் குறவஞ்சி – பெத்லகேம் குறவஞ்சி பாத்திரப் படைப்பு ஒற்றுமைக் கூறுகள்**

இருவகைக் குறவஞ்சிகளிலும் வரும் நாடக கதை மாந்தர்களாக கட்டியங்காரன், தலைவர், தலைவி, தோழிகள், குறவஞ்சி, சிங்கன், குழுவன் என பல்வேறு பாத்திரங்களாக இவ்விரு புலவர்களும் கற்போரை கவர்ந்திழுக்கும் காந்தமாக விளங்குகிறது. இவ்விரு குறவஞ்சிகளிலும் வரும் காட்சிகளான கட்டியங்கூறல், தலைவர் பவனி வருதல், தலைவி பந்து பயிலுதல், தலைவர் மீது காதல் கொள்ளுதல், தோழியர் புலம்பல், நிலவைப் பழித்தல், மன்மதனைப் பழித்தல், குறத்தி குறி சொல்லுதல், சிங்கன் வேட்டையாடுதல், சிங்கன் சிங்கி உரையாடல், வாழ்த்து என பல்வேறு வகையாக நகைச் சுவையாகப் படைக்கப்பட்டுள்ளது. இவ்விரு இலக்கியங்களிலும் கவிஞர்கள் தலைவியின் அழகையும், குறவஞ்சியின் அழகையும் சிறப்பாக வருணித்துக் கூறுகிறார்கள். திருக்குற்றாலக் குறவஞ்சியில், வசந்தவல்லி, சிங்கி இவ்விருவருக்கும் ஏற்படும் தர்க்கமும், சிங்கனுக்கும் சிங்கிக்கும் இடையே ஏற்படும் தர்க்கத்தைப்போல, பெத்லகேம் குறவஞ்சியில் தேவமோகினிக்கும் குறவஞ்சிக்கும் இடையிலேயும், சிங்கனுக்கும் சிங்கிக்கும் இடையிலேயும் தர்க்கம் நடைபெறுகிறது.

இவ்விரு குறவஞ்சிகளுமே இறை வாழ்த்துடன் தொடங்கி, இறைவாழ்த்துடன் நிறைவு பெறுகிறது. இவ்விரு குறவஞ்சி நூல்களும் ஊரின் பெயரை அடைமொழியாகக் கொண்டு பெயர் சூட்டப்பட்டுள்ளன. திருக்குற்றாலக் குறவஞ்சியானது குற்றாலநாதரின் புனிதத் தலமாக திகழக் கூடிய குற்றாலம் என்னும் பெயராலும், பெத்லகேம் குறவஞ்சியானது உலக இரட்சகர் இயேசுநாதர் அவதரித்த ஊரான பெத்லகேம் என்னும் பெயராலும் அழைகப்படுகிறது. திருக்குற்றாலக் குறவஞ்சியின் பாடலடிகளைப் பின்பற்றி, பல இடங்களில் சாஸ்திரியார் பெத்லகேம் குறவஞ்சியில் தமது கருத்துக்களைக் கூறுகிறார்.எடுத்துக் காட்டாக, குற்றாலநாதர் பவனி வருவதைக் கூறும் கவிராயர்,

“பவனி வந்தனரே! மழவிடைப் பவனி வந்தனரே!”[147]

என்று கூறுகிறார். பெத்லகேம் குறவஞ்சியில் சாஸ்திரியார் இயேசுநாதர் பவனி வருவதை,

“ பவனி வந்தனரே! கேருபின் பவனி வந்தனரே!”[148]

என்று கூறுகிறார். வசந்தவல்லியின் அழகை வருணிக்கும் கவிராயர் அவளை,

“இருண்ட மேகம்சுற்றிச் சுருண்ட

சுழி எறியும் கொண்டையாள் – குழை

ஏறி ஆடி நெஞ்சைச் சூறையாடும் விழிக் கெண்டையாள் ”[149]

என்று புகழ்கிறார். அதனைத் தழுவி சாஸ்திரியார்

“மஞ்சுற்று உலவுகொடிச் சஞ்சொத்து ஒளிர்சிறந்த

கொண்டையாள் – மணி

மாடப் புறாவின் கண்ணென்று ஓடிப் பரந்த விழிக் கொண்டையாள்”[150]

என்று வருணித்துக் கூறுகிறார். குற்றாலநாதர் மீது காதல் கொண்ட வசந்தவல்லி, அவர் நினைவாகவே இருக்கும்போது அந்நிலவொளியானது அவளைச் சுடுவதாக எண்ணி அதனைப் பழிக்கும் விதமாக கவிராயர்,

“ஆகடியஞ் செய்தல்லோ வெண்ணிலாவே – நீ தான்

ஆட்கடியன் போல்குறைந்தாய் வெண்ணிலாவே”[151]

என்று பாடுகிறார். அதனை மனத்தில் வைத்தே சாஸ்திரியாரும்,

“தீக் குணத்தினால் வளர்ந்து வெண்ணிலாவே!

தேய்பிறை என்றே குறைந்தாய் வெண்ணிலாவே”[152]

என்று கூறுகிறார். குற்றாலக் குறவஞ்சியில் சிங்கியின் தோற்றத்தைக் கூறும் கவிராயர்,

---

[147] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.15.
[148] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 53.
[149] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.28.
[150] . . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.97.
[151] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.46.
[152] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.114.

“சிலைநுதலில் கஸ்தூரி திலகமிட்டு

நறுங்குழலில் செச்சை சூடிக்

கொலைமதர்க்கண் மையெழுதி மாத்திரைக்கோல்

வாங்கிமணிக் கூடை தாங்கி

முலைமுகத்தில் குன்றிமணி வடம்பூண்டு”[153]

என்று அறிமுகப்படுத்துகிறார். பெத்லகேம் குறவஞ்சியில் சிங்கியின் தோற்றத்தை சாஸ்திரியார்,

“நீதியினாடையணிந்து ஞானாபரண

வேதசெப மாலைபுனைந்து, ……..

பட்டமழ குடன்சூட்டிச், சிலுவையிட்டு,

வட்டமணிக் கூடை தாங்கி, மாத்திரைக்கோ லொன்று வாங்கி”[154]

வருவதாக அறிமுகம் செய்கிறார். குற்றாலக் குறவஞ்சியில் குற்றால மலையின் சிறப்பைக் குறவஞ்சி வாயிலாகக் கூறும் கவிராயர் அதனை,

“கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பார்

கவன்சித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்”[155]

என்று கூறுகிறார். அந்நூலைத் தழுவியே சாஸ்திரியார் பெத்லகேம் மலையின் சிறப்பை,

“வானவர்கள் கூடிவந்து தோத்திரங்கள் படிப்பார்,

வண்மையுள்ள சித்தரெல்லாம் அருந்தவங்கள் பிடிப்பார்”[156]

என்று கூறுகிறார். குற்றாலக் குறவஞ்சியில் சிங்கியைக் கண்டுபிடித்த சிங்கன் அவளிடம்,

“இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்

எங்கே நடந்தாய் நீ சிங்கி?”[157]

---

[153] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.70.

[154] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.165.

[155] புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.76.

[156] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.166.

என்று கேட்கும் அதே கேள்வியை பெத்லகேம் குறவஞ்சியில் வரும் சிங்கனும் சிங்கியைப் பார்த்து,

> “இத்தனை காலமா யென்னிடங்கேளாமல்
> எங்கே நீசென்றனை சிங்கி?”[158]

என்று கேட்பதாகக் கூறுகிறார். குற்றாலக் குறவஞ்சியில் சிங்கியைக் கண்ட சிங்கன் அவள் காலில் அணிந்திருந்த அலங்காரத்தைப் பற்றி,

> “காலுக்கு மேலே பெரிய விரியன்
> கடித்துக் கிடப்பானேன் சிங்கி?”[159]

என்று கேட்கிறான் சிங்கன். அதைப்போலவே பெத்லகேம் குறவஞ்சியிலும் சிங்கியைக் கண்ட சிங்கன் அவள் காலில் அணிந்திருந்த அலங்கார த்தைப் பற்றி,

> “காலுக்குக்கீழே கடிக்கும் சற்பத்தைக்
> கடிந்துதைத்திட்டதேன் சிங்கி?”[105]

என்று வியந்து கேட்கிறான். இந்நூல் முழுவதும் இவ்விரு கவிஞர்களின் கற்பனைத் திறனானது, பல இடங்களில் கவிச்சக்ரவர்த்திக் கம்பரின் கவித்திறனை ஒத்துக் காணப்படுகிறது. திருக்குற்றாலக்குறவஞ்சியில் சிற்றின்பக் கருத்துக்கள் மேலோங்கியும், பெத்லகேம் குறவஞ்சியில் பேரின்பக் கருத்துக்கள் மேலோங்கியும் திகழ்கின்றன.

**வேற்றுமைக் கூறுகள்**

திருக்குற்றாலக் குறவஞ்சியானது குற்றாலநாதரின் புகழ்பாடும் நூலாகவும், பெத்லகேம் குறவஞ்சி இயேசுநாதரின் புகழ்பாடும் நூலாகவும் விளங்குகிறது. குற்றாலக் குறவஞ்சி 2213 பாடலடிகளைக் கொண்டு சிறிய இலக்கியமாகவும், பெத்லகேம் குறவஞ்சி 4628 பாடலடிகளைக் கொண்டு பெரிய

---

[157] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.163.
[158] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 386.
[159] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.164.

இலக்கியமாகவும் விளங்குகின்றன. திருக்குற்றாலக் குறவஞ்சியில் வரும் கட்டியங்காரனுக்கு பெயர் எதுவும் சூட்டப்படவில்லை. ஆனால் பெத்லகேம் குறவஞ்சியில் வரும் கட்டியங்காரனுக்கு சாஸ்திரியார் யோவான் எனப் பெயர் சூட்டி அறிமுகப்படுத்துகிறார். பெத்லகேம் குறவஞ்சியில் வரும் கதை மாந்தர்களையும், பொருள்களையும் உருவகப் பாத்திரமாகப் படைத்துள்ளார் சாஸ்திரியார். கட்டியங்காரனை யோவானுக்கும், இயேசுவை மணவாளனுக்கும், சீயோன் குமாரத்தியை திருச்சபைக்கும், உலகச் செயலை நிலாவிற்கும், தென்றலை துன்பத்திற்கும், பந்தை பூமி உருண்டைக்கும், மன்மதனை பழைய ஆதாமுக்கும், குறவஞ்சியை விசுவாசத்திற்கும், குறியை இயேசுவின் நல்வாக்காகவும், நூவனைத் திருச்சபையில் மக்களைச் சேர்க்கும் நற்செய்தியாளனுக்கும், வலையைத் தேவ செய்திக்கும் உருவகமாகக் கூறுகிறார். திருக்குற்றாலக் குறவஞ்சியில் இத்தகைய உருவக முறையானது மாந்தர்களைப் பற்றியும், மாந்தர்கள் பயன்படுத்தும் பொருள்களைப் பற்றியும் உருவகம் இல்லை. பெத்லகேம் குறவஞ்சி திருக்குற்றாலக் குறவஞ்சியைத் தழுவி, பெத்லகேம் குறவஞ்சியைச் சாஸ்திரியார் படைத்திருந்தாலும் அதில் வரும் கருத்துக்கள் யாவையும் பரிசுத்த வேதகாமத்தில் உள்ள கருத்துக்களின் அடிப்படையிலே படைத்திருக்கிறார்.

## தொகுப்புரை

- பாத்திரப் படைப்பு என்பது படைப்பாளியின் உணர்வின் வெளிப்பாடே ஆகும். பாத்திரப்படைப்பு எந்த அளவிற்கு படைப்பாளியின் உள்ளுணர்வுகளோடு உறவாடி வெளிப்படுகிறது. பாத்திரப் படைப்பு என்பது பெயர் சூட்டுவதோ அல்லது அங்க வருணனை செய்வதால் அமைந்ததோ அல்ல. மனம், அறிவு, சிந்தனை, குணவியல்பு இவற்றை எல்லாம் கூர்ந்து அறியப்படுகிறது.

- பாத்திரப் படைப்பு என்பது தனி மனிதப் பண்புகள் மற்றும் அப்பண்புகளின் அடிப்படையில் அவர்கள் செய்யும் செயல்களை கொண்டு படைப்பில் பயன்படுத்திக்கொள்ள முடியும். அதனடிப்படையில் குறவஞ்சி நாடகத்தில் பாத்திரங்களின் வழியாகப் நாடகப் பாங்கினை நடத்திச் செல்வதை அறியமுடிகிறது.

- குறவஞ்சி, கோவில்களில் நடிக்கப் பெற்று வந்துள்ளதென ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், திருக்குற்றாலக் குறவஞ்சி பற்றிய அவரின் ஆங்கிலக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். மேலும் குறவஞ்சி இலக்கியம் சிறந்த நாட்டிய நாடகம் என்றும், நவராத்திரி விழாவின்போது நடிக்கப் பெற்று வந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார். திருவாரூரில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஆலயத்தின் கீழைக் கோபுரத்திற்கு அருகிலுள்ள தேவாசிரிய மண்டபத்தில் பங்குனி மாதத்தில் நிகழும் பிரம்மோற்சவத்தின்போது நடத்தப்பட்டு வந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

- திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி குறத்தி குறி சொல்லும்போது தலைவிக்கு ஏற்படும் உளவியல் போராட்டத்தையும்; குறத்தியைத் தேடியலையும் சிங்கனின் மனப்போராட்டத்தையும் நிரல்படக் கூறியிருக்கின்ற முறை “வேட்கையை வளர்த்தல்” என்னும் நாடக உத்தியைப் பின்பற்றப் பட்டுள்ளது.

- குற்றாலக் குறவஞ்சி மற்றும் பெத்லகேம் குறவஞ்சியின் நெடிதுயர்ந்த பண்பாடு மிக்கத் தலைவனாக இறைவன் படைக்கப் பட்டுள்ளமையும், எளிய முறையில் சிங்கன் படைக்கப்பட்டுள்ளமையும் முரண் என்னும் நாடகப் பண்புகளுக்குச் சான்றாகும்.

- குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சியின் கதை மாந்தர்களாக வரும் அனைவரும் தலைசிறந்த பாத்திரப் படைப்புகளாக இருப்பதே நாடக ஆசிரியர்களுக்குக் கிடைத்த வெற்றியாகும். ஆகவேதான் இக்குறவஞ்சிகள் சிற்றிலக்கியத்தில் தலைசிறந்த இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றது.

- நாடக நூலின் தனிச்சிறப்பே கற்றோரே அல்லாமல் மற்றோரும் கேட்டு இன்புறத் தகுந்த முறையில் இருப்பதாகும். மானிட சமுதாயத்தில் பேசப்படும் கொச்சைச் சொற்களையும் இடையிடையே பயன்படுத்திக் கூறுவது நாடகப் பாத்திரத்திற்கு அணி சேர்ப்பதாக அமைகிறது.

- இவ்விரு குறவஞ்சிகளுமே இறை வாழ்த்துடன் தொடங்கி, இறைவாழ்த்துடன் நிறைவு பெறுகிறது. இவ்விரு குறவஞ்சி நூல்களும் ஊரின் பெயரை அடைமொழியாகக் கொண்டு பெயர் சூட்டப்பட்டுள்ளன. திருக்குற்றாலக் குறவஞ்சியானது குற்றாலநாதரின் புனிதத் தலமாக திகழக் கூடிய குற்றாலம் என்னும் பெயராலும், பெத்லகேம் குறவஞ்சியானது உலக இரட்சகர் இயேசுநாதர் அவதரித்த ஊரான பெத்லகேம் என்னும் பெயராலும் அழைகப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

59. வை.சச்சிதானந்தம், மேலை இலக்கியச் சொல்லகராதி, ப. 29.

60. டாக்டர் மு.வரதராசன், நாவல்கள், ப. 57.

61. ந. பிச்சமூர்த்தி, தமிழ் இலக்கியக்கொள்கை, ப. 13.

62. அகிலன், கதைக்கலை, ப. 4

63. தி.குற்.குற.பா.5. ப.9.

64. சர.குற.பா.5 ப.9.

65. சோலை.குற.பா 5. ப.9.

66. கலைக்களஞ்சியம், தொகுதி. 6. ப.352.

67. Buckner B. Trawick, World Literature, P.60,

68. சே.சுந்தரராசன் , பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.3.

69. உ.வே.சா, ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், 'குறவஞ்சி நாடக நூன்முகம்,' ப.280.

70. கும்.குற. ப.9

71. வே. பிரேமலதா (பதிப்), தியாகேசர் குறவஞ்சி முன்னுரை, பக். 33 – 34.

72. நர்மதாவின் தமிழ் அகராதி, ப. 200.

73. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.299.

74. பி.இரத்தினசபாபதி, குறவஞ்சி இலக்கிய நோக்கும் போக்கும்.ப.59.

75.திரு.குற்.கு.பா.10. ப.18.

76. திரு.குற்.கு.பா.11 ப.20.

77. திரு.குற்.கு.பா.12 ப.22.

78. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.892.

79.நர்மதாவின் தமிழ் அகராதி, ப.766.

80. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 27.

81. மேலது. ப. 28.

82. மேலது. ப. 21.

83. மேலது. ப. 35.

84. மேலது. ப. 36.

85. மேலது. ப. 37.

86. மேலது. ப. 40.

87. மேலது. ப. 43.

88. மேலது. ப. 45.

89. மேலது. ப. 46.

90. மேலது. ப. 59.

91. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 339.

92. நர்மதாவின் தமிழ் அகராதி, ப.29.

93. புலவர். தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.66.

94. மேலது. ப.68.

95. மேலது. ப.95.

96. மேலது. ப.98.

97. மேலது. ப.107.

98. மேலது. ப.109.

99. மேலது. ப.110.

100. மேலது. ப.110.

101. மேலது. ப.110.

102. மேலது. ப.111.

103. நர்மதாவின் தமிழ் அகராதி, ப.352.

104. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.339.

105. புலவர்.தமிழமுதன், குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.113.

106. மேலது. ப.122.

107. மேலது. ப.123.

108. மேலது. ப.123.

109. மேலது. ப.141.

110 மேலது. ப.152.

111. மேலது. ப.159.

112. மேலது. ப.155.

113. மேலது. ப.162.

114. மேலது. பக். 166 – 169.

115. மேலது. பக். 171 – 173.

116. பரி.சு.வே, லூக். 7:28. . புதிய ஏற்பாடு, ப.89.

117. பரிசு.வே, மத் : 3 – 4. . புதிய ஏற்பாடு, ப.05.

118. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.42.

119. மேலது. பக். 49 - 50.

120. மேலது. பக். 53 - 54.

121. மேலது. ப. 55.

122. மேலது. பக். 58 - 59.

123. மேலது. ப. 63.

124. பரிசு.வே, புலம்: 2 -13. பழைய ஏற்பாடு, ப.954.

125. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 88.

126. மேலது. ப. 89.

127. மேலது. பக். 97-98.

128. மேலது. பக். 113-114.

129. மேலது. ப. 117.

130. மேலது. ப. 121.

131. பரிசு.வே.ஆதி: 1. 16 – 18. . பழைய ஏற்பாடு, ப.01.

132. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 124.

133. மேலது. ப. 125.

134. மேலது. ப. 14.

135. மேலது. ப. 164.

136. மேலது. ப. 228.

137. மேலது. ப. 230.

138. பரிசு.வே. மத். 28.19 – 20, புதிய ஏற்பாடு, ப.47.

139. சே.சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 252.

140. மேலது. ப. 263.

141. மேலது. ப. 343.

142. மேலது. ப. 337.

143. மேலது. ப. 340.

144. மேலது. ப. 365.

145. மேலது. ப. 382.

146. மேலது. பக்.382-383..

147. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.15.

148. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 53.

149. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.28.

150. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.97.

151. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.46.

152. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.114.

153. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.70.

154. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.165.

155. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.76.

156. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.166.

157. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.163.

158. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 386.

159. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப.164.

# இயல் -3

## பல்வகை வளங்கள்

உலகப் படைப்பில் இயற்கையால் நிறைந்த இவ்வுலகத்தில் அரிய மானிடராய்ப் பிறந்த முதல் சமூகம் நம் தமிழ்ச் சமூகம் ஆகும் என்பர். எனவே சமுதாய மக்களும் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தச் சங்ககால மக்களும் ஆவார்கள். ஒரு மனிதனாலும் முழுமையாக ஆக்கவும், அழிக்கவும் முடியாது. அந்த ஒன்றே இயற்கை ஆகும். இயற்கைத் தரும் இல்லாதவை இனியவை எனப் பலவாக இயற்கையை வணங்குதல் உள்பட மரமாகப் போற்றப்படுகிறது. நவீன இயந்திரங்கள் பல்வேறு ஊடகங்கள் தோன்றினாலும் இயற்கை என்ற சக்திக்கு நிகர் எதுவும் இல்லை. இதனைத் தொல்காப்பியர், “இயற்கைப் பொருளை இற்று என கிளத்தல்”[160] என்கிறார். குறிஞ்சி நிலப் பரப்பை மலைகளும், நீர்வீழ்ச்சிகளும் சூழ்ந்து அழகு சேர்ப்பவை ஆகும்.

பண்டைத்தமிழ்க் குடியின் குறிஞ்சி வாழ்வு என்பது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்புத் தமிழ் நாகரிகம் குறிஞ்சிப்பாட்டின் வழியாக வெளிப்படுவதை அறியலாம். தமிழர்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பாகுபாடு செய்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன அவையாகும். அவற்றுள் மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி என வகைப்படுத்துகின்றனர். தொல்காப்பியர் காலத்தில் அவருக்கு முற்பட்ட காலத்திலும் திணை என்னும் தனிக் வழி கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. திணை வழியாக இலக்கியத்தின் இயற்கை வர்ணனைச் செய்கிறார். இதனைத் தொல்காப்பிய நூற்பா,

“மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”[161]

எனப் புலப்படுத்துவது இயற்கைச் சூழலில் பாட்டிற்கானச் சான்றாகும்.

---

[160] . தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், நூற்பா.504. ப.95

[161] . தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணை இயல், நூற்பா.5. ப.18

சங்ககால மக்கள் இயற்கைக்கு முக்கியத்துவம் அளித்தனர். இயற்கைக்குப் பயந்து அதனை வழிபடும் பொருளாகவும் மாற்றித் தன் வாழ்க்கையை இயற்கையோடு பயணித்தார்கள். இயற்கைப் பொருள் மனிதன் தோன்றியக் காலத்தில் அவரோடு இணைந்து மாறுபட்டும் அமைத்துள்ளது. மனிதனும் இயற்கையும் வேறல்ல என்கிற உணர்வை அளிப்பதுதான் இயற்கை நெறி ஆகும். சங்க காலப் புலவர்களும் இயற்கையோடு இணைந்த வாழ்க்கை நடத்தி உள்ளனர். இயற்கைப் பொருளோடு கண்டவற்றை நன்கு ஆராய்ந்து நுண்ணறிவும் பெற்று இருந்தனர். இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தால் வாயிலாக அனைத்து உயிர்களும் இயல்புகளையும் நன்கு தெரிந்து வைத்திருந்தனர். எனவே அதனை அப்படியே உவமை ஆக்கினார். இயற்கைப் பொருள்களின் இயல்பையும் அவற்றினால் மனிதகுலத்திற்கு ஏற்படக்கூடிய தாக்கத்தையும் சங்கப் பாடல்கள் வழியாகவும் வெளிப்படுத்தினர். பாடல் அடிகளை விரித்துக் கொள்ள இயற்கை வருணனைப் புலவர்களால் உத்தியாகப் பயன்படுத்தப்பட்டது. இயற்கை வர்ணனை என்பது அதன் வளங்களை முன்னிறுத்தி வழிவகுக்கும் முதற்பொருள் என்று தொல்காப்பியரால் சுட்டப்படுவது ஆகும். இயற்கை வர்ணனை இடங்களில் குறிப்பாக அவற்றின் வளங்களை வெளிப்படுத்தும் உத்தியைக் கையாண்டனர் இவற்றில் உள்ளுறை, இறைச்சி என்கிற இலக்கண வரையறைக்குள் உட்படுத்தினர்.

"சங்கப்பாடல்கள் மனித வாழ்க்கை, அதன் கொள்கைகள், இன்ப, துன்பங்கள் முதலியவற்றைக் கருத்தில் கொண்ட ஆயினும் எந்த ஒரு பாடலும் இயற்கை வர்ணனை இன்றி இருக்க இயலாது. இயற்கை வர்ணனை இங்குப் பின்னணி ஆகும். மனித வாழ்க்கை நாடகத்திற்கு அமைகிறது."[162] என்று புலப்படுத்துகிறார். இயற்கையிலிருந்து மலர்வனம் ஆகிய பயிர், செடி, கொடி, காய், கனி, கரும்பு, மலர், மரம் போன்றவற்றைப் புலவர்கள் உரிமைக்காகவும் படைத்தார்கள்.

**குறவஞ்சியில் பல்வகை வளங்கள்**

நர்மதாவின் தமிழ் அகராதி வளம் என்ற சொல்லுக்கு, "1.செழுமை 2.மிகுதி 3.பயன் 4.செல்வம் 5.வருவாய் 6.அழகு 7.வெற்றி"[163] என்று பல்வகைப் பொருள்களைக் கூறுகின்றது. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி வளம் என்ற

---

[162] . ஆலிஸ், கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும், ப. 160.
[163] . நர்மதாவின் தமிழ் அகராதி –ஆசிரியர் குழு, ப.792

சொல்லுக்கு, "1.இயற்கைப் பொருள்கள் 2.இயற்கை சக்திகள் முதலியவற்றின் நிறைவு 3.மனித சக்தி 4.தொழில் 5.செல்வம் முதலியவற்றின் மிகுதியான இருப்பு 6.எண்ணெய் வளம் மிக்க நாடு 7.தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வருவதால் உலகில் கனிம வளங்கள் குறைந்து கொண்டே வருகின்றன 8.வன வளம் கெடுவது மழைப் பொழிவைப் பாதிக்கும் 9. வளமான நிலங்கள் 10. புதுச் சொல்லாக்கம் மொழியின் வளத்தை அதிகரிப்பதாக இருக்க வேண்டும் 11.நிரம்பியிருப்பது 12.நிறைவு 13.செழுமை 14.கவிதையில் காணப்படும் கற்பனை வளம் 15.குறள் வளம் 16. எல்லாச் சிறப்புகளும் வசதிகளும் பெற்றுள்ள மேம்பட்ட நிலை 17. 'வளமுடன் வாழ்க' என்று மணமக்களை வாழ்த்தினார்"[164] என்று பலவகையான பொருள்களைக் கூறுகிறது.

மனிதனின் தேவையைப் பூர்த்திச் செய்பவைகள் வளம் ஆகும். நமது புவிக்கோள் மூன்று முக்கியக் கூறுகளால் உருவாக்கப்பட்டுள்ளது. அவை பாறைக்கோளம் அல்லது நிலம், நீர்க்கோளம், வளிக்கோளம் அல்லது புவியைச் சுற்றியுள்ள காற்று மண்டலம் ஆகும். இம்மூன்று கூறுகளும் உயிர்கோளத்திற்கு ஆதாரமாகத் திகழ்கின்றன. மனிதனுக்குத் தேவையான அனைத்தையும் இக்கூறுகள் அளிக்கின்றன. இக்கூறுகளில் காணப்படும் எந்த ஒரு பொருளும் மனிதனுக்குப் பயனளிப்பதாக இருப்பின் அது வள ஆதாரம் என அழைக்கப்படுகின்றது. அதைப்போலவே மனிதன் வளமாக வாழ்வதற்கு இலக்கியமானது மிகுந்த பயனைத் தருகிறது. அந்த வகையில் திருக்குற்றாலக் குறவஞ்சியிலும், பெத்லகேம் குறவஞ்சியிலும் செறிந்து இருக்கும் பல்வகை வளங்களைப் பற்றி இவ்வியல் ஆய்வு செய்கிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் - பல்வகை வளங்கள்**

குறவஞ்சி நூல்களுக்கெல்லாம் தாயாக விளங்கக் கூடிய திருக்குற்றாலக் குறவசியில் கவிராயர் கூறும் பல்வகையான வளங்களின் சிறப்புகளை வரிசைப் படுத்துகிறார்.

---

[164] . *கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி – ப.910*

**தலவளம்**

> "அரிகூட அயன்கூட மறைகூடத்
> தினந்தேட அரிதாய் நின்ற
> திரிகூடப் பதியிருக்கும் திருநாட்டு
> வளமுரைக்கத் தெவிட்டாதம்மே
> கரிகூடப் பிடிதியும் சாரலிலே
> ஒரு வேடன் கையில் ஏந்தி
> நரிகூடக் கயிலைசென்ற திரிகூடத்
> தலமகிமை நவிலக் கேளே."[165]

என்ற குற்றாலக் குறவஞ்சிப் பாடல் வரிகளுக்கிணங்கத் திருமாலும், பிரமனும், வேதங்கள் நாள்தோறும் தேடியும் காண்பதற்கு அறிதாகி நின்றவன் சிவபெருமான். அவர் வீற்றிருக்கின்ற திரிகூடநாதர் இருக்கின்ற நாட்டின் வளத்தைச் சொன்னால், அதைக் கேட்கக் கேட்க இன்பமாக இருக்குமேயன்றி வெறுப்புத்தோன்றாது, ஆண்களிறுடன், பெண்பிடிகள் கலந்து திரிகின்ற மலைச்சாரலில் ஒரு வேடன் கையில் வில்லினை ஏந்திக் கொண்டு நரியைத் துரத்திக்கொண்டே கயிலைமலை சென்று முக்தி பெற்றான் அத்தகைய சிறப்புடைய திரிகூடத் தலத்தின் மகிமையை விளக்கப் படுகிறது.

பொங்குகடல் கங்கை, யமுனை, சரஸ்வதி என மூன்று நதிகள் கூடுகின்ற சங்கமம் போன்று செழிப்புற்று இருப்பதும்; அதனைப் பொருந்தியுள்ள சித்திரா நதித்துறைகளில் பொன்னையும், முத்தையும் அலைகள் கொண்டுவந்து ஒதுக்குவதும்; வான் கங்கையென்று சொல்லும்படியாக வானவில்லின் பலநிற ஒளியுடன் விழுகின்ற வடவருவி என்ற நீர்த்தலத்தில் நீராடினால், நீரினால் கழுவப்பட்ட அழுக்குகள் கரைந்து ஓடுவதுபோல, நம் பாவங்கள் கரைந்தோடுவதும்; சங்க வீதியில் சங்கினங்கள் மேய்ந்து கொண்டிருப்பதும்; பெரிய மதில்களின் உச்சியில் கொழுத்த கெண்டை மீன்கள் துள்ளிப் பாய்ந்து கொண்டிருப்பதும்; மலர்ந்த பூக்களுடன் கூடிய செண்பகச் சோலையில்;

[165] .. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 88.

குறும்பலாவின் அடியில் கோயில் கொண்டிருக்கும் வளமிக்கத் தலமே திரிகூடநாதர் வாழும் தலமாகும்.

இப்படி சிறப்பு வாய்ந்த தெய்வத் தலத்தில் அமைந்துள்ள சித்திர சபையில் தெய்வத் தன்மை பொருந்திய முரசு ஒலித்துக்கொண்டே இருப்பதும்; மத யானைகள் நாள்தோறும் வழிபட்ட தலமும்; எல்லோராலும் பலிக்கப்பட்ட புட்பகந்தன் வழிபட்டுப் பேறு பெற்ற தலமும்; பன்றியுடன் வேடனொருவன் வலம் வந்து பேறு பெற்ற தலமும்; விருப்பத்துடன் பரமர் வீற்றிருக்கின்ற தலமும்; வெற்றிப் பொருந்திய தேவர்கள், சிரு குன்றுகளாகவும், மரங்களாகவும், விலங்குகளாகவும் உருமாறித் தவம் செய்கின்ற திருத்தலமாக விளங்குவதைக் கீழ்வரும் பாடல் வரிகள் விளங்குகின்றன.

> "…மன்றுதனில் தெய்வமுரச் சென்றுமேல் முழங்கும்
> வளமைபெறும் சதுரயுகம் கிழமைபோல் வழங்கும்
> நின்றுமதக் கரிபூசை அன்றுசெய்த தலமே
> நிந்தனைசெய் புட்பகந்தன் வந்தனைசெய் தலமே
> பன்றியொடு வேடன்வலஞ் சென்றதிந்தத் தலமே
> பற்றாகப் பரமர்உறை குற்றாலாத் தலமே
> வெற்றிபெறும் தேவர்களும் குன்றமாய் மரமாய்
> மிருகமாய்த் தவசிருக்கும் பெரியதலமே அம்மே!"[166]

பொதிகை மலையில் தொன்னெடுங்காலந் தொட்டுப் பொழிந்து விளங்கும் குற்றாலமலைச் சாரலில் சிற்றாற்றின் கரையில் அமைந்துள்ளது திருக்குற்றாலநாதர் கோயில். இத்தலமானது சம்பந்தராலும் அப்பராலும் சுந்தராலும் பாடப்பெற்ற புகழ்மிக்கத் திருத்தலமாக விளங்குகின்றது. பொதுவாகத் திருத்தலங்கள் சதுரவடிவமாகவோ, நீண்ட சதுரவடிவமாகவோ அமைந்திருக்கும் ஆனால் திருக்குற்றாலநாதர் கோயில் 'சங்கு வடிவமாக' அமைந்திருப்பதால் அது சாலச் சிறந்தது என்று அடியார்களும், அருளாளர்களும் கூறுகிறார்கள். திரிகூட மலைச்சாரலில் இத்திருக்கோயில் கிழக்குமுகமாகக் காட்சியளிக்கிறது. இத்திருக்கோயிலானது "மதுரைத் தமிழ்வேள் பி.டி.இராஜன்

---

[166] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 91.

அவர்களால் 10.09.1930 ஆம் நாள் புதுப்பிக்கப்பட்டதாக”[7] முனைவர் கணபதிராமன் தமது நூலில் கூறுகின்றார்.

இலக்கியங்களாலும், வரலாற்றுச் சிறப்புகளாலும் புகழ்பெற்ற இக்கோயிலில் திருக்குற்றாலநாதர் இலிங்கத்திருமேனியோடு எழுந்தருளியுள்ளார். இலிங்கத்திருமேனி சுமார் 8 அங்குல உயரமாக இருக்கலாம். இலிங்கத்திருமேனி பழுப்பு நிறமாக் காட்சியளிப்பதாக உள்ளது. இவ்லிங்கத்திருமேனியைத் தாங்கி நிற்கும் ஆவுடையார் பெரிதாகக் காட்சியளிக்கிறார். “இலிங்கத்திற்கு இடதுபுறம் மனோன்மணி அம்மையார் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றார். அர்த்தமண்டப வெளிப்புறமாக இலட்சுமி சங்கு சக்கரங்கள் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன. இந்த இலிங்கத்திருமேனியின் உச்சியை அகத்தியர் அழுத்தியதால் அகத்தியரின் ஐந்து விரல்களும் பதிந்துள்ளன.”[167] அகத்தியர் குறுகுறு குற்றாலமென்று அழுத்தியதைத் திரிகூடராசப்பரும் தமது தலபுராணத்தில் கூறுவதாக முனைவர் கணபதிராமன் தமது நூலில் கூறுகின்றார். அர்த்த மண்டபத்தின்மேல் தாமரைமலர் ஏழு இதழ்களோடு கல் சிற்பமாக வடிவமைக்கப் பட்டுள்ளனது.

**குறும்பலா**

ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் குற்றாலத்தில் என்ன இருந்தது? ஊருண்டா? தெருவுண்டா? வீடு, வாசலுண்டா? ஜனங்களுண்டா? குடியிருப்புத்தான் உண்டா? ஒன்றுமில்லை. கோவில்தான். கோவிலும் ஒருமரம்தான். குறும்பலா மரம்தான். அந்தப் பலா மரத்தின் பெருங்கிளைகள் எல்லாம் நான்கு வேதங்களாகும். அக்கிளைகளிலிருந்து வளர்ந்த கொம்புகளெல்லாம் சிவலிங்கம், கனிகளெல்லாம் சிவலிங்கம், அக்கனிகளிலுள்ள சுளைகளெல்லாம் சிவலிங்கம், விதைகளெல்லாம் சிவலிங்கம் காட்சி தருவதாகத் திரிகூடராசப்பக் கவிராயர் பின்வரும் குறவஞ்சி பாடல் மூலமாகக் கூறுகின்றார்.

---

[167] . முனைவர்.கணபதிராமன், திருக்குற்றாலமும் ,குற்றாலநாதர் கோயில் வரலாறும், ப.57.

“கிளைகளாய்க் கிளைத்தபல கொப்புளலாம்
சதுர்வேதம் கிளைகள் ஈன்ற
களைஎலாம் சிவலிங்கம் கனிஎலாம்
சிவலிங்கம் கனிகள் ஈன்ற
களைஎலாம் சிவலிங்கம் வித்துஎலாம்
சிவலிங்க சொருபம் ஆக
விளையும்ஒரு குறும்பலவின் முளைத்து”[168]

என்று குறும்பலா மரத்தின் சிறப்பை அறிந்துகொள்ள முடிகிறது.

**பஞ்சமுகத் தரிசனம்**

ஐந்து தரிசனமான மேற்குமுக விநாயகர், மேற்குமுக ஈஸ்வரன், தெற்கே விமானம், திரிகூட மலை, தேனாறாகிய சித்திரா நதி போன்ற பஞ்ச தரிசனத்தைத் தரிசித்து அருச்சுனன் விபூதி சம்புடத்தையும், பாசுபதாஸ்திரத்தையும் பெற்றான் என்று தல புராணம் கூறுகின்றது.

அருச்சுனன் துரியோதனதியரை வெல்லப் பாசுபதாஸ்திரம் வேண்டி சிவபெருமானை நினைத்து தவத்தை மேற்கொண்டான். இவனது தவத்தை மெச்சி சிவன் வேடனாகவும், பார்வதி வேடுவப் பெண்ணாகவும் வேடம் பூண்டு ஒரு பன்றியை விரட்டிக் கொண்டுவர, பன்றி அருசுனன் அருகில் ஓட தியானம் களைந்து பன்றியை விரட்டிய சிவனாகிய வேடனை எதிர்த்துப் போர் செய்ய, அருச்சுனன் சிவன் தலையிலடிக்க, சிவனும், பார்வதியும் மறைந்திட சிவன் “அன்பனே அருச்சுனா, நீ திரிகூட மலைக்குச் சென்று ஐந்து தரிசனத்தைத் தரிசித்தால் இழந்த விபூதி சம்புடத்தையும், பாகபதத்தையும் பெறுவாய்” என்றிட அருச்சுனன் குறும்பலாநாதரை வணங்கியும் ஐந்து தரிசனத்தையும் பெற்றும், இழந்த சம்புடத்தையும், பாசுபதாஸ்திரத்தையும் பெற்றான் என்று திருக்குற்றாலத் தலபுராணம் கூறுகிறது என்பதை,

[168] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 7.

"சேணுயர் விடைமேல் வந்து
சம்புடற் திரிகூடத்திற்
காணுக கடவுள்பஞ்ச
தெரிசனத்தென்று காட்டித்
தாணுநாயகர் தாம்பாசுபதம்
கொடுத்தருளி போந்தார்
கோணிலாமனத்தன் போற்றிக்
குறும்பலா சாரல் சேர்ந்தான்"[169] (தலமகிமை செய்யுள் 65)

எனற பாடல் மூலமாக அறிய முடிகிறது.

**வியப்பூட்டும் செய்தி**

வாய் பேச முடியாத 12 வயது சிறுமி மீனாட்சி என்பவள், பராசக்தியின் அருளை வேண்டி மூன்றாண்டுகள் தவமியற்றினாள். இந்தப் பெண் தணிக்கையாளர் கே.எஸ்.டி.மூர்த்தி அவர்களின் பெண், "தேவி இந்தப் பெண்ணுக்குச் சிறு குழந்தை வடிவில் வந்து, "என்னைப் பாடுக" என்று கூறியருள, இந்தப் பெண் பாடத் தொடங்கிவிட்டாள். பாடலைக் கேட்டு மகிழ்ந்த தேவி மறைந்துவிட்டாள். மீனாட்சியும் அதுமுதல் பேசத் தொடங்கிவிட்டாள். இந்தச் செய்தி உலகமெல்லாம் பரவியது. (SEE PREDICOTTON MARCH 1950, 241 LONDAN MONTHLY)"[170] இச்செய்தி ஏ.சி.சண்முகம்பிள்ளை எழுதிய "திருக்குற்றாலத் தலவரலாறு" என்னும் நூலில் உள்ளது.

**திரிகூட மண்டபம்**

திரிகூட மண்டபத்திலிருந்து இறைவன் சந்நிதிக்குச் செல்லும் வாயிலில் கண்ணைக் கவரும் வேலைப்பாடுகள் அமைக்கப் பெற்றுள்ளன. மண்டபத்தின் முன்பு அழகான செவ்விய முறையில் மூன்று நிலையுள்ள கோபுரம் அமைக்கப் பெற்றுள்ளது. கனவு, நினைவு, உறக்கம் என்ற மூன்று தத்துவத்தின் அடிப்படையில் இக்கோபுரம் உருவாக்கப் பட்டுள்ளது. திரிகூட மண்டபமான

[169] . தலமகிமை செய்யுள். 65. ப.23.

[170] . ஏ.சி.சண்முகம்பிள்ளை, திருக்குற்றாலத் தலவரலாறு, ப. 13

நூற்றுக்கால் மண்டபத்தில் விழாக்காலங்களில் சுவாமி, அம்பாள் ஆகியோருக்குச் சிறப்பான அலங்காரம் செய்து இம்மண்டபத்திற்கு அவர்களை எழுந்தருளச் செய்து பூசைகள் நடைபெறும் சிறந்த தலமாகக் குற்றாலநாதர் தலம் விளங்குகிறது.

**நாட்டு வளம்**

மாமரங்களிலே இருந்துகொண்டு குயில்கள் ஒருபுறம் 'காமத்துரை வந்தான் வந்தான்' என்று முழக்கமிட்டுக் கொண்டிருக்கும், மறுபுறம் பருத்த முலைகளிலே முத்தாரங்கள் கிடந்து புரளும் மின்னல் போன்ற அழகினையுடையவரான பெண்கள், அவர்களுடைய அல்குல் தேர்களை அலங்காரம் செய்து கொண்டிருப்பார்கள், மற்றொரு புறத்திலே மிகப் பெரிய திங்களாகிய வெண்கொற்றக் குடையானது மேலே கவிழ்ந்து கொண்டிருக்கும், மற்றொரு புறத்திலே பறக்கின்ற கிளிகளாகிய குதிரைகள் தேரின் முன்னே கொஞ்சிச் சென்று கொண்டிருக்கும். இளந்தென்றலாகிய தேரினை உடையவனாகக் காமதேவன் உலாவரும் சிறப்புமிக்க வளமான நாடாகும்.

மேகத்தைப் போன்ற கரிய கூந்தலையுடைய பெண்களைக் கண்டு நாணம் கொண்டு கடலைச் சேர்ந்த கறுப்பான மேகங்கள், கடல் நீரை முகந்து கொண்டு, அப்பெண்களின் முலைகளைப் போன்ற மலைகளைச் சேர்ந்து, அதிலே வானவில்லை தோற்றுவித்து, நீரைச் சேர்ந்த மழைத் தாரையாகிய அம்புகளுடன், நெடிய கீழ்க்காற்றாகிய தேரிலேறி, கதிரவனின் தேரைச்சுற்றிக் கார்காலமாக மாற்றி, முதுவேனிலை வெற்றிகொள்ளும் வளமிக்க நாடாகும்.

நீர்த்துறையில் இறங்கும் எருமை மாடுகள் சொரிகின்ற பாலைக் குடித்த வாளை மீன்கள், மணமிக்க கூழைப் பலாவில் பாயும், அப்பலாக்கனிகள் வாழையில் சாயும், வாழை சாய்ந்து தாழை மரத்தினைத் தாக்க, வருகின்ற விருந்தினருக்குச் சோரிடுவது போன்று தாழை மகரந்தமாகிய சோற்றையிடும். அச்சோற்றை வாழை தன் குருத்தை விரித்துப் பெற்றுக் கொள்ளும் வளமான நாடு என்பதை,

"சூழமேதி இலங்குத் துறையில்
சொரியும் பாலைப் பருகிய வாளை
கூழை வாசப் பலாவினில் பாயக்
கொழும்ப லாக்கனி வாழையில் சாய
வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க
வருவிருந்துக் குபசரிப் பார்போல்
தாழை சோரிட வாழை குருத்திடும்..."[171]

என்று பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும் வளமுடைய பூமிக்குள்ளே முதலில் தோன்றிய வளமிக்க நாடாகும். சகல தேவர்களுக்கும் அன்புடையதாக விளங்கும் தெய்வீக நாடு இந்நாடாகும். எட்டுத்திசைகளிலும் வளர்ந்தோங்கிய நாடு சிவத்துரோகம் என்ற தீமை அறவே நீங்கிப்போன சிவநாடு இந்நாடாகும். பழைமையான நான்மறைகளும் பாடிப்பரவிய நாடும், மைதீட்டிய கண்களையுடைய குழல்வாய் மொழியினைப் பாகமாக உடையவரின் இளந்தென்றல் உலாவும் சிறப்புமிக்க நாடு இந்நாடாகும்.

அகத்திய முனிவர் ஐநூறு வேள்விகளைச் செய்வதற்கு இடமாயிருந்த நாடும்; பலகோடி யுகங்களைக் கண்ட மிகவும் பழைமையான நாடும்; தாமரை மலரிலே தோன்றிய நான்முகன் வந்து பிறக்கின்ற நாடும்; திருமகளும், கலைமகளும், போற்றுகின்ற நாடும்; செம்மையான தமிழ்ச் சொல்வளமுடைய அகத்திய முனிவர் வந்து சேர்ந்த நாடும்; சிவந்த கண்களையுடைய திருமால் சிவனாக மாறிய நாடும்; உவமையை ஒரு பாகத்தில் கொண்ட திருக்குற்றால நாதரின் இளந்தென்றல் உலவுகின்ற இனிமையான நாடாகும் என்பதை,

"அஞ்சுநூறு மகம் கொண்ட நாடு
அநேககோடி யுகங்கொண்ட நாடு
கஞ்சயோனி அகம் உதிக்கின்ற நாடு
கமலை வாணி துதிக்கின்ற நாடு

[171]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 83.

செஞ்சொல் மாமுனி ஏகிய நாடு
செங்கண் மால்சிவன் ஆகிய நாடு”[172]

என்ற பாடல் வரிகளால் திரிகூட நாட்டின் வளத்தினை அறிய முடிகிறது.

“வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.”[173]

மழை பெய்ய, உலகம் வாழ்ந்து வருவதால், மழையானது உலகத்து வாழும் உயிர்களுக்கு அமிழ்தம் என்று உணரத்தக்கதாகும் என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க மாதம் மும்முறை தவறாமல் மழை பொழியும் நாடாகும். அவ்வாறு மும்முறை மழை பொழிவதால்,

“உழுதுண்டு வாழ்வாறே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்”[174]

என்ற வள்ளுவப் பெறுந்தகையின் குறளுக்கேற்ப உழவு செய்து வருடம் மூன்று போகம் விளைகின்றதும், அதனால் கிடைத்ததை உண்டு உரிமையோடு வாழும் நாடாகவும்; வேதங்களே வேர், கிளை, இலை என மூன்றும் அமைந்த குறும்பலா மரத்தினையுடைய நாடாகவும்; நித்தியம், நைமித்திகம், காமியம் ஆகிய மூன்று சிறப்புகளும் தவராமல் நடக்கின்ற நாடாகவும்; பிறப்பு, வாழ்வு, இறப்பு ஆகிய மூன்று நிலைகளிலும் நன்மை செய்யும் நாடாகவும்; மேல், நடு, கீழ் என மூன்று உலகங்களும் வலமாகச் சுற்றிப் போற்றுகின்ற நாடாகவும்; நாத தத்துவப் பொருளாய் அரி, அயன், அரன் என மூன்று உருவாக விளங்கும் வளமான குற்றால நாதரின் நாடாகும் என்பதை, திரிகூட ராசப்பக் கவிராயர்,

“மாதம் மூன்றும் மழையுள்ள நாடு
வருடம் மூன்றும் விளைவுள்ள நாடு
வேதம் மூன்றும் பலாவுள்ளநாடு

[172] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 85.

[173] . டாக்டர். மு.வரதராசனார், திருக்குறள், தெளிவுரை, குறள் எண், 11. ப.5

[174] . டாக்டர். மு.வரதராசனார், திருக்குறள், தெளிவுரை, குறள் எண், 1033. ப.21

விசேஷம் மூன்றும் குலாவுள்ள நாடு
போதம் மூன்றும் நலம்செயும் நாடு
புவனம் மூன்றும் வலஞ்செயும் நாடு
நாதம் மூன்றுரு…”[175]

எனத் திருக்குற்றால நாட்டின் வளத்தைப் புகழ்ந்து கூறுகின்றார் கவிராயர்.

**மலை வளம்**

மேற்குத் தொடர்ச்சி மலைக்கு அருகில் இருக்கும் குற்றாலத்தைத் திரிகூடமலை என்றும் அழைப்பர். திரி என்றால் மூன்று என்று பொருள்; கூடம் என்றால் சிகரம்; “மேற்குத் தொடர்ச்சிமலை, யானைமலை, பொதிகைமலை ஆகிய மூன்று சிகரங்கள் உள்ளமையால் திரிகூட மலை என்று பெயர் பெற்றது.”[176] சிவபெருமான் எத்தலத்தைப் பிரிந்தாலும் பிரியாது தங்கியுள்ள பெரியமலை திரிகூடமலை என்பதால் சிவபெருமானின் பொன்மலை, வெள்ளிமலை, மந்தரம் என்ற மூன்று மலைக்கும் திரிகூட மலையை ஒப்பிடுகின்றனர். திரிகூட மலை இயற்கை வளமிக்கது. மா, இருப்பை, மகிழ மரம், செண்பகம், தேவதாரு, வன்னி, தேக்கு, சந்தனம், நாவல், அத்தி, அரசு, ஆலம், மகாலிங்கம், இஞ்சி, வெண்புளி, கோங்கு, வில்வம் போன்ற பல்வகை மரங்களாலும், பல்வகை மலர்களாலும் சூழப்பட்டுக் காண்போரைக் கவர்ந்திழுக்கும் கண்கொள்ளாக் காட்சியாகத் திகழும் திரிகூட மலையின் குகையில் முனிவர்கள் வேள்வி செய்யும் அறச்சாலைகளும் இருந்துள்ளன.

திரிகூட மலையை வலம் வருவோர் தீராத வினைத் தீர்ந்து உய்வது நிச்சயம். அதனைத் திசை நோக்கி இறைஞ்சுவோர் சிவத்தைப் பெறுவர்; அதன் கீர்த்தனங்களைக் கேட்போர்த் தேவராவர்; அதன்கண் வாழ்வோர் பெருமையை அளவிட உரைப்பது அரிது என்றும், வட அருவியாகிய கடல் நீருண்டு மேல்நீர்த்துளியைத் தரும் திரிகூட மலையில் உள்ள கல்களெல்லாம் சிவ வடிவாய் உள்ளதென்றும் கவிராயர் பாடியுள்ளார்.

---

[175] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 86.

[176] . முனைவர். கணபதிராமன் – திருக்குற்றாலமும், குற்றாலநாதர் கோயில் வரலாறும்.ப.7.

“திரிகூடத் திருமலையை வலஞ் செய்தார் தீராத வினைகள் தீர்ந்தார்
திரிகூடத் திருமலையைத் திசை நோக்கிப் பணிந்தவருஞ்
சிவத்தைச் சேர்ந்தார்
திரிகூடத் திருமலையின் கீர்த்தனங்கள் கேட்ட வருந்தேவரானால்
திரிகூடத் திருமலைசார்ந் திருப்பவர்கள் மகிமை
துதி செய்யற் பாற்றோ”[177]
(தி.கூ.ம.ச.பா. – 42)

என்று கவிராயர் குற்றால மலை வளத்தைப் புகழ்ந்து கூறுகின்றார். மேலும் இம்மலையில் நிகழும் காட்சிகளைக் கூறும் ராசப்பர், ஆண் குரங்குகளெல்லாம் பல வகையான கனிகளைக் கொண்டுவந்து பெண்குரங்குகளுக்குக் கொடுத்து கொஞ்சி மகிழுவதாகவும், அப்படி அவைகள் உண்ணும்போது அவை சிந்துகின்ற கனிகளுக்காக, தேவர்கள் கெஞ்சிக் கொண்டிருப்பதாகவும், வேடுவர்கள் தங்கள் விழியினால் வானில் செல்கின்ற சித்தர்களை அழைப்பதாகவும், அச்சித்தர்கள் வந்து காயசித்தி மூலிகைகளை வளர்ப்பதாகவும், தேனருவியின் அலைகள் எழுந்து வானின் வழியாக வீழ்ந்து கொண்டிருக்க, அவ்வழியாகச் செல்கின்ற செங்கதிரவனின் கால்களையும், தேர்ச் சக்கரத்தினையும் வழுக்கி விழச் செய்யும் அத்தகைய வளம் மிகுந்த மலை, திருக்குற்றால மலை என்பதை திரிகூடராசப்பக் கவிராயர்,

“வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பர்
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பர்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலைஎங்கள் மலையே.”[178]

---

177 . தி.கூ.ம.ச.பா. 42
178 . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 76.

என்று திருக்குற்றால மலை வளத்தைப் புகழ்ந்து கூறுகின்றார். மேலும் மலையில் ஒலிக்கின்ற அலைகளையுடைய அருவியின் நீரானது கழங்காடுவது போன்று முத்துக்களைச் சிதறிச் செல்வதாகவும், சிறுமியர்கள் கட்டி விளையாடும் மணல் வீடுகளையெல்லாம் அழித்துச் செல்வதாகவும், மலையில் வாழும் மக்கள் கிழங்குகளைத் தோண்டியெடுத்தும், தேன், இறால்களை எடுத்தும், மலை வளங்களைப் பாடி நடனமாடியும், யானையின் கொம்பினை ஒடித்து வறுத்த தினையை இடிப்பதாகவும், குரக்குகளெல்லாம் மாங்கனிகளைப் பறித்துப் பந்து விளையாடுவதாகவும், தேன் நிறைந்த சண்பக மலரின் வாசம் வானுலகில் ஒளிப்பதாகவும் குற்றால மலையின் வளத்தைத் தன் கற்பனைத்திறத்தால் வருணிக்கின்றார் கவிஞர் இப்படியாக,

"முழங்குதிரைப் புனலருவி கழங்கென முத்தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக் கொண்டோடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வனம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்"[179]

என்றும், அம்மலையில் வாழும் நாகப் பாப்புகளெல்லாம் நாகக் கற்களைக் கோடி கோடியாகக் கக்கி ஒளி பரப்பிக் கொண்டிருப்பதாகவும், முழு நிலவைத் தான் உண்ணும் கவளம் என்று எண்ணி யானை வழி மறைந்து நிற்பதாகவும், வேடவர்கள் தினை விதைப்பதற்காகக் காடுகளை அளித்து நெருப்பிடுவதால், அகில், சந்தனம், குங்குமம் போன்றவை எரிந்து காடே மணம் வீசுவதாகவும், காடுகளெங்கும் வரையாடுகள் துள்ளித் துள்ளி ஓடி மகிழ்வதாகவும், காகம்கூட அணுக முடியாத மலையுச்சியில் மேகக் கூட்டங்கள் படுத்து மகிழ்வதாகவும் கவிராயர்,

"ஆடுமர வீனுமணி கோடிவெயில் எறிக்கும்
அப்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்

[179] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 77.

வேடுவர்கள் தினைவிரைக்கச் சாடுபுனந் தோறும்
வித்தைஅகி குங்குமமும் சந்தனமும் நானும்
காடுதொறும் ஓடிவரை ஆடுகுதி பாயும்”[180]

என்று கவிஞர் குற்றால மலையின் வளத்தைத் திறம்படக் கூறுகின்றார். மேலும் வடக்கிலுள்ள கயிலை மலைக்கு ஒப்பாக இத்திரிகூட மலை திகழ்வதாகவும், பொன்மயமான மகாமேரு மலையைப் போன்றதாகவும், மலைகளுக்குள்ள சிறப்புகள் அனைத்தையும் தனக்குள் கொண்டிருப்பதாகவும், வயிரக் கற்களும், மாணிக்கங்களும் விளைகின்ற மலையாகவும், வானத்துச் சூரியன் மலைக்குகைகள் தோறும் நுழைந்து ஒளி பரப்புகின்ற சிறப்பு வாய்ந்த மலையாகவும், உறங்குகின்ற திருமால் கண்விழித்து உலகமெல்லாம் தேடுகின்ற உயர்ந்த வளமிக்க மலையாகத் திரிகூடமலைச் சிறப்புற்று விளங்குவதாகவும் திரிகூடராசப்பக் கவிராயர் புகழ்ந்து கூறுகின்றார். மேலும் குறவஞ்சி வாயிலாகக் கவிஞர், குறவர் இன மக்கள் வாழக்கூடிய பல்வேறு வகையான மலைகளைப் பற்றிக் குறவஞ்சி, கொல்லிமலை என்பது எனது இளையவள் வாழும் மலை என்றும், எனது கொழுநனுக் காணியாட்சியான மலை பழனி மலை என்றும், கதிரவன் படிந்து செல்லும் மலை என்னுடைய தந்தைக்குரிய மலை என்றும், மிகப்பெரிய மலையாக விளங்கும் இமய மலை என் தமயனுக்குரிய மலை என்றும், சொல்லுதற்குரிய அருமையுடையதான சுவாமி மலை என்னுடைய மாமிக்குரிய மலையென்றும், நாஞ்சில் நாட்டிலுள்ள வேள்வி மலை என் தோழிக்குரிய மலையென்றும் பெருமையாகக் கூறும் குறவஞ்சி, இவை எல்லாவற்றையும்விட மேகக் கூட்டக்கள் முழவு கொட்ட, மயிலினங்கள் ஆடுகின்ற திரிகூட மலைதான் எங்களுக்குச் செல்வத்தைத் தரக்கூடிய வளமான மலை என்று குற்றால மலை வளத்தினைப் புகழ்ந்து கூறுகிறார்.

### அருவி வளம்

குற்றாலம் என்றால் அது குற்றாலம்தான். குறவஞ்சி என்றாலே குற்றாலக் குறவஞ்சிதான். குற்றாலம் என்றாலே குற்றாலநாதர் கோயில்தான். குற்றாலம்

---

[180] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 78.

என்றாலே குறும்பலாதான். குற்றாலம் என்றாலே மலைதான். குற்றாலம் என்றாலே அருவிதான் நம் நினைவிற்கு வருகின்றது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வெயில் நுழைய முடியாத பச்சைப் பசேலென்று இருண்ட காடாகத்தான் இருந்தது குற்றாலம். அக்காடுகளில் ஊடுருவி தப்பிப் பிழைத்து அகத்திய முனிவர், மாணிக்கவாசகர், பட்டினத்தார் போன்ற பக்தர்களும் சிரமப்பட்டு இம்மலைக்கு வந்திருப்பதாக வித்வான்.ல.ச.சண்முகசுந்தரம் தாம் எழுதிய குற்றாலக் குறவஞ்சி என்னும் நூலின் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார்.

குற்றாலத்திலுள்ள பொதிகை மலை அருவியைப் பொங்குமாக்கடலில் பொங்கிவரும் அருவியை வேறெங்கும் கண்டிறாத அளவிற்குக் குழந்தையைத் தாயானவள் குளிப்பாட்டுவதைப் போன்று, உச்சி முதல் உள்ளங்கால் வரை தேய்த்துக் குளிப்பாட்டிவிடும் அருவி. இலட்சக்கணக்கான குடத்தின் பாலை மலையிலிருந்து கொட்டுவதைப் போன்று கொட்டிக்கொண்டே இருக்கும் அருவி. கடல் பொங்கி ஆர்ப்பரிக்கும் காட்சியைப் போன்று, குற்றால அருவியும் திம்! திம்! என்று விழுந்து கொண்டே இருக்கும். ஒருமுறை அருவியில் குளித்தால் போதும், ஆயுள் முழுவதும் அப்படியே மனதில் நிலைநிற்கச் செய்துவிடும். பிறவிப் பிணியே அடிபட்டு ஓடத்தான் செய்யும். கட்டுப்படாதக் கர்ம நோய்களெல்லாம் பறந்து போய்விடும் அதனால்தான் கவிஞர்,

"சுற்றாத ஊர்தோறும்
சுற்ற வேண்டாம் புலவீர்!
குற்றாலம் என்றொரு கால்
கூறினால் – வற்றா
வடவருவிபோலும்
வளம் பெருக்கும்; மாளா
இடர்களையும் ஏந்தை கழல்"[181]

[181] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 171.

என்று குற்றால அருவியின் பெருமையைக் கவிராயர் திறம்படக் கூறுகின்றார். மேலும் குற்றால மலையில் இருக்கும் அருவிகளான பழைய குற்றாலம், தேனருவி, செண்பகாதேவி அருவி, ஐந்தருவி, சிற்றருவி, வட அருவி(பேரருவி), புலி அருவி, பழத்தோட்ட அருவி, புது அருவி போன்ற அருவியின் வளங்களையும், அதன் பெருமைகளையும், சிற்றாறுகளையும் விளக்கப் படுகிறது.

**பழைய குற்றாலம்**

கைலாசபுரத்திலிருந்து உற்பத்தியாகும் நீர் ஓடி வரும் பகுதியைக் குளிராட்டி என்று அழைக்கின்றனர். இப்பகுதியினின்றும் வரும் நீர் மாவடித்துறை ஆறாகப் பழைய குற்றால நீர் வீழ்ச்சி என்னும் பெயருடன் மிக உயரத்திலிருந்து விழுகின்றது. பழைய குற்றாலம் அருவியில் விழும் நீர் கானாறு, அழகனாறு என்னும் பெயர்களுடன் பல குளங்களை நிரப்பிச் சிற்றாற்றில் சென்று கலக்கிறது.

பழைய குற்றாலம் அருவி பிரமாண்டமான அளவில் மேலிருந்து விழும் அழகே கொள்ளையழகு. உவமிக்கும் கவிஞனும் உவமைத் தேடி அலைய வேண்டும். ‘பழைய குற்றாலம் என்று கூறுவதினின்று, இந்த அருவி மற்ற அருவிகளைவிட மிகவும் தொன்மையானதாக இருந்திருக்க வேண்டும் என்றும், இப்பகுதிப் பழங்கால மக்கள் வாழ்ந்த பகுதியாகவும் இருந்திருக்க வாய்ப்புள்ளதென்றும், "தமிழகத் தொல்பொருள் ஆய்வாளர்கள் பழையகுற்றால நீர் ஓட்டப் பகுதியில் நுண்கருவிகள் பலவற்றைக் கண்டுபிடித்துள்ளனர் என்றும், இவை மிகவும் தொன்மையான காலத்தைக் குறிப்பவையென்றும், பழைய குற்றாலமே தொன்மையானதென்றும், அதற்குப் பிறகுதான் இப்போதுள்ள குற்றாலம் தோன்றியிருக்க வேண்டுமென்றும், முதுமக்கள் தாழிகளும் கிடைத்துள்ளதென்றும், இந்தக் காலப் பழமையைக் கி.மு. 8 - ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 2 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்துக்குள் அடக்குவர்”[182] என்று முனைவர் கஸ்தூரி நாகராஜன் தம் நூலில் கூறுகின்றார்.

---

[182] . முனைவர். கஸ்தூரி நாகராஜன் - *திருக்குற்றாலத் தலவரலாறு*, பக்.30 - 31.

**தேனருவி**

செழிப்புமிக்கக் குற்றாலத்தை வளர்ப்பதற்குப் பல அருவிகள் உள்ளன அவற்றுள் ஒன்று தேனருவி. "அருவிகளிலே மிக உயரமான அருவி தேனருவிதான். இராட்சதத் தேன் கூடுகளின் மீது அருவியின் நீர் விழுந்து சில்லென்று அது கீழே விழுவதாலும் தேனருவி என்று அழைக்கப்படுகிறது."[183] ஐந்து ஓடைகளும் ஓர் ஆறாக உருவெடுத்து மூலிகைச் செடிகளில் படிந்து தேனருவி என்ற பெயரைப் பெற்றது. சுமார் 100 அடி உயரத்திலிருந்து அருவியாக விழுகிறது. செண்பகா தேவி அருவிக்கு மேலிருக்கும் தேனருவிக்குச் செல்லும் வழிகள்தோறும் அடர்ந்த காடுகளும், மரங்களும், செடிகளும், கொடிகளும் செழித்து நிற்கின்றன. பாறைகளும், குகைகளும் நிறைந்த ஒற்றையடிப் பாதையில்தான் தேனருவிக்குச் செல்ல வேண்டும். குரங்குகளின் கூட்டம் செல்வோர் கண்களுக்கு விருந்தளிக்கும். வண்டுகள் எழுப்பும் ஓசை செவிகளுக்கு இன்னிசைதரும். மரங்களின் உரசல் மனவலிக்கு இதம் தரும். குளிர்ந்த காற்று, மெல்ல உடலைத் தழுவி செல்லும் சுகமே சுகமானது. இத்துணையும் சூழ்ந்திருக்கும் தேனருவியை, நெருங்க முடியாத அளவிற்குப் பெரும் பாறைகள் உள்ளன. மலையினின்றும், தேனருவி விழுமிடம் நீங்களாக, நீர்த்தடாகம் உள்ள பகுதி, இயற்கையான மலை விதானத்தைக் கொண்டுள்ளது. அம்மலையின்மேல் விதானங்களில் பிரமிக்கத்தக்க தேன் கூடுகள், சாக்கு மூட்டைகளாகக் காட்சியளிக்கும். தேன் கூடுகள் நிறைந்த அருவியாக இருந்ததால்தான் இவ்வருவித் தேனருவி எனப் பெயர் பெற்றது. மேலும் தேனருவியின் சிறப்பைத் திரிகூட ராசப்பக் கவிராயர் குற்றாலக் குறவஞ்சியில்,

> "தேனருவித் திரைஎழும்பி வானின்வழி ஒழுகும்
> செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்"[184]

---

[183]. கவிராஜ் பண்டிட் டாக்டர். எஸ்.என்.முரளிதர் – குற்றாலம் உங்களை அழைக்கிறது, பக்.59-60.

[184]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 74.

என்று பாடுகிறார். தேனருவி எழுப்பும் மிகப்பெரிய அலைகள் வானத்தைத் தொட்டு விழுந்து கொண்டிருக்க, அவ்வழியாகத் தேரிலே செல்லும், செங்கதிரவனின் குதிரைகளின் கால்களையும், தேர்ச்சக்கரத்தையும் வழுக்கி விழச்செய்யும் அளவிற்குத் தேனருவின் வளமிருந்ததாகக் கவிஞர் தன் கற்பனைத் திறத்தால் புகழ்ந்து கூறுகின்றார்.

**செண்பக அருவி**

"தேனருவிக்குக் கீழ் அமைந்துள்ளது செண்பக அருவி, செண்பக மரங்கள் சூழ்ந்த வனமாதலின் இது செண்பகக் காடுகள் என அழைக்கப்படுகின்றது."[185] 'சிவமதுகங்கை' என்ற தேனருவிக்குக் கீழே 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது செண்பகக் காடுகள். இக்காட்டிலுள்ள மலையிலிருந்து 30 அடி உயரதில் செண்பகாதேவி அருவி விழுகிறது. செண்பக மரமும், சந்தன மரமும், தேக்கு, மா, பலா போன்ற மரங்களும், செடிகளும், கொடிகளும், சின்னஞ் சிறிய ஓடைகளும், மனதை மயக்கும் மலர்களின் நறு மணங்களும் இப்பகுதியில் வளமிக்கதாக இருக்கின்றன. கண்டாரைக் கவர்ந்திழுக்கும் இயற்கையன்னையின் திரு ஒழுக்கமும், பறவையினங்களின் இனிய பாடல்களும், மந்தியும், கடுவனும் எழுப்பும் ஓசைகளும், வண்டுகள் எழுப்பும் ரீங்காரப் பண்ணிசைகளும் உள்ளத்தைக் கவர்ந்திழுக்கும் வண்ணமாக அமைகின்றன.

**ஐந்தருவி**

குற்றாலத்திலிருந்து ஏறத்தாழ சுமார் 5 கி.மீ. தொலைவில் மேற்குத் திசையில் ஐந்தருவி உள்ளது. "குற்றாலமலையின் தொடர்ச்சியான வாய்தா மலையிலிருந்து தோன்றி பெருகி ஓடிவரும் ஆறு ஐந்து கிளைகளாகப் பிரிந்து ஐந்து அருவிகளாக விழுவதால் ஐந்தருவி"[186] என்ற பெயரைப் பெற்றது. இந்த அருவியைச் சுற்றியும் உள்ள இயற்கையின் எழில் கோலம், கண்களுக்கு விருந்தாக அமைகிறது. மேலும் வெயிலின் வெப்பத்தினால் தவிக்கும் நகர மக்களின் சொர்க்க வாசலாகவும், மகிழ்ந்து, ஆடிப்பாடி குளிக்கும் மக்களைத்

---

[185] . முனைவர். கஸ்தூரி நாகராஜன் – திருக்குற்றாலத் தலவரலாறு, ப.32.
[186] . முனைவர் ச. கணபதிராமன் – திருக்குற்றாலமும், குற்றாலநாதர் கோயில் வரலாறும், ப.26.

துன்பங்களிலிருந்து விடுபடச் செய்து குழந்தைகளாக்கி நீர்க்கரங்களால் தாலாட்டுப்பாடும் வளமிக்க அருவியாக விளங்குகிறது. இறுதியில் ஐந்தருவியானது சிறு ஆறாக ஓடி வந்து இலஞ்சியில் சிற்றாற்றில் கலக்கிறது.

**சிற்றருவி**

செண்பகாதேவி அருவிக்குச் செல்லும் வழியில் சிறிய வனங்களுக்கு நடுவில் உள்ளது சிற்றருவி. இது "பேரருவி போன்று இல்லாமல் சிறிய இடத்தில் ஓடையாக வந்து விழுவதால் 'சிற்றருவி' என்ற பெயர் பெற்றது."[187]

**பேரருவி**

பேரருவி பெயருக்கேற்பப் பரந்து விழும் காட்சி மேகக் கூட்டங்கள் கைகோர்த்து ஒரே நேரத்தில் கீழே குதிப்பது போன்றும், கடல் நீர் அனைத்தையும் மொண்டு வந்து கொட்டுவது போன்ற காட்சியளிக்கும். பேரருவியில் குளித்தாலும் சுகம்தான், பார்த்தாலும் சுகம்தான் அந்தளவிற்கு கண்களுக்கு இனிய காட்சியைக் கொடுக்கும் வளமிகுந்த அருவியாக விளங்குகிறது.

**வட அருவி**

செண்பகக் காட்டிலிருந்து பாய்ந்துவரும் ஆறானது நிறைவாக குற்றாலத்தில் 200 அடி உயரத்திலிருந்து அருவியாக விழுகிறது. 200அடி உயரத்திலிருந்து ஒரே வீச்சாக விழாமல் இடையில் ஒரு துறையில் விழுந்து பொங்கிப்பரந்து விரிந்து விழுகின்றது. பொங்கிப்பரந்து விழுவதால் இப்பகுதி பொங்குமாக் கடல் என்ற பெயரைப் பெற்றது. மேலும்,

> "பொங்குகடல் திரிவேணி சங்கமெனச் செழிக்கும்
> பொருந்து சித்திரா நதித்துறைகள் பொன்முத்தம் கொழிக்கும்
> கங்கைஎனும் வடவருவி தங்குமிந்த்ர சாபம்
> கலந்தாடிற் கழுநீராய்த் தொலைந்தோடும் பாவம்"[188]

---

[187] முனைவர் ச. கணபதிராமன் – திருக்குற்றாலமும், குற்றாலநாதர் கோயில் வரலாறும்,ப.29.
[188] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 90.

என்ற ராசப்பக் கவிராயரின் கவிதை வரிகளுக்கிணங்க இவ்வருவியானது, கங்கை, யமுனை, சரஸ்வதி, போன்ற மூன்று நதிகளும் கூடுகின்ற திரிவேணி சங்கமம் போன்று செழிப்புற்றிருக்கும் வளமிக்க அருவியாகும். அதனைப் பொருந்தியுள்ள சித்ரா நதித்துறைகளில் பொன்னையும் முத்தையும் கொண்டுவந்து ஒதுக்கும். வான் கங்கையென்று சொல்லும்படியாக வானவில்லின் பலவண்ண ஒளியுடன் விழுகின்ற வட அருவி என்னும் தீர்த்ததில் நீராடினால், நீரினால் கழுவப்பட்ட அழுக்குகள் கரைந்து ஓடுவதுபோல, அவ்வருவியில் நீராடினால் நம் பாவங்களெல்லாம் கரைந்து போகச் செய்யும் வளமிக்க அருவியாக வட அருவி விளங்குவதாகக் கவிஞர் கூறுகின்றார்.

## புலி அருவி

'பழைய குற்றாலம்' செல்லும் வழியில் வலப்பக்கமாக ஒரு கிலோமீட்டர் தொலைவில் இவ்வருவி உள்ளது. 'இந்த அருவித்துறையில் முன்னாளில் புலிகள் வந்து, நீர் அருந்தி வந்தமையால் இது புலியருவி என்ற பெயரைப் பெற்றதாக முனைவர் கணபதிராமன் தம் நூலில் கூறியுள்ளார். செண்பக அருவியின் ஒரு கிளை இங்கே வந்து அருவியாக விழுகிறது. சாரல் காலங்களில் இவ்வருவியில் நீர் வீழ்ச்சி அதிகமாக இருப்பதகக் கூறப்படுகிறது. 'பாசுபத சாஸ்தா கோவில்' இந்த அருவிக் கரையில் இருப்பதால் "பாசுபத சாஸ்தா அருவி" என்ற மறு பெயரும் இவ்வருவிக்கு வழங்கப்படுகிறது.

## பழத்தோட்ட அருவி

ஆண் குரங்குகள் பலவகையான கனிகளைப் பறித்துக் கொண்டுவந்து பெண்குரங்குகளுக்கும் கொடுத்து கொஞ்சி விளையாடும் வளமிக்க அருவியாகச் சிறந்து விளங்குகின்றது. ஐந்தருவிக்கு அருகில் குறைந்த உயரத்திலிருந்து இந்த அருவி விழுகின்றது. இங்கு அரசு பழத்தோட்டம் அமைத்துள்ளது. அதனால் 'பழத்தோட்ட அருவி' எனப்படுகிறது. ஆரவாரமின்றிக் குளிக்க விரும்புவோருக்கு ஏற்ற அருவியாக உள்ளது.

## புது அருவி

தற்காலத்தில் புதிதாகக் கண்டுபிடிக்கப் பெற்ற இந்த அருவி "புது அருவி" என்ற பெயரைப் பெற்றுள்ளது. புலியருவிக்கு மேலே உள்ள இந்த அருவி குளிப்பதற்கு ஏற்ற வண்ணம் வளமிக்க அருவியாக விளங்குகின்றது. இப்படி வளமிக்க அருவியாக விளங்கும் குற்றால அருவியின் சாரலையும், மழையையும், தென்றல் காற்றினையும் கண்டுகளித்த மேலைநாட்டைச் சேர்ந்த கம்பெனிகள் பற்பல கருத்துக்களை கூறியுள்ளனர். அவை பின்வருமாறு, 'திருநெல்வேலி கெசட்டியார்' என்ற விவரண நூலை 1917 ஆம் ஆண்டில் தயாரித்த H.R. பேட் என்ற அறிஞர், "ஐரோப்பியர்கள்தான் முதன் முதலில் உடல் நலம் காரணமாக இங்கு வந்து குளித்தார்கள்; தங்கினார்கள்; கட்டிடங்கள் கட்டினார்கள் என்று கூறுகின்றார். 'உடல் நலம் தரும் ஊர்' என்று அவர் வியந்து பாராட்டுகிறார். இதனைத் " தென்னாட்டு ஸ்பா" என்று புகழ்கின்றார். பெல்ஜியத்திலுள்ள "ஸ்பா" என்ற தலத்திற்கு ஒப்பிட்டு உவகைக் கொள்கின்றார். இச் செய்திகள் அனைத்தும் "திருநெல்வேலி கெசட்டியார்" என்ற நூலில் பக்கம் 460 – 464"[189] உள்ளதாக முனைவர் கணபதிராமன் கூறுகின்றார். அப்படி வளமிக்க அருவிகளாகச் சிறந்து விளங்குகின்றன.

## மூலிகை வளம்

2000க்கு மேற்பட்ட மூலிகைகளையும் தானிய வகைகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது குற்றாலம். இயற்கையாக மருந்துகளையும், செடிகளையும், கொடிகளையும், மரங்களயும் கொண்டு சிறந்து விளங்கும் குற்றால மலையின் அருவியில் நீராடுவோர் உடல் நலம் பெறுவதாக நாள்தோறும் காலையும் மாலையும் மன நோயாளிகளை அருவிகளில் குளிக்கச் செய்யும் மனநோய் மருத்துவமனைகள் பல உள்ளன.

''மூலிகைகளின் துணையுடன் யானையின் பற்களைப் புடமிட்டு அதன் பஸ்பத்தைப் பல ஆண்டுகள் குழந்தைப்பேறு இல்லாதவருக்குக் கொடுத்து

---

[189] . முனைவர் ச. கணபதிராமன் – திருக்குற்றாலமும், குற்றாலநாதர் கோயில் வரலாறும், ப.30.

பயன்பெற்று வருகின்றனர்.''[190] 1800 மீட்டர் உயரத்தில் பல அற்புத மருந்துகள் கிடைக்கின்றன. இந்த உயரத்தில்தான் கல்தாமரை கிடைக்கின்றது. பல பகுதிகளிலிருந்தும் மருத்துவர்கள் இங்குவந்து மூலிகைகளைக் கொண்டு செல்கின்றனர். மூலிகைகளைப் பற்றி அறிந்த பலரில் நன்னகரம் 'கணபதி' என்பவர் குறிப்பிடத்தக்கவர் ஆவார்.

குற்றாலத்திலுள்ள மூலிகைகள் கடுமையானதும், குணப்படுத்த முடியாததுமான நோய்களையும் குணப்படுத்தும் சக்திமிக்க மூலிகைகளாக விளங்குகின்றன. சிவத் தலமாக விளங்கும் சிவன் குடிகொண்டு ஆட்சி நடத்துவதினால் இங்குள்ள மூலிகைகள் சக்தி வாய்ந்ததாக வளருகின்றன. இங்கு அரிய வகைத் தங்கச் சத்து, வெள்ளிச் சத்துள்ள மூலிகைகள் விளைகின்றன. சூரியகாந்திப் பூ போல சந்திரகாந்திப் பூ, நத்தைச்சூரி, ஜோதிப்புல் போன்ற மிக உயர்ந்த கூட்டுச் சேர்க்கை மூலிகைத் தோட்டமாகத் திகழும் புண்ணியத் தலமாகக் குற்றாலம் சிறந்து விளங்குகின்றது.

சில மருந்துகளைப் பற்றிய செய்திகள் இங்குக் கூறப்பட்டிருப்பது போன்று சில மூலிகைகளின் பெயர்களும் இங்குப் பட்டியலிட்டுக் காட்டப்படுகின்றது. அவை: "அகத்தி, அத்தி, அமிர்தவல்லி, அரணை, அரிச்சந்திரப்பூண்டு, அரிவாள்மணைப்பூண்டு, அழகுக் கண்ணி, அருகு, ஆடாதொடை, ஆகாசக் கருடன், ஆடுதின்னாப்பாளை, ஆதண்டம், ஆமணக்கு, ஆற்றுநெட்டி, ஆனைச்சுவடு, இடம்புரி, இண்டு, இலவங்கப்பட்டை, இலந்தை, இறங்கழுஞ்சி, உடம்புளி, ஊமத்தை, எட்டி, எட்டு இரண்டு, ஏரழுச்சி, ஏலக்காய், ஓரிதழ்தாமரை, ஒற்றிலைக்கரிப்பான், கடுக்காய், கண்டங்கத்திரி, கரிசலாங்கண்ணி, கருஊமத்தை, கருடக்கொடி, கருந்துளசி, கருநீலி, கருநொச்சி, கருவமரம், கல்தாமரை, கல்துளசி, கற்பூரம், கற்றாழை, காக்கைக்கொல்லி, காசித்தம், காட்டு இலுமிச்சை, காட்டுக்கரணைக் கிழங்கு, காட்டுக்கொள்ளு, காட்டுச்சதக்குப்பை, காட்டுச்சீரகம், கார்த்திகைக்கிழங்கு, கிராம்பு, குடியோட்டிப்பூண்டு, குத்துருகு, குப்பைமேனி, குழிதாமரை, குருக்கத்தி, கூகைநீர், கூதிர்ப்பச்சை, கொடிவலி,

[190]. முனைவர் கஸ்தூரி நாகராஜன், *திருக்குற்றாலத் தல வரலாறு*, ப.41

கொடியார் கூந்தல், கோடகசாலை, சக்கரவேம்பு, சங்கு, சங்குபுஷ்பம், சதுரக்கள்ளி, சந்தனம், சர்பகந்தி, சரக்கொன்றை, சாம்பிராணியிலை, சித்தாளங்காய், சிந்திக்கொடி, சிராப்பிலை, சிரிக்கிவரை, சிறியாநங்கை, சிறு அகத்தி, சிறு கீரை, சிறுதண்ணீ, சிறு நாகப்பூ, சிறு நெறுஞ்சி, சிறு பீழை, செங்கத்தாழை, செங்கொடுப்பை, செண்பகம், செந்நாவல், செம்பரத்தை, செம்பருத்தி, செம்பை, செவிக்கள்ளி, சுடுகாட்டு மல்லி, தர்ப்பைப்புல், தவசு முருங்கை, தொட்டாவடி, தொழுகன்னி, தைவளை, நஞ்சுமுறுஞ்சான், பங்கம் பாலை, நரிவெங்காயம், நற்சங்கு, நன்னாரி, நாகதாழி, நாகலிங்கம், நாகவல்லி, நில அவரை, நிலப்பனை, நிலவாகை, நில வேம்பு, நீர் முள்ளி, நீராடி முட்டு, நீல ஊமத்தை, நீலம் சங்குபுஷ்பம், நெருஞ்சி, நெல்லிக்காய், நோவாளம் கொட்டை, பருப்புக் கீரை, பாதாளமீலி, பிரண்டை, பார்லி, பிரம்மை, புழுவிதை, பூச்சிமுள்ளு, பூமிச் சக்கரக் கிழங்கு, பெரியமான், பெரியாநங்கை, பெருங்காயம், பெருநெருஞ்சி, பெருமருந்து, பேய்த்துளசி, பேரரத்தை, பேரமுட்டி, பொன் ஊமத்தை, பொன்முசுட்டை, மஞ்சள், மஞ்சள் கொடி, மஞ்சள் கரிசலாங்கன்னி, மரமஞ்சள், மருதம், மருதோன்றி, மலைவேம்பு, மாடலைச் செடி, மாவிளங்கம், மான் செவிக்கள்ளி, மிளகா நங்கை, மிளகு அரணை, மிளகுச் சாரணை, முக்குளிக் கீரை, முசுமுசுக்கை, முப்பிரண்டை, மூக்கிரட்டை, மேக சஞ்சீவி, ராஜகருப்பு வில்வம், வசம்பு, வண்டுக்கள்ளி, வல்லாரை, வலம்புரி, வள்ளிக்கிழங்கு, வால்மிளகு, விழுதி, வெந்துளசி, வெப்பாளை, வெண்மை சங்கு புஷ்பம், வெள்ளருகு, வெற்றிலை”[191] போன்ற எண்ணற்ற மூலிகை வளங்கள் குற்றால மலையில் இருப்பதாக முனைவர் கஸ்தூரி நாகராஜன் ‘திருக்குற்றாலத் தல வரலாறு’ என்னும் புத்தகத்தில் பட்டியலிட்டு விளக்குகின்றார்.

[191] . முனைவர் கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தல வரலாறு, ப.44.

**குறி வளம்**

**குறத்தி குறி சொல்லல்**

தமிழகத்தில் திருநெல்வேலி மாவட்டமானது, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நில அமைப்பைக் கொண்டுள்ளது. குற்றால மலையின் உச்சியில் வாழும் குறவர் இன மக்கள் மருத நிலப்பகுதிக்கு வந்து, குறி சொல்லும் பழக்கம் அக்கால நிகழ்வாய் இருந்திருக்கிறது. அத்தகைய குறி சொல்லும் பழக்கம் கவிராயரின் மனதினைக் கவர்ந்திருக்கும். ஆகவேதான் அத்தகைய நிகழ்வை நெஞ்சில் நிறுத்தி குற்றாலக் குறவஞ்சி என்னும் நாடகத்தைப் படைத்திருக்க வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது.

குற்றாலநாதர் மீது காதல் கொண்ட வசந்தவல்லியின் முன்பாக, அவளுடைய காம நோய்க்குச் சஞ்சீவி மருந்துபோலக் குறவஞ்சி வருகின்றாள். அப்பொழுது வசந்தவல்லி, குறவஞ்சியின் குறியின் தன்மையைக் கேட்க, குறவஞ்சி தன் குறியின் சிறப்பை அடுக்கடுக்காக,

பல்லவி

1.“வித்தாரம் என்குறி அம்மே! – மணி
முத்தாரம் பூணும் முகிழ்முலைப் பெண்ணே
வித்தாரம் என்குறி அம்மே!

சரணங்கள்

2.வஞ்சி மலைநாடு கொச்சி கொங்கு
மக்கம் மராடம் துலுக்காணம் மெச்சி
செஞ்சி வடகாசி நீளம் சீனம்
சிங்களம் ஈழம் கொழும்பு வங்காளம்
தஞ்சை சிராப்பள்ளிக் கோட்டை தமிழ்ச்
சங்க மதுரை தென்மங்கலப் பேட்டை
மிஞ்சு குறிசொல்லிப் பேராய்த் திசை
வென்றுநான் பெற்ற விருதுகள் பாராய்.

3.நன்னகர் குற்றாலந் தன்னில்

எங்கும் நாட்டும் எண்ணூற்றெண்பத் தேழாண்டு தன்னில்

பன்னக மாமுனி போற்றத் தமிழ்ப்

பாண்டிய னார்முதற் சிற்றோடு மேய்ந்த

தென்னாரும் சித்ரசபையை எங்கள்

சின்னண்ஞ் சாத்தேவன் செப்போடு வேய்ந்த

முன்னாளி லேகுறி சொல்லிப் பெற்ற

மோகன மாலைபார் மோகனவல்லி…”[192]

என்று குறத்தி தான் குறி சொல்லி புகழ் பெற்ற இடமாக வஞ்சி, மலையாளம், கொச்சி, கொங்கு, மக்கம், மராடம், துலுக்காணம் ஆகிய பகுதிகளில் எனது குறியைக் கேட்டு பாராட்டியுள்ளதாகவும், செஞ்சி வடகாசி, பரந்த சீனநாடு, சிங்களம் ஈழம், கொழும்பு, வங்காளம், தஞ்சை, திருச்சிராப்பள்ளிக் கோட்டை, தமிழ்ச் சங்கம் இருந்த மதுரை, தென்மங்கலப் பேட்டை ஆகிய இடங்களில் குறி சொல்லி நற்பெயரையும், பல திசைகளிலும் என் குறியால் வென்று பல விருதுகளைப் பெற்றதாகவும், நன்னகராகிய இக்குற்றால நகரில் எங்கும் தனது புகழை நிலை நாட்டிய கொல்லம் எண்ணூற்று எண்பத்தேழாம் ஆண்டில், பதஞ்சலி முனிவர் போற்றும் வண்ணம், தமிழ் வளர்த்த பாண்டியனார் முதலில் சிறிய மண் ஓடுகள் வேய்ந்திருந்த சித்திர சபையை, சின்னணஞ்சாத் தேவன் செப்பு ஓடு வேய்ந்தான். அதற்கு முன்பாக அவனுக்குக் குறி சொல்லி பரிசாகப் பெற்ற மாலைதான் இந்த மோகன மாலை நீயே பார்ப்பாயாக! என்று இன்முகத்துடன் எங்களிடம் குறி கேட்டதற்குத் தமிழ்ச் சங்கத்தாரே சாட்சி கூறுவர் என்று தனது குறியின் சிறப்பைக் கவிஞர் அழகுபட எடுத்துரைக்கிறார்.

**வேட்டை வளம்**

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சியாகும். குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் குறவர், குறத்தியர் மற்றும் வேடவராவர். இவர்களது முக்கியத் தொழிலானது வேட்டையாடுதலாகும். பறவைகளும் விலங்குகளும் மீன்களும்

---

[192]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், பக். 42 – 44.

வாழும் வளமிக்கப் பகுதியாகக் குற்றாலம் விளங்குகிறது. ஆகவேதான் குற்றாலக் குறவஞ்சி நாடகத்தில், குறவன் பறவைகளைப் பிடிக்கும் காட்சியை இடம் பெறச் செய்கிறார் கவிராயர். குறத்தியைத் தேடிக்கொண்டுதான் குறவன் புறப்பட்டான்! பறவைகளைப் பிடிப்பதற்கு அல்ல! குறத்தியைத் தேடிக்கொண்டு ஓரிடத்திற்கு வந்தவன், அங்குப் பறவைகளின் கூட்டத்தைப் பார்த்ததும், அவனுடைய திட்டத்தில் திருப்பம் ஏற்பட்டுவிட்டது! திட்டத்தை விட்டுவிடுகிறான்! பறவைகளைப் பிடிக்க ஆரம்பித்து விடுகிறான். அந்த அளவிற்கு எங்கும் பறவைகள் செறிந்து இருக்கும் வளமான இடமாக குற்றாலம் விளங்குகிறது.

### சிங்கனின் வேட்டைத் தந்திரம்

சிங்கனது வேட்டையாடும் வளத்தைக் குறிப்பிடும் கவிராயர், நூவன் பாவனையாக, மாமரத்தின் மேல் ஏறிக் கொண்டு, பறவைகளப்போல ஒலிகளை எழுப்பியும், நாய்போலத் தடம் பார்த்தும், பூனைபோலப் பதுங்கியும், நரிபோலப் பம்மியும், பேய்போலப் பின்தொடர்ந்தும், சிங்கம்போல பாய்ந்தும் வேட்டையாடுவதாக,

> “ஞாளிபோல் சுவடெடுத்துப் பூனைபோல்
> ஒளிபோட்டு நரிபோல் பம்மிக்
> கூளிபோல் தொடர்ந்தடிக்கும் திரிகூடச்
> சிங்கனெனும் குளுவன் நானே”[193]

என்று வேட்டையாடும் தந்திரத்தைக் கவிஞர் கூறுகின்றார்.

### வேட்டையாடும் கருவிகள்

நூவன் வேட்டையாடப் பயன்படுத்திய கருவிகளாக, கம்பு, வலை, கொக்கின் மணி, ஈட்டி, கண்ணி, தவில், பொறி, வில் போன்ற கருவிகளை வைத்து வேட்டையாடினான் என்று திருக்குற்றாலக் குறவஞ்சி வாயிலாக விளக்குகிறார்.

---

[193] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 115.

**குற்றாலக் குறவஞ்சியில் வரும் பறவைகளும் விலங்குகளும்**

இக்குறவஞ்சியில் வரும் பறவைகளின் பெயர்களாகக் கொக்குகள், குருவிகள், ஊர்க்குருவிகள், உள்ளான்கள், கானாங்கோழிகள், நாரைகள், அன்னங்கள், தாராக்கள், கூழைக்கடாக்கள், செங்கால் நாரைகள், காடைகள், கம்புள்கள், காக்கைகள், கொண்டைக் குலாத்திகள், மாடப்புறாக்கள், மயில்கள், வெள்ளைப் புறாக்கள், சகோரப் பறவைகள், ஆந்தைகள், மீன்கொத்திப் பறவைகள், கிளிகள், பஞ்சவர்ணக் கிளிகள், மரங்கொத்திப் பறவைகள், நாகணவாய்ப் பறவைகள், சிட்டுகள், வலியான்கள், அன்றில்கள் போன்ற பலவகையான பறவைகள் இருப்பதாகவும், புலிகள், கரடிகள், நாய்கள், பூனைகள், நரிகள், சிங்கங்கள், யானைகள், மான்கள், குரங்குகள் போன்ற பலவகையான அரியவகை விலங்குகள் வாழும் வளமிக்கப் பகுதியாகக் குற்றாலம் விளங்குவதாக குற்றாலக் குறவஞ்சி மூலம் அறியலாம்.

**பறவைகள் மேயும் இடங்கள்**

பறவைகள் மேயும் இடங்களாக பட்டியலிடும் கவிராயர், திருக்குற்றாலநாதரின் பரந்த குலசேகரப்பட்டினக் குளமும், ஆயிரப் பேரிக் குளமும், தென்காசி குளம், பாரைக்குளம், தென்குளம், மேல்குளம், பாண்டியன்குளம், சாட்டப்பெருங்குளம், செங்குறிஞ்சிக்குளம், ஊருண்ணிப் பற்று, திருப்பணி நீளம், உயர்ந்த புளியங்குளம், துவரைக்குளம், மாரனேரிக்குளம், மத்தளம் பாறைக் குளம், வழிமறித்தான் பாறைக் குளம், ஆலடிப் பற்று, தலையில் ஆத்தி மாலையைச் சூடியுள்ள குற்றாலநாதரின் தோட்டமாகிய நெடிய செய், அபிசேகப் பேரி, கணக்கன் பற்று, குற்றாலத்து நம்பியாரின் திருத்து, புலியூர், இலஞ்சி, மேலகரம், செங்கோட்டை, சீவலநல்லூர், சிற்றம்பலம், தூய குன்றக்குடி, வாழ வல்லான் குடி, சுரண்டையூர், சிதிரா நதி, காடுகள், மலைகள், சோலைகள், பண்ணைகள், தோட்டம் இன்னும் பலவகையான் இடங்களில் பறவைகள் மிகுந்து காணப்படும் வளமிக்கப் பகுதியாகவும் வேட்டையாடுவதற்கு வளமிக்கப் பகுதியாகவும் விளங்குகிறது.

**பெத்லகேம் குறவஞ்சியில் பல்வகை வளங்கள்**

"உலகத்தின் பாவத்தைச் சுமந்துத் தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியான,"[194] இறைமைந்தன் இயேசுநாதர் பிறந்த ஊரான பெத்லகேம் என்னும் பெயரால், தஞ்சை வேத நாகயகம் சாஸ்திரியார் அவர்களால் பாடப் பெற்ற குறவஞ்சியாகிய பெத்லகேம் குறவஞ்சியில் கூறப்பட்டுள்ள பலவகையான வளங்களைப் பற்றி வரிசைப் படுத்தப் பட்டுள்ளன.

**தல வளம்**

எருசலேம் நகரில் உலாவரும் இயேசுநாதர் மீது காதல் கொண்ட சீயோன் குமாரத்தி, விண்ணுலகம், மண்ணுலகம், பாதாளம் என மூவுலகிலும் உள்ளவர்கள் போற்றித் துதிக்கும் மனிதகுலத்தின் அரசனான மேசியாவின் தலவளம் பற்றிக் குறத்தியிடம் கேட்க, குறத்தி மேசியாவின் தலவளம் பற்றி, தூய ஆபிரகாம் மீட்பர் இயேசுவின் நாளை காண்பதற்காக ஆர்வத்துடன் தவமிருந்ததும், யாக்கோபு வானத்தின் ஏணியை உறக்கத்தில் கண்டு மகிழ்ந்து எழுந்ததுவும், தாவீது மன்னன் மேன்மையாய் இவ்வுலகத்தை ஒரு குடையின் கீழ் ஆட்சி செய்ததும், அன்புடன் சிமியோனும் அன்னாலும், இயேசு குழந்தையைக் கைகளில் ஏந்தி வாழ்த்துரை வழங்கியதும் இந்தத் தலமாகும். ஐபிராத்து ஆற்றோடு ஏதேன் தோட்டத்தைப் போலச் செழிப்பான யோர்தான் ஆறு பாய்வதும், கர்த்தர், இஸ்ரவேல் மக்களை எகிப்து அடிமை தேசத்திலிருந்து கொண்டுவந்து சேர்த்து, பாலும் தேனும் ஓடும் தன்மை மிகுந்த கானான் நாடும், அளவில்லாத அறிஞர்களும், தீர்க்க தரிசிகளும் இறைவனைப் பற்றிக் கூறியதும், விண்ணுலகில் உள்ளவர்களும் வந்து வணங்கியதும், உண்மையான திருமறை முதலில் தோன்றியதும், மண்ணுலகை ஆட்சி செய்து, பலகோடி மன்னர்கள் பொன்கொடுத்து வணங்கியதும், திருமுழுக்கு யோவான் இயேசுவிற்கு முன்பு வந்து, யோர்தான் நதிக்கரையில் இறை செய்தி சொன்னதும் இந்தப் பெத்லகேம் தலமாகும் என்பதைச் சாஸ்தியார்,

---

[194] . பரிசுத்த வேதாகமம், யோவா, 1:29. புதிய ஏற்பாடு, ப.125.

“அர்ச்சீட்ட ஆபிராகாம் இரட்சகரின்நாளை,

ஆசையுடன் காணத்தவச் சிருந்ததிந்தத்தலமே,

நிச்சயமா யாக்கோபு வானத்தின்ஏணியினை,

நித்திரையில் கண்டுமகிழ்ந் தெழுந்ததிந்தத்தலமே,

உச்சிதமாய்த் தாவீது வேந்தனுலகெலாம்,

ஓர்குடையிலாண்டு செங்கோல் செலுத்தினதித்தலமே,

பட்சமுடன் சிமியோனும் அன்னாளென்பவளும்,

பாலகனை யேந்தியுரை பகர்ந்தலமம்மே...

எண்ணிறந்த ஞானிகளும் தீர்க்கதரிசிகளும்,

இருடிகளும் சித்தர்களும் பொருளுரைத்த தலமே,

விண்ணுலகுள் ளோரும்வந்து பணிந்ததிந்தத்தலமே,

மெய்யான வேதமுதல் முளைத்ததிந்தத்தலமே,

மண்ணுலகை யாண்டருளும் கோடானுகோடி,

மன்னவர்கள் பொன்கொடுத்து வணங்கினதித்தலமே,

உண்மையதாயொவன்முனிவன் கிறிஸ்துவின்முன்வந்து,

யோர்தானில் தூதுசொன்ன தேவதலமம்மே”[195]

என்று இயேசுநாதர் பிறந்த பெத்லகேமின் தலவளத்தைக் குறவஞ்சி வாயிலாகக் கூறுகின்றார். மேலும் இறைமைந்தன் இயேசு மெருமான் வாழ்ந்த இடமும், அவரால் புதுமைகள் நடந்த இடமாகிய கலிலேயா இருக்கும் இடமும், ஒளிபொருந்திய தேவன் சிலுவையில் மரித்த இடமாகிய எருசலேமும், சொல்லுதற்குறிய ஆசரிப்புப் பெட்டி இருந்த எருசலேம் இடமும், ஞானமுள்ள சாலமன் ராஜா கட்டிய ஆலயம் உள்ள இடமும், இயேசுநாதர் பிறந்த இடமாகிய இத்தலமேயாகும்.

சப்பானியர்கள் சுகம்பெற்று மான்களைப் போலத் துள்ளிக் குதித்த இடம் இத்தலமாகும். நொண்டி முடம் சுகமடைந்து நிமிர்ந்து நடந்த இடம்

[195] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 180 – 181.

இதுவேயாகும். தொழுநோயாளிகளும், பேய்பிடத்தவர்களும் சுகம் பெற்ற இடமும், செத்தவர்கள் உயிர்பெற்று எழுந்து நடந்த இடமும், மீன் பிடிப்பவர்கள் அறிவடைந்து இயேசு பெருமானால் தேர்ந்தெடுக்கப்பட்ட இடமும், மேலான பல மொழிகளைப் பேசின இடமும், விண்ணொளிபோலக் குருடர்கள் பார்வையடைந்த இடமும், பேசாத ஊமைகள் வாய் திறந்து பாடினதும், கேட்காத செவிடர்கள் கேட்டதும், சிற்றின்ப விபசாரிகள் மன மாற்றமடைந்ததும், கள்ளனும் வியக்கத்தக்க முறையில் விண்ணுலகை அடைந்ததும், பூமியானது இடம் தெரியாமல் அந்தகாரமாகி இருளடைந்து நின்ற இடமும், இயேசு பெருமான் ஒளியாகவும் புறா வடிவமாக வந்து இறங்கின இடமும், மகிமை பொருந்திய இந்த்த் தலமேயாகும் என்பதைக் சாஸ்திரியார்,

"…மான்களைப்போல் சப்பாணி துள்ளினதித்தலமே,
வாதைமிகு நொண்டிமுட நிமிர்ந்ததிந்தத்தலமே,
தீன்படரும் ரோகிளும் பேய்பிடித்தபேரும்,
செத்தவரும் குணமாகி யெழுந்ததிந்தத்தலமே,
மீன்பிடிப்போர் அறிவடைந்து தேர்ந்ததிந்தத்தலமே,
மேலான பாஷைகளைப் பேசினதித்தலமே,
வான்கதிர்போல் குருடர்கட்குப் பார்வைதந்ததலமே,
மகத்தான தலமிதற்கு மகிமைமெத்த அம்மே.

ஊமையரும் வாய்திறந்து பாடினதித்தலமே,
ஒருக்காலும் கேளாதோர் கேள்விபெற்றதலமே,
காமிகளும் உத்தமிக ளானதிந்தத்தலமே,
கள்ளனதி சேயமதாய்க் கதிசேர்ந்ததலமே,
நேமியது வாய்காட்டா தடங்கிநின்றதலமே,
நிருபனுட ஆவிசுட ராகவந்ததலமே,

சாமியவர் புறாரூப மானதிந்தத்தலமே,

சாற்றரிய அர்ச்சீட்ட தலமிதுகாணம்மே.”[196]

என்று இயேசுநாதர் பிறந்த தலத்தின் சிறப்புக்களைக் கூறுகிறார் சாஸ்திரியர்.

**நாட்டு வளம்**

காதல் கொண்ட சீயோன் குமாரத்திக்குப் பெத்லகேம் நாட்டு வளத்தினைக் குறவஞ்சி வாயிலாகக் கூறும் சாஸ்திரியார்,

“ஆதியிலதம்செய்வினைதீர்க்க, வனாதியானொருரட்சகன் தன்னை,

நீதியாய்த்தருவோமென்றுசொன்ன, நெறியினைநிறை

வேற்றுதற்காக,

துமாமரி யாளிடமாகவே, வானவன்மனுடனுருவாக,

வேதவோசைமுழங்கிடவந்தருள், வித்தகன்வெல்லை

நாடெங்கள்நாடே.

சாலாஆபிரகாமுனியோடு தயாபரன்சொன்ன வாக்குத்தத்தத்தின்

பாலுந்தேனதியோடியதான, பண்புறங்கானான் தேசத்தை முற்றும்,

வாலருண்மகர்க்கீவமென்றோதிய, வாய்மையாமந்தயூ தேயாத் தேசம்,

மேலுண்மேவியபெத்லகேமென்ற,

வேதனார்வெல்லைநாடெங்கள்நாடே.”[197]

என்ற பாடல் வரிகளில் விளக்குகிறார். ஆதிகாலத்திலே ஆதாம், ஏவாள் செய்த குற்றத்தை முடிவுக்குக் கொண்டுவர, தோற்றமில்லாத இறைவன் விடுதலை செய்யும் இறைமைந்தனை, நீதியாக உங்களுக்குத் தருவேன் என்ற வழியினை நிறைவு செய்வதற்காகக் கன்னிமரியாளிடம் மனித வடிவமாகத் திருமறை ஒலிமுழங்க இறைமைந்தன் பிறந்த நாடாகும் என்றும், ஆபிரகாம் முனிவருடன் இரக்கமுள்ள இறைவன் கூறிய உறுதிமொழியின்படி, பாலும் தேனும் ஆறாக

[196] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 182-183.

[197] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 174-175..

ஓடிய கானான் தேசம் முழுவதையும், தூய்மையான இறையருள் பெற்ற பிள்ளைகளுக்குக் கொடுப்போம் என்ற புகழ்மிக்க இடம் பெத்லகேம் நகரமாகும்.

“எப்பிரத்தா என்னப்பட்ட பெத்லகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தும், இஸ்ரவேலை ஆளப்போகிறவர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்னிடத்தில் வருவார்”[198] என்ற மீகா தீர்கதரிசியின் வாக்கின்படியேயும், யோவான் ஸ்நானகன் கொடுத்த சாட்சியின் படியும், உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கப் போகிற ஆவியானவர், வியக்கத்தக்கும் வகையில் பெத்லகேம் நகரில் உதித்த உன்னதமான நகரமாகும். இங்குள்ள வயல் வெளிகளில் தரமான கோதுமைகள் விளையப்பட்டது. எங்கு தரமானக் கோதுமை கிடைக்கிறதோ, அங்கேதான் தரமான ரொட்டியும், அப்பமும் தயாரிக்கப்படுகிறது. அதனால்தான் பெத்லகேம் நகர் அப்பத்தின் வீடு என்றழைக்கப்பட்டது. அவ்வாறு அழைக்கப்படும் அப்பத்தின் வீடான பெத்லகேமில் வானத்திலிருந்து இறங்கினவர் பிறந்தமையால் வளமிக்க நகரமாக விளங்குகிறது. மேலும் இந்நகரமானது இறையருள் பெற்றதாக விளங்குவதாகக் கவிஞர்,

> “வார்த்தைப்பாட்டிலுண்டாகியநாடு, வானநாடார்கண்டேகியநாடு,
> பாத்திபர்பணிந்தேத்தியநாடு, பாவியோர்மனந்தேற்றியநாடு,
> தோத்திரப்பதமிஞ்சியநாடு, சூழும்பேய்க்கண மஞ்சியநாடு,
> சாத்திரர்வந்து தேடியநாடு, தயாபரன்வெல்லைநாடெங்கள்நாடே”[199]

என்ற பாடல் வரிகள் வாயிலாக விளக்குகிறார். இறைவனது வார்த்தையின் பயனால் உண்டான நாடாகவும், விண்ணவர்கள் வந்து பார்த்துச் சென்ற நாடாகவும், மன்னவர்கள் வந்து வணங்கிப் புகழ்ந்து கூறிய நாடாகவும், குற்றமுடையவர்கள் மனம்திரும்பி ஆறுதல் பெற்றுச் சென்ற நாடாகவும், வாழ்த்துச் சொற்கள் மிக்க நாடாகவும், எங்கும் சூழ்ந்துள்ள பேய்க்கூட்டங்கள்

---

[198] . பரிசுத்த வேதாகமம், மீகா, 5:2. பழைய ஏற்பாடு, ப.1078.

[199] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 177.

பயந்து நடுங்கிய நாடாகவும், எங்கும் சொல்லக் காணும் அறிவுப் பழங்கதை மிக்க நாடாகவும், தெளிவாக விளங்கக் காணும் திருமறை வேதமிக்க நாடாகவும், ஒரே இறைவனைப் புகழ்ந்து வணங்கி வாழ்வைத்தரும் நாடாகவும், எளியவர்களை அரவணைப்பதற்கும், குற்றவாளிகள் மனம் மாறிக் கொள்வதற்கும் சிறப்பான நாடாகவும் விளங்குகிறது.

**மலை வளம்**

இயேசுவின் மீது காதல் கொண்ட சீயோன் குமாரத்திக்கு, சீயோன் குறவஞ்சி இயேசுவானவர் உலாவிய மலைகளின் சிறப்புகள் ஒவ்வொன்றையும் எடுத்துக் கூறுகிறாள். ஆண்டவர் படைத்த படைப்புகளில் உன்னதமான படைப்பு என்று சொன்னால் அது மலை என்று கூறலாம். மலையானது ஆண்டவருக்குப் பிரியமாயிருந்தது. மலைப் பகுதி அழகான வளமிக்கப் பகுதியாகவும், மலைப் பிரதேசக்களில் வாழும் மக்களுக்கு நல்ல சுவாசமும், தூய்மையான காற்றும், நீரூற்றுகளும், பலவகையான கனிம வளங்கள், பழ வகைகள், மூலிகைச் செடிகள் முதலான ஏராளமான பொருள்கள் இயற்கையாகத் தருவனவாக உள்ளது. இப்படியான நன்மையைத் தரும் மலையை உருவாக்கியவர் ஆண்டவர். ஆண்டவரின் ஒத்தாசை மலைகளின் மூலமாகத்தான் கிடைக்கும் என்றும், "அதனால்தான் சங்கீதகாரனாகிய தாவீது, எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு நேராக என் கண்களை ஏறெடுக்கிறேன்"[200] என்றும், "நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிக்காசனத்தை உயர்த்துவேன், உன்னதமானவருக்கு ஒப்பாவேன், வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூடத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன்"[201] என்று ஏசாயா தீர்க்கதரிசியும், கர்த்தர் மலையிலிருந்து பிரசங்கம் செய்தார்; மலைக்கு வரச் சொல்லித்தான் அநேகரைக் குணமாக்கினார்; கர்த்தர் சீனாய்

---

[200] . பரிசுத்த வேதாகமம், சங், 121 : 1, பழைய ஏற்பாடு, ப.751.

[201] . பரிசுத்த வேதாகமம், ஏசா, 14:13. பழைய ஏற்பாடு, ப.820.

மலையிலிருந்து இறங்கிவந்து, இஸ்ரேல் மக்களுக்கு நியாயப் பிரமாணத்தைக் கொடுத்தார். ஆண்டவர் நேசிக்கும் இடமாக மலையானது விளங்குகிறது.

அதனால்தான் சாஸ்திரியார், பெத்லகேமில் பிறந்த இயேசுநாதரின் பெருமைகளைக் கூறும் பல்வகை மலைகளில், விண்ணகத் தூதர்கள் இயேசுவின் பெருமைகளை வாழ்த்திப் பாடும் இடமாகவும், வண்மையுள்ள சித்தர்களெல்லாம் அருந்தவங்கள் செய்யும் இடமாகவும், வான சாஸ்திரங்களை அறியும் கலைஞர்கள் காணிக்கைகள் படைக்கும் இடமாகவும், முல்லை நிலத்தில் வாழ்பவர்கள் வணங்குகின்ற மலையாகவும், அந்நிலத்தில் வாழும் மக்கள், ஏழைகளுக்குக் கொடை கொடுத்து வாழும் மலையாகவும், இழிவான பேய்க் கூட்டங்கள் அண்டாமல் மக்களைக் காக்கும் அற்புத மலையின் வளத்தை, தேவமோகினி வாயிலாகப் பெத்லகேம் குறவஞ்சி என்னும் இந்நூலில் எடுத்துரைக்கும் அம்மலைகளின் வளங்களைப் பற்றி,

> "வானவர்கள் கூடிவந்து தோத்திரங்கள் படிப்பார்,
> வண்மையுள்ள சித்தரெல்லாம் அருந்தவங்கள் பிடிப்பார்,
> ஞானமுடன் முல்லைநிலத் தலைவர்வந்து தொழுவார்,
> நட்சேத்திரச் சாஸ்திரிகள் காணிக்கைகள் தருவார்,
> தானதர்மம் ஏழைகட்கு யாவர்களுங் கொடுப்பார்,
> சண்டாளப் பாவமெல்லா மண்டாது தடுப்பார்,
> ஈனமுள்ள பேய்கணங்கள் மயங்கியங்கே துடிப்பார்,
> ஏகன்மனு வானவெல்லை யெங்கள் மலையம்மே."[202]

என்றும், பரிசுத்த வேதாகமத்திலே குறிப்பிட்டுச் சொல்லப்படும், வானத்திலிருந்து இறங்கினவர் வந்து அசைவாடின ஒவ்வொரு மலையையும், அவற்றின் சிறப்புகளையும் கீழ்வரும் பாடல் மூலமாகப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் சாஸ்திரியார்.

---

[202] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 167.

“ஆதிமலையெங்களுக்கோ ஏதன்மலையம்மே,

ஆண்டவனா ரெங்களைத்தா னமைத்தமலையம்மே,

நீதியென்றநால்வரமும் கொடுத்தமலையம்மே,

நித்தியமும் சாகாமல் நின்றமலையம்மே,

சாதனையாய்ப் பேய்பிறகு கெடுத்தமலையம்மே,

தற்பரனா ரெம்மையங்கே சபித்தமலையம்மே,

பேதகமாய் நாங்களதை விட்டதற்பின்னமே,

பெத்லேக மெங்களுக்குப் பெரியமலையம்மே...

ஆரியனா ராத்துமலை நோவைமலையம்மே,

யற்புதமாப் பேழைவந்து நின்றமலையம்மே,

மோரியாவின் மலைதனிலே ஆபிராகாமம்மே,

முக்கியமா யீசாக்கைப் பலிகொடுத்தானம்மே,

மேரிபாவை மோசேசு பிரம்புகொண்டேயடிக்க,

மெத்தவெள்ள மானவிதம் சித்திரங்காணம்மே,

நேரிலுயர் கற்பனையின் மலையதுதான்சீனா,

நேர்மைபெத்த லேகமெங்கள் நீதிமலையம்மே.

அற்புதசீ யோன்மலைதான் பொற்புமலையம்மே,

ஆட்டுக்குட்டி மனைவிகுடி யானமலையம்மே,

கற்புளகன் னியாஸ்திரீகள் வாழுமலையம்மே,

காரணர்க்குக் கலியாண மாகுமலையம்மே,

பற்பலபா டானமலை கொல்கதானம்மே,

பரன்சுதனார் பாடுபட்டு மரித்தமலையம்மே,

முற்பவத்தை நீக்கமனு வானமலையம்மே,

முத்திபெத்த லேகமெங்கள் முதன்மைமலையம்மே...”[203]

[203] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 168 – 169.

என்று பல்வகையான மலைகளைப் பற்றிக் கூறுகின்றார் சாஸ்திர்யார். அவற்றுள் முக்கியமான மலைகளைப் பற்றி விரிவாக விளக்கப் படுகிறது.

**ஏதேன் மலை**

“தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனுஷன் ஜீவாத்துமாவானான். தேவனாகிய கர்த்தர் கிழக்கிலே ஏதேன் என்னும் தோட்டத்தை உண்டாக்கி, தாம் உருவாக்கிய மனுஷனை அதிலே வைத்தார்.”[204]

பிறகு “தேவனாகிய கர்த்தர் வெளியின் சகலவித மிருகங்களையும், ஆகாயத்தின் சகலவிதப் பறவைகளையும் மண்ணினாலே உருவாக்கி, ஆதாம் அவைகளுக்கு என்ன பேரிடுவான் என்று பார்க்கும்படி அவைகளை அவனிடத்தில் கொண்டுவந்தார்; அந்தந்த ஜீவஜந்துக்கு ஆதாம் எந்தெந்தப் பேரிட்டானோ அதுவே அதற்குப் பேராயிற்று.”[205] பிறகு கர்த்தர் “ஆதாமுக்கு அயர்ந்த நித்திரை வரப்பண்ணினார், அவன் நித்திரையடைந்தான் ; அவர் அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து, அந்த இடத்தைச் சதையினால் அடைத்தார். தேவனாகிய கர்த்தர் தாம் மனுஷனில் எடுத்த விலா எலும்பை மனுஷியாக உருவாக்கி, அவளை மனுஷனிடத்தில் கொண்டுவந்தார்.”[206] பின்பு, “தேவனாகிய கர்த்தர் மனுஷனை நோக்கி, நீ தோட்டத்திலுள்ள சகல விருட்சத்தின் கனியையும் புசிக்கவே புசிக்கலாம். ஆனாலும் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்கவேண்டாம் ; அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார்”[207] கர்த்தர். நாங்கள் நன்றாக வாழ வழிமுறை வகுத்துத்தந்த மலை ஏதேன் மலையாகும்.

---

[204] . பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 7 – 8. பழைய ஏற்பாடு, ப.2.
[205] . பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 2-9. பழைய ஏற்பாடு, ப.3..
[206] . பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 22. பழைய ஏற்பாடு, ப.3.
[207] . பரிசுத்த வேதாகமம், ஆதி, 2:17. பழைய ஏற்பாடு, ப.3.

**மோரியா மலை (ஆதி,22: 1- 18)**

கர்த்தர், ஆபிரகாமுக்கு நூறு வயதாயிருக்கும்போது, அவள் மனைவி சாராளுக்கு ஒரு மகனைக் கொடுத்தார். அந்த மகனுக்கு அவன் ஈசாக்கு என்னும் பெயரிட்டான். ஈசாக்கு சற்று பெரியவனாயிருந்தபோது கடவுள் ஆபிரகாமைச் சோதிக்கும் பொருட்டு, உனக்கு அருமையான ஒரே மகனாகிய ஈசாக்கை மோரியா என்னும் மலைக்கு அழைத்துக் கொண்டுபோய், அவ்விடம் நான் உனக்குக் காட்டும் மலையின்மேல் அவனைப் பலியிடு என்று சொன்னார். அது கேட்ட ஆபிரகாம் மறுநாளே அதிகாலையில் எழுந்து கழுதைக்குச் சேணக்கட்டித் தன் அடிமைகள் இரண்டுபேரையும், தம் மகனையும் அழைத்துக்கொண்டுபோய் தகனபலிக்குக் கட்டைகளை எடுத்து, அதை குமாரனாகிய ஈசாக்கின்மீது வைத்து, ஈசாக்கை வெட்டும்படிக்குத் தன் கையை நீட்டிக் கத்தியை எடுத்தான். அப்பொழுது கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்து, ஆபிரகாமே! ஆபிரகாமே! என்று கூப்பிட்டு, பிள்ளையாண்டவன்மேல் கையைப்போடாதே! அவனை ஒன்றும் செய்யாதே! நீ அவனை உன் புத்திரன் என்றும் பாராமல் எனக்காக ஒப்புக்கொடுத்த படியினால், நீ தேவனுக்குப் பயப்படுகிறவன் என்று இப்போது நான் அறிந்திருக்கிறேன். ஆகையால் "நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, உன் சந்ததியை வானத்து நட்சத்திரங்களைப்போலவும், கடற்கரை மணலைப்போலவும் பெருகவே பெருகப்பண்ணுவேன் என்றும், உன் சந்ததியார் தங்கள் சத்துருக்களின் வாசல்களை சுதந்தரித்துக்கொள்வார்கள் என்றும், நீ என் சொல்லுக்குக் கீழ்படிந்தபடியினால், உன் சந்ததிக்குள் பூமியிலுள்ள சகல ஜாதிகளும் ஆசீர்வதிக்கப்படும்"[208] என்று வாக்குத்தத்தம் கொடுத்துக் காத்த மலை மோரியாமலையாகும்.

---

[208] . பரிசுத்த வேதாகமம், ஆதி, 22 : 18 – 19. பழைய ஏற்பாடு, ப.24.

**மேரிபா மலை (யாத் : 17)**

தேவனாகிய கர்த்தர், இஸ்ரவேல் மக்களை எகிப்து தேசத்திலிருந்து சீனென்னும் வனாந்தரத்தை விட்டுப் புறப்பட்டு, ரவீதீமென்னும் பள்ளத்தாக்கிலே பாளையமிறங்கினார்கள். அங்கே குடிக்கத் தண்ணீர் கிடைக்கவில்லை. அதுபற்றி மோசேயோடே சண்டையிட்டார்கள், அதைக்கண்ட மோசே ஆண்டவரைப் பார்த்து, 'நான் இந்தச் சனத்துக்கு என்ன செய்வது? என்னைக் கல்லெறிந்து கொள்ளப்போகிறார்களே! என்று முறையிட்டார். ஆண்டவர் அவனைப் பார்த்து, உன் கோலை எடுத்துவா; நான் உனக்கு ஓரேப் என்னும் மலையில் ஒரு பாறையைக் காட்டுவேன்; அதை அடித்தால் சனம் குடிப்பதற்கு பாறையிலிருந்து தண்ணீர் சுரந்துவரும்' என்று ஆண்டவர் சொல்ல, மோசே அப்படியே கேட்டு கோலைக்கொண்டு அடிக்க பாறையிலிருந்து தண்ணீர்ப் பெருக்கெடுத்து ஓடி சனங்களின் தாகத்தை தீர்த்த அற்புதமான மலை மேரிபா மலையாகும்.

***சீனாய் மலை (யாத், 19 - 20)***

இஸ்ரவேல் மக்கள் எகிப்து தேசத்தைவிட்டுப் புறப்பட்டு மூன்று மாதமான பின்பு சீனாய் என்னும் வனாந்தரத்திலிருக்கிற கடவுளுடைய மலையை வந்தடைந்தார்கள். அப்போது மோசே, கடவுளிடம் மலையின்மேலேறிப் போனார். அப்போது ஆண்டவர் மோசேயைப் பார்த்து, 'நீ போய் இன்றைக்கும் நாளைக்கும் சனத்தைப் பரிசுத்தப்படுத்து; எப்படியெனில், தங்கள் உடுப்பை வெளுத்து மூன்றாம் நாளைக்கு ஆயத்தமாயிருக்க வேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லு; சனம் மலையின்மேல் வந்து ஏறாதபடி அதைச் சுற்றிலும் எல்லையைக் குறித்துவை; எல்லையைத் தாண்டி மலையைத் தொடுகிறவனெல்லாம் செத்தே போவான் என்று சொன்னார்.

மூன்றாம் நாளாகிப் பொழுது விடிய மலையின்மேல் பேரிடி முழக்கமும், மின்னலும் உண்டாகிக் கார்மேகமொன்று தோன்றிற்று. ஒரு பலமான எக்காளத்தின் ஓசையும் கேட்டது. அது கேட்டச் சனமெல்லாம் நடுநடுங்கி நின்றார்கள். அப்போது மோசே கடவுளைச் சந்திக்க சனத்தைப்

பாளையத்திலிருந்து அழைத்துக்கொண்டு போனான். சனங்களெல்லாரும் மலையின் அடிவாரத்தில் வந்து நின்றார்கள். அப்போது கடவுள் சனத்தைப் பார்த்து, நியாயப்பிரமாணப் பெட்டியிலுள்ள பத்துக் கற்பனையடங்கிய வார்த்தைகளைக் குறித்துப் பேசத்தொடங்கினார்.

“உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொருபத்தையாகிலும், யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாயிருக்க வேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம். உன் தேவனாயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்துப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன். என்னிடத்தில் அன்புகூர்ந்து, என் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலைமுறை மட்டும் இரக்கஞ் செய்கிறவராயிருக்கிறேன்.

உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக; கர்த்தர் தம்முடைய நாமத்தை வீணிலே வழங்குகிறவனைத் தண்டியாமல் விடார். ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக. நீ நன்றாய் இருப்பதற்கும் பூமியிலே நீ நெடுநாள் இருப்பதற்கும் உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ண வேண்டும்.

கொலை செய்யா திருப்பாயாக.

விபச்சாரம் செய்யாதிருப்பாயாக.

களவு செய்யாதிருப்பாயாக.

பிறனுக்கு விரோதமாகப் பொய்சாட்சி சொல்லாதிருப்பாயாக.

பிறனுடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக; பிறனுடைய மனைவியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும்,

அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னும் பிறனுக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக."[209] என்று கட்டளையிட்டார்.

சனமெல்லாம் இடி முழக்கத்தைக் கேட்டு, மின்னலையும் மலையில் எழுப்பிய புகையையும் கண்டு, திகிலடைந்து, எட்டியோடிப்போய் நின்றார்கள்; அப்படி நிற்கும்போது இஸ்ரவேலின் மைந்தர் மோசேயைப் பார்த்து, கடவுள் எங்களோடே பேசாமல் நீ குறுக்கேவந்து நின்று எங்களோடே பேசும்; கடவுள் எங்களோடே நேரிட்டுப் பேசினால் நாங்கள் செத்தேபோவோம் என்று சொன்னார்கள். மோசே அப்படியே போய்க் கடவுள் எழுந்தருளிய கார்மேகத்தில் நுழைந்து அவர் சொன்ன யாவையும் கேட்டான். அங்கே அவர் நாற்பது நாள் அல்லும் பகலும் இருந்து மலையைவிட்டு இறங்கும்போது கடவுள் தமது விரலினாலே பத்துக் கற்பனை இரண்டு கற்பலகைகளில் எழுதி மோசே கையில் கொடுத்தனுப்பிய வாழ்வியல் உன்னதமான மலை சீனாய் மலையாகும்.

**கர்மேல் மலை**

"கெரம், எல் என்ற எபிரேய வார்த்தைகளிலிருந்துதான் கர்மேல் என்னும் பெயர் வந்தது. கெரம் என்றால் திராட்சைத் தோட்டம்; எல் என்றால் கடவுள் எனப் பொருள்படும். ஆகவே கர்மேல் என்பது கடவுளின் திராட்சைத் தோட்டம் என்றழைக்கப்படுகிறது."[210] கர்மேல் என்பது ஆண்டவரின் மலையாகும். உலகில் கர்மேல் மலையைப்போல செழிப்பான பகுதி எங்கும் கிடையாது. அதனால்தான் தேவனுடைய ராஜ்ஜியம் திராட்சைத் தோட்டத்திற்கு ஒப்பாயிருக்கிறது என்பதை மெய்பிக்கும் வகையில் எரேமியா; 50 – 19 இஸ்ரவேலை அதின் வாசஸ்தலத்திற்குத் திரும்பிவரப்பண்ணுவேன்; அப்போது அது கர்மேலிலும் பாசானிலும் மேயும்; எப்பீராயீமின் மலைகளிலும் கீலேயாத்திலும் அதின் ஆத்துமா திருப்தியாகும் என்று கூறும் தீர்க்கதரிசியின் வார்த்தையின் மூலம் கர்மேல் மலையின் வளத்தை அறியமுடிகிறது. "உன் சிரசு கர்மேல்

---

209 . பரிசு.வே. யாத், 19-20. பழைய ஏற்பாடு, ப.94.
210 . வேதாகம கையேடு, Mrs.Sucharita George, ப. 148.

மலையைப்போல் இருக்கிறது."[211] சிரசு எப்படி மனிதனுக்கு முக்கியமோ அதைப்போலவே இஸ்ரவேலுக்கு கர்மேல் மலை முக்கியமானதாகும். கர்மேல் மலையானது சொர்க்கப் பூமியாக இருந்தது. அதன் வற்றாத நீரூற்றுகளிலிருந்து ஓடைகள் புறப்பட்டன. வளமிக்க அதன் சரிவுகளிலிருந்து அழகான மலர்களும் செழுமையான மரங்களும் நிறைந்திருந்தன. கர்மேல் மலையிலிருந்து பார்த்தால், தேசத்தின் பரந்து விரிந்த காட்சி தெரியும். தேசத்தின் பல பகுதிகளிலிருந்து அதன் உச்சியைக் காணலாம்.

மலைச்சரிவுகளிலிருந்து மரங்களின் கீழே சிலைகளைத் தொழுது, தேவனைப் பலர் அவமதித்தார்கள். ஆகவே தேவனுடைய வல்லமையை வெளிப்படுத்தவும், அவருடைய நாமத்தின் மகிமையை நிலைநாட்டவும் எலியா தீர்க்கதரிசி கர்மேல் மலையை தேர்ந்தெடுத்தார். ஆகாபிற்கு முன்பாக நின்று எலியா, பாகால் – அஸ்தரோத்தின் தீர்க்கதரிசிகளையும் தன்னையும் கர்மேல் மலைமேல் சந்திக்க இஸ்ரவேல் அனைவரும் கூடிவர வேண்டுமென எலியா கேட்டுக்கொண்டார். கூடியிருந்த இஸ்ரவேல் கூட்டத்தார் புடைசூழ, இராஜாவாகிய ஆகாபுக்கும் பொய்தீர்க்கதரிசிகளுக்கும் எதிராக நின்றார் எலியா, யெகோவாவின் மகிமையை நிலைநாட்டுவதற்காக அவர் ஒருவர் மாத்திரமே இருந்ததுபோல் தோன்றியது. இஸ்ரவேல் இராஜாவும் பாகால் தீர்க்கத்திசிகளும், படைவீரர்களும் ஆயிரக்கணக்கான மக்களும் அங்கிருக்க, 'சாபத்திற்கான காரணர்' என்று அனைவராலும் அஞ்சப்பட்ட எலியா, பாதுகாப்பின்றி நிற்பதுபோலத் தோன்றியது. ஆனால் எலியா தனியாளாய் நிற்கவில்லை; பரலோகச் சேனைகளும் தூதர்களும் அவருக்கு மேலேயும், அவரைச் சுற்றிலுமிருந்து அவரைக் காத்துக்கொண்டிருந்தனர். தன் கடமையை உணர்ந்தவராய், தேவக் கட்டளையைச் செய்ய பயமும் வெட்கமுமின்றி தெய்வீக ஒளி முகத்தில்வீச அவர் பேசுவதைக்கேட்க ஆர்வமுடன் காத்திருந்தனர்.

[211] . பரிசு.வே, உன், 7 : 5. பழைய ஏற்பாடு, ப.805.

கர்மேல்மேலிருந்த இஸ்ரவேலர் சந்தேகமும் தயக்கமும் கொண்டிருந்த வேளையிலே எலியா பேசி, "இரண்டு காளைகளை எங்களிடத்தில் கொண்டுவரட்டும்; ஒரு காளையை தெரிந்து கொண்டு, அதைச் சந்துசந்தாகத் துண்டித்து நெருப்புப் போடாமல், விறகுகளின்மேல் வைக்கக்கடவர்கள்; நான் மற்ற காளையை அப்படியே செய்து, நெருப்புப் போடாமல் விறகுகளின்மேல் வைப்பேன். நீங்கள் உங்கள் தேவனாகிய பாகாலின் நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுங்கள்; நான் கர்த்தருடைய நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுவேன்; அப்போது அக்கினியால் உத்தரவு அருளும் தெய்வமே தெய்வம்" என்றார். வெளித்தோற்றத்தில் துணிவும் திமிரும் உடையவர்கள்போல் காணப்பட்டாலும் அக்கள்ளத் தீர்க்கத்த்சரிசிகளின் அக்கிரம இருதயங்கள் பீதி ஏற்பட்டிருந்தது. பலிபீடத்தை ஆயத்தம்பண்ணி, விறகையும் பலியையும் அதின்மேல் வைத்தார்கள்; மந்திரங்களை ஓதினார்கள். காடு மலையெங்கும் கீச்சொலி எதிரொலித்தது. பலிபீடத்தைச் சுற்றிலும் நின்ற பூசாரிகள், "பாகாலே எங்களுக்கு உத்தரவு அருளும்" என்று குதித்தும் நெளிந்தும், சத்தமிட்டும், முடியைப் பிடுங்கியும், உடலைக் காயப்படுத்தியும் தங்களுக்கு உதவுமாறு கடவுளிடம் வேண்டிக்கொண்டார்கள். வெறித்தனமான அவர்களின் தொழுகை தொடர்ந்துகொண்டிருந்தது. மாலைநேரம் வந்தது. பாகால் தீர்க்கதரிசிகள் சோர்வும் களைப்பும், குழப்பமும் அடைந்தனர்; ஆளுக்கொரு கருத்தைச் சொல்லிக் கொண்டார்கள். இறுதியில் தங்கள் முயற்சியைக் கைவிட்டார்கள். கர்மேல் மலையில் எதிரொளித்த கூக்குரலும் சாபங்களும் அதன்பிறகு கேட்கப்படவில்லை. ஏமாற்றத்தோடு போட்டியிலிருந்து விலகினார்கள்.

அப்பொழுது எலியா சகல ஜனங்களையும் நோக்கி: என்கிட்டே வாருங்கள் என்றான்; சகல ஜனங்களும் அவன்கிட்ட வந்தபோது, தகர்க்கப்பட்ட கர்த்தருடைய பலிபீடத்தை அவன் செப்பனிட்டு, யாக்கோபுனுடைய கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே, பன்னிரண்டு கற்களை எடுத்து, அந்தக் கற்களாலே கர்த்தருடைய நாமத்திற்கென்று ஒரு பலிபீடத்தைக் கட்டி, விறகுகளை அடுக்கி, ஒரு காளையைச் சந்துசந்தாகத் துண்டித்து விறகுகளின்மேல் வைத்து,

நான்கு குடம் தண்ணீர் ஊற்றி, மூன்றுதரம் சர்வாங்க தகனபலியிட்டு, ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் தேவனாகிய கர்த்தாவே, இஸ்ரவேலிலே நீர் தேவனென்றும், நான் உம்முடைய ஊழியக்காரனென்றும், நான் இந்தக் காரியங்களையெல்லாம் உம்முடைய வார்த்தையின்படி செய்தேன் என்றும் இன்றைக்கு விளங்கப்பண்ணும். கர்த்தாவே, நீர் தேவனாகிய கர்த்தரென்றும், தேவரீர் தங்கள் இருதயத்தை மறுபடியும் திருப்பினீர் என்றும், இந்த ஜனங்கள் அறியும்படிக்கு என்னைக் கேட்டருளும், என்னைக் கேட்டருளும் என்றான்."[212]

அப்பொழுது கர்த்தரிடத்திலிருந்து அக்கினி இறங்கி, அந்த சர்வாங்க தகன பலியையும், விறகுகளையும், மண்ணையும் பட்சித்து வாய்க்காலிலிருந்த தண்ணீரையும் நக்கிப்போட்டது. ஜனங்களெல்லாம் இதைக் கண்டபோது, முகக்குப்புற விழுந்து கர்த்தரே தெய்வம், கர்த்தரே தெய்வம் என்று நிறுபனம் செய்து, மகிமை விளங்கிய எலியாவின் மலை, கர்மேல் மலையாகும்.

**ஒலிவ மலை**

The Mount Of Olives என்று அழைக்கப்படும் ஒலிவ மலை எருசலேமுக்கு கிழக்கே, ஒலிவ மரங்கள் நிறைந்த மலை. ஒலிவமரங்களும் எண்ணெயுமிக்க வளமிக்க மலையாகும். நல்ல கனி உண்டாயிருக்கிற நேர்த்தியும், பச்சையுமான ஒலிவமரமெனும் பெயரைக் கர்த்தர் உனக்கு இட்டார்.(எரே, 11:6) அதனால்தான் ஒலிவமரத்தை உதிர்த்துவிட்டபின்பு, கொம்பிலே தங்கியிருப்பதைப் பறிக்கும்படி திரும்பிப் போகவேண்டாம், அதைப் பரதேசிக்கும், திக்கற்ற பிள்ளைகளுக்கும், விதவைக்கும் விட்டுவிடுவாயாக, என்பதை உபாகமம் புத்தகம் 24: 20 யில் அறிய முடிகிறது. ஏனென்றால் எஞ்சிய அந்த கனிகளை வைத்தே குடும்பம் பிழைக்கலாம் என்ற காரணத்தினாலே அவ்வாறு சொல்லப்பட்டது. சங்கீதக் காரணாகிய தாவீது உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரும் திராட்சக்கொடியைப்போல் இருப்பாள், உன் பிள்ளைகள் உன் பந்தியைச்

[212]. பரிசு.வே, 1இராஜா : 18. பழைய ஏற்பாடு, ப.453.

சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள்(சங், 123 :3) என்று கூறக் காரணம் ஒலிவ மரம் அவ்வளவு பயன்மிக்கதாயிருந்தது. இதில் தயாரிக்கப்படும் எண்ணெய்யானது கொழுப்பற்று காணப்படுகிறது. சாரிபாத் விதவை எலியாவிற்கு அப்பம் சுட்டுக்கொடுத்தது ஒலிவ எண்ணெய்யில்தான். இயேசுவானவர் தம் சீஷர்களுடன் வந்து பிதாவிடம் வேண்டுதல் செய்த இடம் இந்த ஒலிவ மலையாகும். “விருட்சங்கள் தங்களுக்கு இராஜாவை அபிஷேகம்பண்ணும்படி போய், ஒலிவமரத்தைப் பர்த்து, நீ எங்களுக்கு ராஜாவாயிரு என்றது. அதற்கு ஒலிவமரம், தேவர்களும் மனுஷரும் புகழுகிற என்னிலுள்ள கொழுமையைவிட்டுவிட்டு, மரங்களை அரசாளப் போவேனோ என்று மறுப்புக் கூறியது ஒலிவ மரம். கர்த்தருடைய மகிமைநகரத்தின் நடுவிலிருந்து எழும்பி, நகரத்திற்குக் கிழக்கே இருக்கிற மலையின்மேல் நின்றது.”[213] கர்த்தரின் சந்நதியில் எரியும் குத்துவிளக்கிற்கு இடித்துப் பிழிந்த ஒலிவ எண்ணெய் பயன்படுத்தப்பட்டுள்ளது. (யாத்: 27– 20)

இயேசு மரித்து உயிர்த்தெழுந்த பிறகு தன்னுடைய சீசர்களை அழைத்து “நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள் இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உக்களுடனே கூட இருக்கிறேன்”[214] என்று கூறி இயேசுவானவர் மறுரூபமான மலை ஒலிவமலையாகும்.

**சீயோன் மலை**

சீயோன் மலையானது வியக்கத்தக்கும் வகையில் பொழிவுள்ள மலையாகும். "உலக மக்களின் பாவங்களைச் சுமந்து தீர்க்கும் தேவ ஆட்டுக்குட்டியாகிய இறைமைந்தனின் மனைவியாகிய சீயோன் குமாரத்தியாகிய (திருச்சபை மக்கள்) மக்கள் குடியேறின மலையாகும்.

---

[213] . பரிசு.வே, எசே : 11- 23. பழைய ஏற்பாடு, ப.969.

[214] . பரிசு.வே, மத், 28 : 19 – 20. புதிய ஏற்பாடு, ப.47.

ஒழுக்கமுள்ள துறவிகள் வாழும் மலையாகும். எல்லாவற்றுக்கும் மேலாக இயேசு பெருமான் திருச்சபையோடு திருமணமாகும் மலையாகும். இந்த சீயோன் மலையை எபூசியர்களிடம் இருந்து தாவீது ராஜா கைப்பற்றியதால், இந்நகரம் தாவீதின் நகரம் எனப்படுகிறது."[215] ஆகையால், "கர்த்தர் நான் என்னுடைய பரிசுத்த பர்வதமாகிய சீயோன்மீதில் என்னுடைய ராஜாவை (தாவீதை) அபிஷேகம்பண்ணி வைத்தேன்"[216] என்றார். கர்த்தருடைய உடன்படிக்கைப்பெட்டி தங்கிய இடமாகும். அப்படியான தாவீதின் நகரத்திலே சங்கீதக்காரனாகிய தாவீது கடவுள் வாழும் மலையான சீயோன் மலையின் பெருமையை, இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்பண்ணுகிறது எத்தனை நன்மையும் எத்தனை இன்பமுமானது? அது ஆரோனுடைய சிரசின்மேல் ஊற்றப்பட்டு, அவனுடைய தாடியிலே வடிகிறதும், அவனுடைய அங்கிகளின்மேல் இறங்குகிறதுமான நல்ல தைலத்துக்கும், எர்மோன்மேலும், சீயோன் பர்வதங்களின்மேலும் இறங்கும் பனிக்கும் ஒப்பாயிருக்கிறது; அங்கே கர்த்தர் என்றென்றைக்கும் ஆசிர்வாதத்தையும் ஜீவனையும் கட்டளையிடக்கூடிய மலையாக சீயோன் மலை விளங்குகிறது.

சேனைகளின் கர்த்தர் சீயோன் மலையிலும் எருசலேமிலும் ஆளுகை செய்வதால், சந்திரன் கலங்கும், சூரியன் நாணமடையும், அவருடைய மூப்பர்களுக்கு முன்பாக மகிமை உண்டாகும் மலையாக விளங்குகிறது. சீயோன் குமாரரே, உங்கள் தேவனாகிய கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூறுங்கள், அவர் தக்கபடி உங்களுக்கு முன்மாரியையும், பின்மாரியையும் தந்து உதவக்கூடிய இடம் சீயோன் மலையாகும். இம்மலையில்தான் நீதியுள்ளவரும் இரட்சிக்கிறவரும் தாழ்மையுள்ளவரும் கழுதையின்மேலும் கழுதைக்குட்டியாகிய மறியின்மேலும் ஏறி உலாவரும் கடவுளுடைய மலையாக சீயோன் மலை சிறந்து விளக்குகிறது.

**கொல்கதாமலை**

---

[215] . பரிசு.வே,1நாளா, 11: 5. பழைய ஏற்பாடு, ப.519.
[216] . பரிசு.வே, சங். 2:5. பழைய ஏற்பாடு, ப.672.

எபிரெயு பாஷையிலே கொல்கதா, கபாலஸ்தலம் என்றழைக்கப்படுகிறது. கொல்கதா, கல்வாரி என்ற இரண்டு பதத்திற்கும் ‘கபாலஸ்தலம்’ என்று பொருள்படும். இம்மலையானது கபாலம் போன்ற வடிவமாக இருப்பதால் கபாலஸ்தலம் என்றழைக்கப்படுகிறது. இம்மலையில்தான் மனுஷகுமாரன் பாவிகள் கையில் ஒப்படைக்கப்பட்ட இடமாகும். மிகுதியான துன்பங்களைச் சுமந்து சிலுவையில் அறையுண்டு மரித்த மலையாகும். இயேசு பெருமான் சிலுவையில் மாண்டதால் சிலுவை மாண்பு பெற்ற இடமாகும். தொடுவதுகூடப் பாவம் என்று எண்ணப்பட்ட சிலுவை தொழுவதற்குரியதாக மாற்றம் பெற்ற இடமாகும். இழிவாக நினைக்கப்பட்ட சிலுவை இறைமைந்தனை நினைவுகூறும் சின்னமாக மாற்றமடைந்த இடமாகும். இதுவரை குற்றமுள்ளவர்களே சுமந்து வந்த சிலுவையானது, குற்றமற்ற இயேசு பெருமான் சுமந்ததால், அச்சிலுவைகூடக் குற்றமற்றதாக மாறிய மலையாகும். இறைமைந்தன் இயேசு தந்தையிடம் இறை வேண்டுதல் செய்த இடமாகும். இரும்பு ஆணி உடலைக் கிழித்து ஊடுருவிச் செல்ல, அதனால் பல துன்பங்களையடைந்து, இறந்துபோகும் வேளையிலும், சிலுவையிலிருந்து ‘பிதாவே இவர்களை மன்னியும் தாங்கள் செய்வது இன்னதென்று அறியாமல் இருக்கிறார்கள்’ (லூக்,23:34)என்று இறைவேண்டுதல் செய்த இடமாகும்.

**பெத்லகேம் மலை**

ஒவ்வொரு மலையைப் பற்றியும் சொல்லிவந்த குறவஞ்சியைப் பார்த்து, சீயோன் குமாரத்தி எல்லா மலைகளைப் பற்றியும் கூறிவிட்டாய், இனி மணவாளன் பிறந்த பெத்லகேம் மலையைப் பற்றிக் கூறுவாயாக என்று சொன்னதும், குறவஞ்சியானவள், எப்பிராத்தா என்னப்பட்ட பெத்லகேமே, நீ யூதாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறிதாயிருந்தாலும், இஸ்ரவேலை ஆளப்போகிறவர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்னிடத்தில் வருவார்; அவருடைய புறப்படுதல் அநாதிநாட்களாகிய பூர்வத்திலுடையது (மீகா.5:2) என்ற மீகா தீர்க்கதரிசியின் வாக்குப்படியும், இதோ, ஒரு கன்னிகைக் கர்பவதியாகி ஒரு

குமாரனைப் பெறுவாள், அவருக்கு இம்மானுவேல் என்று பெயரிடுவாள் (ஏசா,7 : 14) என்ற ஏசாயா தீர்க்கதரிசியின் வாக்குப்படியும், நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார்; கர்த்தர்துவம் அவர் தோளின்மேல் இருக்கும்,அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்கர்த்தா, வல்லமையுள்ள தேவன், நித்திய பிதா, சமாதானப்பிரபு என்னப்படும். தாவீதின் சிங்காசனத்தையும், அவனுடைய ராஜ்ஜியத்தயும் அவர் திடப்படுத்தி, அதை இதுமுதற்கொண்டு என்றென்றைக்கும் நியாயத்தினாலும், நீதியினாலும் நிலைப்படுத்தும்படிக்கு, அவருடைய கர்த்தத்துவத்தின் பெருக்கத்திற்கும், அதின் சமாதானத்துக்கும்முடிவில்லை. (ஏசா,9:6-7) என்ற ஏசாயா தீர்க்கதரிசியின் வாக்குப்படியும், தாவீதின் குமாரனானவர் பிறப்பதற்கு ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த கடைசி தீர்க்கதரிசியாகிய ‘மல்கியா’ இதோ, நான் என் தூதுவனை அனுப்புகிறேன், அவன் எனக்கு முன்பாகப் போய், வழியை ஆயத்தம் பண்ணுவான், அப்போது நீங்கள் தேடுகிற ஆண்டவரும், நீங்கள் விரும்புகிற உடன்படிக்கையின் தூதனுமானவர், தம்முடைய ஆலயத்துக்குத் தீவிரமாய் வருவார்; இதோ, வருகிறார் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார் (மல்கி, 3:1)என்ற மல்கியா தீர்க்கதரிசியின் வாக்குப்படியும், கர்த்தருடைய தூதனாகிய காபிரியேல், கன்னி மரியாளிடத்தில் தோன்றி, மரியாளே பயப்படாதே; நீ தேவனிடத்தில் கிருபைப் பெற்றாய். இதோ நீ கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாய், அவனுக்கு இயேசு என்று பெயரிடுவாயாக. அவர் பெரியவராயிருப்பார், உன்னதமானவருடைய குமாரன் என்னப்படுவார்; கர்த்தராகிய தேவன் அவருடைய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குக் கொடுப்பார். அவர் யாக்கோபின் குடும்பத்தாரை என்றென்றைக்கும் அரசாளுவார்; அவருடைய ராஜ்ஜியத்துக்கு முடிவிராது என்றார். அதற்கு மரியாள் தேவதூதனை நோக்கி, இது எப்படியாகும்? புருஷனை அறியேனே என்றாள். தேவதூதன் அவளுக்குப் பிரதியுத்தரமாக; பரிசுத்த ஆவி உன்மேல் வரும்; உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆதாலால் உன்னிடத்தில்

பிறக்கும் குழந்தை பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன் என்னப்படும் (லூக். 1: 26 - 35). தேவதூதன் அவர்களை நோக்கி பயப்படாதிருங்கள்; இதோ, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே, தாழ்மையின் கோலமெடுத்து, புல்லணையிலே, மாட்டுத் தொழுவத்திலே பிறந்திருக்கிறார் (லூக். 2 : 10 -11). இவ்வாறு ஆண்டவர் இயேசு கிறஸ்து உலகில் உதித்த உன்னதமான மலைப் பெத்லெகேம் மலையாகும்.

பெத்லெகேம், "எபிரேய மொழியில் 'அப்பவீடு' என்றும் 'அரமேய மொழியில் 'மாமிசவீடு"[217] என்றும் அழைக்கப்படுகிறது. ஏனென்றால் இங்குள்ள வயல்வெளிகளில் தரமான கோதுமை விளைந்தது. எங்கு தரமான கோதுமை கிடைக்கிறதோ அங்கேதான் தரமான ரொட்டியும், அப்பமும் தயாரிக்கப்படுகிறது. அதனால்தான் பெத்லேகேம் அப்பத்தின் வீடு என்றழைக்கப்படுகிறது. அப்பத்தின் வீடாகிய பெத்லேகேமிலே வானத்திலிருந்து இறங்கினவர் பிறந்தார். நல்ல கோதுமை விளையக்கூடிய செழிப்பான பகுதி என்பதாலே அநேகர் ஆடு மேய்க்கும் பகுதியாகக் காணப்பட்டது. அங்கே மேய்க்கும் ஆடுகளில் முதலில் பிறக்கும் ஆண்குட்டிகள் எருசலேமில் இருந்த ஆலயங்களில் பலிசெலுத்தப்பட்டது. அதனால்தான் யோவான் ஸ்நானகன் கொடுத்த சாட்சியின்படியே உலகத்தின் பாவங்களைச் சுமந்து தீர்க்கப் பலியாகப் போகிற தேவாட்டுக்குட்டியாகிய ஆவியானவர் பிறந்த பெரிய மலைப் பெத்லகேம் மலையாகும் என்று குறவஞ்சி கூறுகிறாள்.

**மனுடகுமாரனின் குலவளம்**

சீயோன் குமாரத்தி, குறவஞ்சியைப் பார்த்து ஆற்றல் மிகுந்த மலை வளத்தையும், நாட்டு வளத்தையும் இறைமைந்தன் பிறந்த பெத்லகேமின் புகழைக் கூறிவட்டாய், இனி பெத்லகேம் மன்னனுடைய குலவளத்தைச் சொல்வாயாக என்றதும், அதற்கு குறவஞ்சி,

---

[217] . வேதகாம கையேடு, Mrs. Sucharita George, ப.142.

“பெத்தலெகே மரசனுட குலம்கேட்கிலம்மே,

பெரியகுலம் வானவர்க்கும் அரியகுலமம்மே,

முத்தர்கட்கும் பத்தியுள்ள சித்தர்கட்குமம்மே,

மோனமிகு ஞானிகட்கு மேன்குலங்காணம்மே,

சுற்றிவள ரிராசகுல நேசகுலமம்மே,

சொல்லரிய வண்மையுள்ள தெய்வகுலமம்மே,

கத்தனுக்காம் உரியபரி சுத்தகுலமம்மே,

காரணனின் குலமுரைக்க வாயிலைக்காணம்மே.

ஆபிரகா மீசாக்கு யாக்கோபுவென்போர்,

அங்கிஷத்தி லுயர்ந்தயூதர் வங்கிஷங்காணம்மே,

மாபிரிய மாயிசரேற் சாதிகளையெல்லாம்,

வல்லமையோ டாண்டதவி தேந்தல்குலமம்மே,

காபிரியேல் தூதனங்கு சொன்னகுலமம்மே,

கன்னிகையின் வித்தான மன்னுகுல மம்மே!

பாவிகளை யீடேற்ற வந்தகுலமம்மே,

பராபரனின் குலமிதனைப் பகரவொண்ணாதம்மே…”[218]

என்று பலவாறு புகழ்ந்து கூறும் குறவஞ்சி, மனுஷகுமாரனின் குலமானது பெரிய குலமாகும். விண்ணவர்களுக்கும் மேலான குலமாகும். வீடு பேறு அடைந்தவர்களுக்கும், இறையன்புமிக்கச் சித்தி பெற்ற சித்தர்களுக்கும், அமைதி மிகுந்த அறிஞர்களுக்கும் மேலான குலமாகும். சொல்லி முடியாத கொடைப் பண்புமிக்க இறைவனது குலமாகும். தூய்மையான இறைவனுக்கு உரிமையான தூய குலமாகும். எல்லாவற்றுக்கும் மூல காரணமானின் குலத்தைப் பற்றிப் பேச வாயே இல்லை. இதை நீயே அறிவாயாக. மேலும் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களின் குலத்தில் உயர்ந்த குலம் யூதர்குலமாகும். தேவனுக்கு மிகவும் விருப்பமான இஸ்ரவேல் இனங்களையெல்லாம் பெருமையோடு ஆண்ட

[218] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.185 – 187.

தாவீதென்னும் வீர குலமாகும். காபிரியேல் தூதன் கனவில் தோன்றி, பரிசுத்த ஆவியினால், கன்னிமரியாளின் வித்துத் தோன்றிய குலமாகும். குற்றவாளிகளை விடுதலையாக்கி முன்னேற்ற வந்த குலமாகும். மேலும்,

"வானுலகோர் பூவுலகோர் பூமியின்கீழானோர்,
மற்றுலகோ ரும்வணங்கும் மகத்துவஸ்தம்மே,
யானசிஷ்டி யாவுகட்கு முதற்பிறந்தோனம்மே,
அம்புவியும் வானுலகு மமைத்வன்காணம்மே,
ஊனுடலி லாதவச ரீரியவனம்மே,
ஒப்புவமை யில்லாத முத்தொழிலோனம்மே,
ஞானியர்கள் நாவலர்கள் விண்ணுலகோர்மண்ணோர்,
நாவிலடங் காவேத நாயகன் காணம்மே"[219]

என்று மனுஷ குமாரனின் குலவளத்தைப் புகழ்ந்து கூறுகிறாள்.

**வாசல் வளம்**

பொன்னகரான விண்ணுலகு ஒன்று ஒப்பு அல்லாமல் வேறு இல்லை என்று உயர்ந்த பெத்லகேம் என்னும் புதுமையான நாட்டில் அரசனாகிய சாலமோனும், பின்நாளில் யோசுவாவும் பகுத்துத்தந்த மேலான நிலையினுடைய சீயோன் மலையின்மேல் உயர்ந்த ஆலயத்தின் உள்ளே செல்லும் வாசலின் வளமையை இனிமையாக எனக்குச் சொல்லுவாயாக என்று சீயோன் குமாரத்தி கேட்டதும், சீயோன் குறத்தி மன மகிழ்ச்சி பொங்க,

"வாசலிது பெண்ணே வாசலிது யேசு மகராச ராசனின் வாசலிது,
மானபரந்தவிது மேலானசுதன்சலமோன் ஞானபரந்துதிக்கும் வாசலிது,
தேசுதிகழ் கேராபீனும் சேராபீமுநிற்கும் வாசலிது,
தேவபரன்மகிமை மேவிமுகிலினுடை தாவிநிறைந்திருக்கும் வாசலிது.
இசராவேல் சாதியெல்லா மிரைந்துசெல்லும் வாசலிது,
இலேபித்தமார்களெல்லாம் தாபித்துமந்திரசெபஞ்

[219] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

சேவித்துப்பண்பு செயும்வாசலிது,

திசைமேவு மன்னர்மன்னர் தெரிசனம்செய் வாசலிது,

தேசத்திராசாத்தி நேசித்துக்காணிக்கைகொண்டாசித்துப்

போற்றவரும் வாசலிது…”[220]

என்று விளக்கினாள். மேலும் ஆசாரிகளும், அறிஞர்களும், வலிமைமிக்க வீரர்களும், நாட்டின் தலைவர்களும் ஒழுக்கத்துடன் வழிபாடு செய்யும் இடமாகவும், மனதை ஒருநிலைப்படுத்தித் திருமறைத் தியானம் செய்யும் வளமிக்க வாசலாகும். சங்கீதம் சொல்லுகின்ற பாடகரின் அவை நிறைந்த வாயில் இதுவாகும். தாளங்களும் அழகான கின்னரங்களும், பெரிய எக்காளமும் முழங்கும் இன்னிசை வளமாகும். சொல்லுதற்கறிதான தீர்க்கதரிசிகளும், பெரியோர்களும் வருகைதரும் வாசலாகும். முரசும், ஊதுகுழலும் விளங்குமாறுப் பெண்கள் நடனமாடும் வாயிலாகும். மணமலர் சூடிய இளம் பெண்களும் நடனமாடிவரும் வாசல் இதுவாகும். நீதியைக்கூறி, கட்டளையிட்டுச் சத்தியம் வாங்கி நிலையாக இருக்கும் வாயில் இதுவாகும்.வேற்று நாட்டு சிறைபட்டுப் போனவர்கள் ஏராளமானோர் திரும்ப வந்து வணங்கும் வாயில் இதுவாகும். மாசு மிகுந்த குற்றவாளிகளுக்கும், அறிவற்றவர்களுக்கும், உதவியில்லாதவர்களுக்கும், துன்பத்திற்குள்ளானவர்களுக்கும் நீதி வழங்கும் நித்திய வாசலாகும்.

உலகிலுள்ள எல்லா சனங்களும் பலி செலுத்தி வணங்கும் வாயில் இதுவாகும். கற்றறிஞர்களும், கன்னிப் பெண்களும் மிகுதியாக மண்டியிட்டு போற்றுபவர்கள் கூடும் தலமாக இவ்வாசல் விளங்குகிறது. புகழ்மிக்கக் கூட்டத்தினராகிய தமிழ் கூறும் வளமை மிகுந்த வாசல் இதுவாகும். தேவ சகாய கவிஞருக்கு அருள் புரியும் இறைமைந்தன் வரும் வாயில் இதுவாகும்.

“அன்னாளும் சிமியோனு மேசையனையேந்திய வாசலிது,

ஆண்டவனுலகையெல்லா மீண்டவனுயர்

---

[220] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.200-201.

பனிரண்டாண்ட தனிற்றர்க்கமிடும் வாசலிது,

கன்னிமரியோசேப்புங் கர்த்தனைத்தேடிவரும் வாசலிது,

காகப்பலகைகளை யோசைபடப்புரட்டி வீசித்துரத்துகின்ற வாசலிது,

ஆயக்காரன் பரிசேயன் வாதாடிச் செபஞ்செய்த வாசலிது,

ஆகமத்தினோடேகிரு பாசத்தினாலுநீச வாகனத்திலேறி வரும்
வாசலிது,

மாயக்கார வேசிக்கள்ளர் மறுபிறப்பாம் வாசலிது,

வழியுஞ்சத்தியம்சீவனுழையுநெருக்கமென்ற வழுவதன்றிய
மோட்ச வாசலிது."[221]

என்று பலவகையான வாசல்களின் வளங்களைக் கூறுகிறார்.

**மூலிகை வளம்**

பெத்லகேம் குறவஞ்சியில் வரும் நூவன் வாயிலாக, சாஸ்திரியார் பெத்லகேம் தலைவரின் அருளினால் மலர் மாலைக்குப் பொருந்தியவற்றைத் திருமறையில் வைக்கப்படுத்திய அறிவு மூலிகைகளை அவர் செய்த அற்புதங்கள், அதிசயங்கள்களுடன் இணைத்து, தொகுத்து மூலிகை வளங்களாகக் கூறுகின்றார். அதைப் பற்றி விரிவாக விளக்கப் படுகிறது.

"மூலிகையானறி வேன் பெத்லேம்பதி
முன்னவனைத்துதித்துத் துன்னதமாகவே,
சாலோக சாருப சாமீப சாயுச்சிய
சாமியைப்புல்லின்மே லேகிடத்தப்புல்லின்.

அற்புதமாயொரு கோலத்தைச்சற்பம்
தாக்கவுமாக்கின சற்பம்கோலாகவும்,
விற்பனமாய்க்கையை வெண்குட்டமாக்கவும்
வெண்குட்டமானகை நன்கையதாகவும்,
துப்புரவானநீர் செந்நீராகவும்
தோன்றுமிரத்தமுன் போல்நீராகவும்

[221] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

பற்பலபேன்தவ ளைவண்டைக்கூவவும்
பாவளகிப்பதத்தி லேவவுமோசேயின்.

கட்டளையாய்மிரு கத்தின்மேல்மாந்தர்மேல்
காய்ச்சலுடன்கொப் புளத்தெரிபந்தத்தைத்,
திட்டமதாக வரபண்ணிமாற்றவும்
தேசமெல்லாமங்கன் மழைவரப்பண்ணவும்,
பட்டப்பகலை யிரவதுவாக்கவும்
பார்வோனின்நெஞ்சைக் கடினமதாக்கவும்,
வெட்டுக்கிளியை அழைப்பித்து நீக்கவும்
வேண்டிய யாவையுஞ் செய்யவுமோசேயின்.

மாராவின்மெத்தக் கசப்பானதண்ணீரை
மாற்றிடப்போட்ட மரத்துடமூலிகை,
ஆரோனின்கோல்துளிர் விட்டுப் பூப்பூத்தழ
கானாவாதுமைப் பழந்தந்தமூலிகை
பாரினில்மீதியா னித்தரைச்சங்காரம்
பண்ணினதீவட்டிப் பானையின்மூலிகை
போரினிலாயிரம் பேரையெலும்பிட்டுப்
போக்கியுமேபிண மாக்கியசீமமோன்…”[222]

என்று விளக்கியதோடு, தீர்க்கதரிசியான எலியா, செருக்குடைய ஏகபேலுக்குப் பயந்து சூரைச் செடியின்கீழ் வலிமைக்குன்றிப் படுத்திருந்தபோது இறைதூதன் தண்ணீரும், சுட்ட அடையும் கொடுத்தான். அதனைத் தின்ற எலியா நாற்பது நாள்வரை ஓரேப் மலைக்கு இரவும் பகலும் ஓடக்கூடிய வலிமை தரக்கூடிய சுட்ட அடை மூலிகைகளை அறிவேன். அதைப் போன்று கர்த்தருடைய வார்த்தைக்குக் கீழ்படிந்ததினிமித்தம் அவனது பசியைப் போக்க காகங்களுக்குக் கட்டளையிட, காகங்கள் அப்பமும் இரைச்சியும் கொண்டு எலியாவின் பசியைப் போக்கிய காக்கையின் மூலிகையை நானறிவேன்.

[222] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.273-274.

எலியாவின் சீடன் எலிசா, ஒரு சால்வையை வீசி அங்கிருந்துப் புறப்பட்டு யோர்தானைக் கடந்து எரிகோவில் சோர்வடையாமல் ஒரு புதிய தோண்டியில் உப்பினை உண்டாக்கித் தண்ணீர் ஊற்றி இறைவனை வணங்கி அதில்போட்டு நிலமானது பாழ்பட்டு அதன் தண்ணீர் மரணத்துக்கு ஏதுவாக இருந்ததைச் சீர்செய்து, செழுமையான நிலமும், நலம் தரும் மதுரமாக மாறச் செய்த மூலிகையை அறிவேன் என்றும், பெத்தேலுக்குச் சென்ற எலிசாவைக் கண்ட பிள்ளைகள் 'மொட்டைத் தலையா' என்று சொன்னதைப் பொறுக்க முடியாமல் அவர்களை ஒருசேர யாவர்மீதும் சினங்கொண்டு இறைவனின் பெயரால் சபித்திடக் காட்டுக் கரடிகள் இரண்டு வந்து அப்பொழுதே நாற்பத்திரண்டு பிள்ளைகளையும் மூர்க்கமாகத் தாக்கிய கரடியின் மூலிகையை அறிந்திடுவேன்.

விறகு பொருக்கிக் கொண்டிருந்த சாரிபாத் விதவையைப் பார்த்து , 'நீ போய்த் தாகத்திற்குக் கொஞ்சம் தண்ணீரும் பசிக்கு ஒரு அடைத் துண்டும் கொண்டுவா' என்று சொன்னார். 'ஐயா, ஒருபிடிமாவும் கொஞ்சம் எண்ணெயுமேயல்லாமல் வேறொன்றும் என் கையிலில்லை என்று சொன்னாள். அம்மா! நீ பயப்படாமல் போய் எனக்கு ஒரு அடை கொண்டுவா; பிறகு நீயும் உன் மகனும் சாப்பிடலாம்; பூமியில் மழை பெய்யுமளவும், உன் பானையில் மாவு செலவழிந்து போகாது; உன் கலத்தில் எண்ணெய் குறைந்து போகாது என்று இசரவேலின் ஆண்டவராகிய தேவன் சொல்லுகிறார் என்று எலியா சொன்னார். அந்த விதவை எலியா சொன்னபடி செய்தாள். பின் அவளும் அவளது மகனும் சாப்பிட்டார்கள். அப்படியாயினும் ஆண்டவர் சொன்னபடி பானையில் மாவு செலவழிந்து போகவுமில்லை, களஞ்சியத்தில் எண்ணெய் குறைந்து போகவுமில்லை(1இரா:17) அப்படியான மூலிகையிது.

சூனேமி ஊரில் வாழ்ந்த மலடி, பிள்ளை பெற்றதும், பிறந்த பிள்ளை இறந்துவிடச் செய்ததும்; அதே இடத்தில் இறந்த குழந்தையை உயிரோடு எழுப்பிக் கொடுத்ததும்; சிகாலில் பஞ்சம் உண்டானபோது மரணம் பானைக்குள் இருக்கிறது என்று சொன்னவருக்குச் சாப்பிடக் கூடாத மாவைப் பானைக்குள் போட்டு உண்பதற்குப் பக்குவமாக்கி நாலைந்து அப்பத்தால் நூறுபேரை உண்ணச் செய்ததையும், கண்ணிய மிகுந்த சீரியா நாட்டுப் படைத்தலைவன்

நாகமானின் குட்டரோகம் நீங்கியதையும், கேயாசி நல்வழியடையச் செய்ததையும் இவற்றையெல்லாம் செய்த எலியாவின் மூலிகையை நான் அறிவேன்.

தண்ணீரில் விழுந்த இரும்பை, மரக்கொம்பைப் போட்டு மிதந்திடச் செய்த மூலிகையையும் (2இரா:6 - 5) சீரியா தேசத்து மன்னன் இசரவேல் தேசத்தின்மீது படையெடுத்தபோது எலிசா இறைவனை வேண்டல் செய்ததும், எலிசாவைச் சுற்றிலும் இராணுவம் சூழ்ந்திருப்பதாகக் கண்களை மயக்கமடையச் செய்த மூலிகையையும், உலகில் யூதர்கள்மீது போர்செய்யாதிருக்க விருந்தளித்த மூலிகையையும், சமாரியாவின் கொடிய பஞ்சத்தை நீக்கின வார்த்தை என்னும் மூலிகையையும் நான் அறிவேன்.

> “வேரோடே அத்தி மரம்பட்டுபோகவும்
> மேய்ச்சலுள்ளதலத் தாடுகள்மேய்க்கவும்,
> நீரோடும்சீவ நதியினில்காட்டவும்
> நேராய்த்தொழுவத்தில் கொண்டுபோய்ச்சேர்க்கவும்,
> போராடிப்பேயைச் செயித்தரசாளவும்
> பொல்லாதபேர்களை நல்லவராக்கவும்,
> தீராததாகத்தை மற்றவும் ஆற்றவும்
> சீவவிருட்சக் கனியைப்புசிக்கவும்.
> சற்பங்களானதை நீக்கித்தடுக்கவும்
> சாவுக்கிடமான எதைக்குடித்தாலும்,
> அற்புதமாய்ச்சேதம் பண்ணாமல்போகவும்
> ஆரோக்கியஞ்செய்யக் கைகளைவைக்கவும்,
> நற்புகழாய்மரித் தோரையெழுப்பவும்
> ஞானானுமான திரவியம்வாங்கவும்,
> பற்பலபாடையைப் பேசவுமாதி
> பராபரனோடே பரலோகஞ்சேரவும்…”[223]

என்று உருவாக்கப்பட்ட பொருள்களுக்கெல்லாம் காரணாமாய் இருப்பவர், முன்னாலில் ஒரு குருடனின் கண்ணில் உமிழ்ந்ததால் மனிதனை

---

[223] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

மரத்தைப்போலக் காணச் செய்ததும், மீனின் வாயிலிருந்து வரி செலுத்த வெள்ளிக் காசை உண்டாக்கவும், பேயை ஒரு வார்த்தையால் துரத்திவிட்ட இரட்சகனின் எல்லாவிதமான மூலிகைகளையும் அறிவேன் என்று பலவாறு கூறுகின்றாள்.

**குறிவளம்**

திருக்குற்றாலக் குறவஞ்சியைப் போல அல்லாமல், பெத்லகேம் குறவஞ்சியில் குறிபார்த்தல் என்பது, வேதாகமத்தில் சொல்லப்பட்ட தீக்கதரிசிகளின் வாக்குத்தத்தத்தை உவமையாகக் கவிஞர் குறிப்பிடுகின்றாரே தவிர உண்மையில் குறிபார்த்தலைக் குறிப்பிடவில்லை. உண்மையில் கிறிஸ்தவர்கள் குறி பார்க்கும் வழக்கத்தை வைத்திருப்பதில்லை. ஏனென்றால் பழைய ஏற்பாடு காலத்தில் (உபா,18 : 9 -15) என்ற அதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ளபடி, உன் தேவனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும் தேசத்தில் நீ போய் சேரும்போது; அந்த சாதிகள் செய்யும் அருவருப்புகளின்படி செய்யக் கற்றுக் கொள்ள வேண்டாம். தன் மகனையாவது, தன் மகளையாவது தீக்கடக்கப்பண்ணுகிறவனும், குறி சொல்லுகிறவனும், நாள் பார்க்கிறவனும், அஞ்சனம் பார்க்கிறவனும், சூனியக்காரனும், மந்திரவாதியும், சன்னதக்காரனும், மாயவித்தைக்காரனும், செத்தவர்களிடத்தில் குறி கேட்கிறவனும் உங்களுக்குள்ளே இருக்க வேண்டாம். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவன் எவனும் கர்த்தருக்கு அருவருப்பானவன் என்று சொல்லியிருப்பதினால் குறி பார்க்கும் பழக்கம் கிறிஸ்தவர்களிடம் இருப்பதில்லை.

ஆகவே குறவஞ்சிக்கே உரிய நடை என்பதற்காக மட்டுமே குறிபார்த்தலைச் சேர்த்துள்ளார் ஆசிரியர். குறி சொல்ல வந்திருக்கும் குறவஞ்சியிடம், தேவமோகினி, பெத்லகேம் நாட்டிலுள்ள நான்கு திசைகளிலுமுள்ள கலைகளையெல்லாம் உயர்வாய்க் கூறிவிட்டாய், மாறுதல் இல்லாத கன்னிப் பெண்களுக்கு நீ கூறும் உன்னுடைய அடையாளங்களைக் காட்டும் வழிகளை எனக்குக் கொஞ்சம் எடுத்துச் சொல்லுவாயாக! என்ற வார்த்தைக்கு மறுமொழியாக, குறவஞ்சி, அம்மையே! அழிவில்லாத இறைவனின்

நாடான யோர்தான் ஆறு பாயும் கானான் நாடு எங்கும் உண்மையான அடையாளம் சொல்லி, நான் பெற்றுக்கொண்ட நேர்மையான வெற்றிச் சின்னங்களைக் காண்பாயாக! முக்காலத்தில் எகிப்து நாட்டைச் சிறப்பாக ஆட்சி செய்த பார்வோன் என்ற மன்னனிடம் சென்று, அவனுடைய அமைச்சனாக இருந்த யாக்கோபினுடைய மகன் யோசேப்பு கூறிய அடையாளத்தினால் பெற்ற உரிமையான மோதிரத்தை பார்!

நேபுகாத் நேச்சர் என்ற பாபிலோன் மன்னன் ஆட்சி செய்த காலத்தில் மாறுபட்ட அடையாளம் போராட்டமெனக் கண்டு மகிழ்ச்சியாக அவர்களை வெட்டிவிட, அந்தச் செய்தியைக் கேட்ட எங்கள் தானியேல் தீர்க்கன் உண்மையான அடையாளம் சொல்லி அதற்குப் பரிசாகப் பெற்ற வைரமணியைக் காண்பாயாக! நினிவே மாநகரை நாற்பது நாள்களுக்குள்ளாகச் செய்வேன் அதனை நீ போய் நினிவே மக்களுக்கு அறிவிப்பாயாக! என்று யோனாவுக்குக் கூறினார். அதனை நம்பாத யோனா நினிவேக்குச் செல்லாமல், தர்சீமுக்குப் போகிற கப்பலில் ஏறிச் சென்றான். பெருங்காற்றால் கப்பல் நிலைகுலைய, யோனாவை தூக்கிக் கடலில் எறியப் பெரியமீன் விழுங்க மூன்று நாள் மீனின் வயிற்றிலிருந்து நினிவே கரையடைந்து அடையாளங்களைச் சொன்ன மேன்மையான அறிவினை அறிந்து கொள்வாயாக! அம்மையே! திருமறை கூறும் தீர்க்கன் ஏசாயா, எரேமியா, எசேக்கியேல், தானியேல், ஓசியா, மல்கியா, யோவேல், செப்பனியா, சகரியா, மோசேசு, எலியா, சாமுவேல், தாவீது, மேசியா போன்ற தீர்க்கதரிசிகளின் அடையாளங்களை எல்லாம் காண்பாயாக என்று விளக்கிக் கூறுகிறாள்.

**வேட்டை வளம்**

பெத்லகேம் குறவஞ்சியில் வேட்டயாடும் வளத்தை அறிமுகப்படுத்தும் சாஸ்திரியார், ஞானசிங்கன் நூவன் என்பவனோடு வலைகளையும், கன்னிகளையும் வைத்துப் பறவைகளைப் பிடிப்பதாகக் காட்டுகிறார். இதில் பறவை என்பது மனிதர்களாகவும், கண்ணி என்பது வேத வசனங்களாகவும் உருவகப்படுத்தி, தேவ வசனம் என்னும் வலையை விரித்து, பறவை என்னும் மக்களைப் பிடிப்பதாக அமைத்துள்ளார் சாஸ்திரியார். எல்லா மக்களையும்

சேர்ப்பதற்காக, வரங்களைத் தருகின்ற வாழ்வாகிய மரத்தில் ஏறி மக்களைக் கூவி அழைப்பதாகவும், அவை பெத்லகேம் நகர பாதுகாவலரான இயேசு பெருமானின் வரலாறு கூறும் புதிய ஏற்பாட்டின் காலத்தில் குளிர்ச்சியான இனிய தமிழ் மொழியில் நற்செய்தியின் நெறியினைக் கேட்பதற்கு உலகிலுள்ள பறவைகளெல்லாம் வந்து சேர்வதாக,

"கண்டனடையே, பறவைகள்

கண்டனடையே...

துங்கமிகும்எத்தி யோப்பியரேத்தியர்

சூரியர்கல்தேயர் ஊதேயர்மேதியர்,

இங்கிலீசர் அராபியர் கப்பத்தோக்கியர்

எமோரியர்பெரி சியர்சீலியர்,

வக்கையதாகிய ரோமையர்பாரசர்

மாகோகர்கோகர் புரூசியரூசியர்,

சங்கையுள்ளஏபி ரேயர் எபேசியர்

சமாரியர்மீதி யானியரும்வரக்

தந்திரமான பிராஞ்சியர்மேசேரப்பொத்

தாமியரேபுசி ரேலாமீத்திய,

ரிந்துஸ்தானியர் அல்மாஞ்ஞர்கொரிந்தியர்

இக்கோனியரிஸ் பாஞ்சர்கொனஸ்தாஞ்சியர்,

விந்தைசெறிகானா னீயர்மோனியர்

வெஸ்தியரிஸ்தேக் கியர்கிருகாசியர்,

பந்தமிகும்அரு மேனியர்துற்கிகள்

பம்பிளியர்களும் தெம்பாகவேவர..."[224]

என பல நாடுகளிலிருந்தும் பறவைகள் வந்தவண்ணமாக உள்ளதாகவும், மேலும் "நட்பாக இந்தியத் தீபகற்பத்திலே நிலையாக உள்ள அங்கர், கிராடர், திராவிடர், ஆந்திரர், ஒட்டியர், பாஞ்சாலர், பாண்டியர், கொக்கணர், கேரளர், கேகையர், சீனர், கரூசர், கலிங்கர், ய்கந்தரர், கொடியவங்கர், மராரோ, மலையாளர்,

[224] பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.280-280.

கொல்லர், நிடதர், இலாடர், எவனர்கள், கூற்சரர், உருமருணர், குகுரர், சகர், பல்லவர், சவ்வீரர், சோனகர், தெய்ணகர், புல்லர், புலிந்தர், மகதர், விதற்பர்கள், போடர், குடகர், குருகுந்தளர், கோசர், கல்லர், கன்னடர், கன்னாடர், காம்போசர்கள், சோளர் துளுவர், காசிமீரர், சூரசேனர், அவந்திரர், காசர், குலிந்தர், நேபாளர்”[225] இவர்கள் அல்லாமல் நாட்டிலுள்ள நான்கு வகை இனத்தைச் சேர்ந்த எல்லா மக்களும் நற்செய்தி வசனத்தைக் கேட்க வருவதாகச் சாஸ்திரியார் கூறுகின்றார்.

**பறவைகளின் (மக்கள்) பெயர்கள்**

பறவைகள் எல்லாம் கடவுளோடு தங்குவதற்காகவும், கடவுளுடைய வேதத்தைக் கேட்டு, இறையருளைப் பெறுவதற்காகவும் விண்ணவர் பிறந்த ஊரான பெத்லகேம் நகரை நோக்கி படையெடுத்து வருவதாக கீழ்வரும் பாடல் மூலமாக விளக்குகின்றார் சாஸ்திரியார்.

“கூடிவருகுதையே பறவைகள்
கூடிவருகுதையே,
கூடிவருகுதையே பெத்தலேமென்ற
கோட்டைக்கரசனி னாட்டுப்புறமெல்லா,
மாடப்புறாவான ஞானிகளும்அன்ன
மானசீயோன்சபை மேவுமயில்களும்.
கட்டியம்கூறி யொவான்முனிவந்து
கடும்பிரசங்கம் திடன்பெறச்சொல்லையில்,
மட்டிலாப்பாவிக ளாயக்காரர்களு
மாயக்காரர்களுந் தீட்சைக்குவந்தாப்போல்,
சிட்டானசிட்டரு மோனக்குருக்களும்
சேனைச்சகோதரப் பட்சிகள்கூட்டமும்,
கட்டைவெள்ளைப்புள்ளும் நெட்டைஞானப்புள்ளும்
கல்விப்புள்ளும்பல புள்ளிப்புள்ளுமாக.

---

[225] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.282-283.

ஆனந்தப்பட்சியும் பேரின்பப்பட்சியும்
அற்புதப்பட்சியு மெய்ப்புகழ்பட்சியும்,
தானம்தவந்திகழ் காரணப்பட்சியும்
சத்தியப்பட்சியும் சாகாக்குருவியும்
மோனம்புகழ்வானம் பாடியுமாடியும்
மோக்கத்திலுள்ளானு மார்க்கத்திலுள்ளானும்,
ஞானம்தரும்பட்சி மெய்ஞானப்பட்சியும்
நாதாந்தப்பட்சியும் வேதாந்தமாய்ப்பேசி...

வெட்டுக்களியா மகமதுபட்சியும்
வேதத்திற்சேராதக் கூழைக்கடாக்களும்,
தெட்டித்திரிகின்ற அக்கினியானப்பட்சியும்
தேவவசனத்தைத் தின்கின்றபட்சியும்,
மட்டித்தனமான சமண்மதப்பட்சியும்
மாய்மாலப்பட்சியும் பேய்மாலப்பட்சியும்,
பொட்டைக்குருட்டு கள்ளர்புரிப்பட்சியும்
பொய்போ தகப்பட்சி அப்பாலோர்கூட்டமாய்."[226]

என்று விளக்குகிறார். மேலும் யோவானிடம் ஞானஸ்நானம் பெற்றவர்கள் இயேசுவினிடத்தில் உறுதிபடவும், அளவில்லாத குற்றம் புரிந்தவர்களும், சுங்கவரி வாங்கிய ஆயக்காரரும், வஞ்சகரும் திருமுழுக்கு பெற வந்ததுபோலவே, அற்பமாக எண்ணப்பட்ட சீடரும், குருக்களும், படைவீரருமாகிய உடன் பிறந்த பறவைகள் கூட்டமும், உடல் குறுகிய வெள்ளைப் பறவையும், ஞானிகளாகிய நீண்ட பறவையும், கல்வியாளர்களாகிய பறவைகளும், பல புள்ளிகளையுடைய பறவைகளும், மகிழ்ச்சிப் பறவைகளும், பேரின்பப் பறவைகளும், அற்புதப் பறவைகளும், உண்மைப் புகழ் பறவையும், இறவாக் குருவியும், அமைதியுடைய வானம்பாடியும், உயரத்திலுள்ள உள்ளானும், அறிவு தரும் பறவையும், உண்மையறிவுப் பறவையும், ஒலியழகுப் பறவையும் திருமுறை முடிவாகப்பேசி வருகின்றன.

---

[226] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.286-287.

நோவாவின் பெட்டிக்குள்ளே ஆணும் பெண்ணுமாக, ஜோடிஜோடிகளாக வந்து நுழைந்த பறவைகளைப்போல, யாக்கோபு முதலான எழுபது பேர்களையும், பன்னிரண்டு அப்போஸ்தலர்களையும் இரண்டு இரண்டு பேராக அனுப்பிய முறைப்படிக் கற்று, நன்மை தரக்கூடிய வகையில் பேசும் இலட்சத்து நாற்பத்து நாலாயிரம், இரண்டு இரண்டாக வந்து சேர்கின்றன. மேலும் முகமதியர் பட்சிகளும், திருமறையில் இணையாத குட்டைவால் ஆட்டுக் கடாக்களும், வஞ்சித்து அலைகின்ற அறியாமைப் பறவைகளும், சமணப் பறவைகளும், பாசாங்கு செய்யும் பட்சிகளும், பேய்த் தந்திரப் பறவைகளும், பாழ் செய்யும் பறவைகளும், குருட்டுக் களவு செய்யும் பறவைகளும், துற்போதனை செய்யும் பறவைகளும், அப்பாலோர் கூட்டம் பறவைகளும் பெத்லகேம் நகர் நோக்கி இயேசுவின் நற்செய்தி கேட்க வருவதாக மனிதர்களை பறவைகளுக்கு ஒப்புமைப்படுத்திக் கூறுகின்றார்.

**வேட்டைக் கருவிகள்**

"ஞானக்கண்ணிகொண்டுவா,
குழுவா ஞானக்கண்ணிகொண்டுவா.

ஞானக்கண்ணிகொண்டு வா பெத்தலேகமின்
ராசனைவாழ்த்திமா நேசமதாகவே,
வானத்திருந்தருள் ஞானத்திலாக்கி
யானத்துள்ளோரைமெய்க் கியானத்துள்ளாக்கியே."[227]

என்று கூறும் கவிஞர், மனிதர்களாகிய பறவையைப் பிடிப்பதற்கு கண்ணி என்னும் ஞான மிகுந்த வேத வசனம் என்னும் அறிவு வலையை எடுத்து வருமாறு சிங்கன் மூலம் எடுத்துக் கூறுகின்றார்.

**திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சிகளில் பல்வகை வளங்கள் ஒற்றுமைக் கூறுகள்:**

[227] . பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.310.

இவ்விருவகைக் குறவஞ்சிகளிலும் வரும் பொதுவான வளங்களாகத் தலவளம், நாட்டுவளம், மலைவளம், மூலிகை வளம், குறி வளம், வேட்டை வளம் ஆகியன விளங்குகின்றன. தல வளங்கள் பொதுவாக, அத்தலங்களின் சிறப்புகளையும், அத்தலம் அமைந்திருக்கும் இடத்தின் சூழலையும், பெருமைகளையும் எடுத்துக் கூறும் வகையில் அமைந்துள்ளது. திருக்குற்றாலக் குறவஞ்சியில் வரும் நாட்டு வளமானது, அந்நகர் அமைந்துள்ள குற்றாலத்தின் இயற்கை எழில் அமைப்பையும், அந்நகரச் சிறப்புகளையும் எடுத்துக் கூறுகிறது. அதைப்போலவே பெத்லகேம் குறவஞ்யில் வரும் நாட்டு வளமானது இயேசுநாதர் பிறந்த நகரமான பெத்லகேம் நகரச் சிறப்புகளையும், பெருமைகளையும் எடுத்தியம்புகிறது. குற்றாலக் குறவஞ்சியில் வரும் மலை வளமானது, திரிகூட மலையின் இயற்கை எழிலை பறை சாற்றும் விதமாகவும், இம்மலையில் சிவ பெருமான் வாசம் செய்வதால் அவற்றின் பெருமையையும் சொல்லப்படுகிறது. பெத்லகேம் குறவஞ்சியில் வரும் மலை வளமானது இயேசு நாதர் பிறந்தது முதல், அவர் வாழ்ந்தது, நற்போதனை செய்தது, அற்புதங்கள் செய்தது, பாடுபட்டு மரித்தது போன்ற பலவகையான நிகழ்வுகளைப் பற்றி விளக்கிக் கூறப்படுகிறது.

குற்றாலக் குறவஞ்சியில் வரும் மூலிகை வளமானது, அம்மலையில் உள்ள பல்வகையான மூலிகைத் தாவரங்களைக் குறிக்கிறது. பெத்லகேம் குறவஞ்சியில் வரும் மூலிகையானது, கர்த்தரின் வார்த்தையினால் நிகழ்ந்த அற்புதங்களுக்கு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறி வளமானது குற்றாலநாதரின்பால் காதல் கொண்ட வசந்தவல்லியின் காதல் நோய்க்கு மருந்தாக, குற்றாலநாதரின் பெருமைகளையும், குறியின் சிறப்புகளையும், குறி சொல்லத் தொடங்குமுன் ஆயத்தங்களையும், குறத்தி பெற்ற பரிசுகளையும் விளக்கிக் கூறுகிறது.பெத்லகேம் குறவஞ்சியில், குறி என்பது குறி சொல்லுதலைக் குறிக்காமல் தீக்கதரிசிகளின் வாக்குத்தத்தத்தை விளக்குகிறது. இவ்விரு குறவஞ்சிகளிலும் வேட்டைத் திறன், வேட்டைக் கருவிகள், பறவைகள், விலங்குகள், பறவைகள் மேயும் இடங்களைப்பற்றிக் கூறப்படுகிறது.

இவையாவும் இவ்விரு குறவஞ்சிகளில் வரும் பொதுவான கூறுகளாக அறிய முடிகிறது.

**வேற்றுமைக் கூறுகள்**

குற்றாலக் குறவஞ்சியில் வரும் தல வளத்தில், சிவபெருமானின் புகழையும், பெத்லகேம் குறவஞ்சியில் வரும் தல வளத்தில் பெத்லகேமில் தாழ்மையின் கோலமெடுத்துப் பிறந்த இயேசுநாதரின் புகழையும் சொல்லும் இடமாக இவ்விரு தலங்களும் விளங்குகிறது. இவ்விருவகைக் குறவஞ்சிகளிலும் நாட்டு வளம் கூறப்பட்டு இருந்தாலும், குற்றாலக்குறவஞ்சியில் வரும் வளமானது, குற்றால மலை அமைந்திருக்கும் நகரின் சிறப்புகளை எடுத்துக் கூறுகிறது. பெத்லகேம் குறவஞ்சியானது பெலகேம் நகரின் பெருமைகளைக் கூறுவதாக அமைகிறது.

திருக்குற்றாலக் குறவஞ்சியில் பலவகையான அருவிகளைப்பற்றி, அருவி வளம் என்னும் வளத்தில் அறிய முடிகிறது. பெத்லகேம் குறவஞ்சியில் அருவி வளத்தைப் பற்றிக் கூறவில்லை. பெத்லகேம் குறவஞ்சியில் இயேசுநாதர் பிறந்த தாவிது குல வளத்தைப் பற்றியும், கிறிஸ்தவர்களின் மகிமையைக் கூறும் வளத்தையும், சீயோன் மலையின்மேல் அமைந்திருக்கும் உயர்ந்த ஆலயத்தின் வாசலின் வளமையையும், இயேசு பெருமான் செய்த அற்புதத்தைக் கூறும் வித்தை வளம் போன்றவற்றை அறிய முடிகிறது. இத்தகைய வளத்தைப் பற்றி குற்றாலக் குறவஞ்சியில் எதுவும் குறிப்பிடவில்லை.

வேட்டை வளத்தைப் பற்றி இருவகைக் குறவஞ்சிகளிலும் சொல்லப்பட்டாலும், இவ்விரு குறவஞ்சிகளும் மாறுபட்டக் கருத்தைக் கூறுகின்றன. குற்றாலக் குறவஞ்சியில் வரும் வேட்டை வளமானது உண்மையாக வேட்டையாடுதலையும், வேட்டையாடுபவர்கள் செய்யும் அனைத்து வகையான தந்திரங்கள், வேட்டைக் கருவிகள், பறவைகள், விலங்குகளைப் பற்றி அறிய முடிகிறது. ஆனால் பெத்லகேம் குறவஞ்சியில் வரும் வேட்டை வளமோ குற்றாலக் குறவஞ்சிக்கு நேர்மாறாக உள்ளது. அதில் வரும் கண்ணியானது, வேத வசனமென்னும் அறிவுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது. பறவைகள் மனிதர்களுக்கு

ஒப்புமையாகக் கூறப்படுகிறது. உண்மையில் வேத வசனத்தைக் கேட்டு பறவைகளாகிய மனிதர்கள் வந்து வலையில் விழுவதாகக் கூறப்படுகிறது.

மேற்கண்ட ஆய்வுகளின் அடிப்படையில், இவ்விரு குறவஞ்சிகளிலும் மண்டிக் கிடக்கும் பல்வகையான வளங்களைச் சிற்றிலக்கியப் பாடல்கள் வாயிலாக ஒற்றுமை, வேற்றுமைகளை புலனாகிறது.

## தொகுப்புரை

- மனிதனாலும் முழுமையாக ஆக்கவும், அழிக்கவும் முடியாது. அந்த ஒன்றே இயற்கை ஆகும். இயற்கை தரும் இல்லாதவை இனியவை எனப் பலவாக இயற்கையை வணங்குதல் உள்பட மரமாகப் போற்றப்படுகிறது. நவீன இயந்திரங்கள் பல்வேறு ஊடகங்கள் தோன்றினாலும் இயற்கை என்ற சக்திக்கு நிகர் எதுவும் இல்லை. இதனைத் தொல்காப்பியர், “இயற்கைப் பொருளை இற்று என கிளத்தல்” என்கிறார். குறிஞ்சி நிலப் பரப்பை மலைகளும், நீர்வீழ்ச்சிகளும் சூழ்ந்து அழகு சேர்ப்பவை ஆகும்.

- குறவஞ்சியில் பல்வகை வளங்கள் நிறைந்துள்ளன. நர்மதாவின் தமிழ் அகராதி வளம் என்ற சொல்லுக்கு, 1.செழுமை 2.மிகுதி 3.பயன் 4.செல்வம் 5.வருவாய் 6.அழகு 7.வெற்றி என்று பல்வகைப் பொருள்களைக் கூறுகின்றது. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி வளம் என்ற சொல்லுக்கு, 1.இயற்கைப் பொருள்கள் 2.இயற்கை சக்திகள் முதலியவற்றின் நிறைவு 3.மனித சக்தி 4.தொழில் 5.செல்வம் முதலியவற்றின் மிகுதியான இருப்பு 6.எண்ணெய் வளம் மிக்க நாடு 7.தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வருவதால் உலகில் கனிம வளங்கள் குறைந்து கொண்டே வருகின்றன 8.வன வளம் கெடுவது மழைப் பொழிவைப் பாதிக்கும் 9. வளமான நிலங்கள் 10. புதுச் சொல்லாக்கம் மொழியின் வளத்தை அதிகரிப்பதாக இருக்க வேண்டும் 11.நிரம்பியிருப்பது 12.நிறைவு 13.செழுமை 14.கவிதையில் காணப்படும் கற்பனை வளம் 15.குறள் வளம் 16. எல்லாச் சிறப்புகளும் வசதிகளும் பெற்றுள்ள மேம்பட்ட நிலை 17. ‘வளமுடன் வாழ்க’ என்று மணமக்களை வாழ்த்தினார் என்று பலவகையான பொருள்களைக் கூறுகிறது.

- குறவஞ்சி நூல்களுக்கெல்லாம் தாயாக விளங்கக் கூடிய திருக்குற்றாலக் குறவசியில் கவிராயர் கூறும் பல்வகையான வளங்களின் சிறப்புகளைத்

தலவளம், குறும்பலா, நாட்டு வளம், மலை வளம், அருவி வளம், பழைய குற்றாலம், தேனருவி, செண்பக அருவி, ஐந்தருவி, சிற்றருவி, பேரருவி, வட அருவி, புலி அருவி, பழத்தோட்ட அருவி, புது அருவி, மூலிகை வளம், குறிவளம், வேட்டை வளம், பறவைகளின் வளம் என்று வரிசைப் படுத்துகிறார்.

- பெத்லகேம் குறவஞ்சியில் பல்வகை வளங்களைத் தல வளம், நாட்டு வளம், மலை வளம், ஏதேன் மலை, மோரியா மலை, மேரிபா மலை, சீனாய் மலை, கர்மேல் மலை, ஒலிவ மலை, சீயோன் மலை, கொல்கதாமலை, பெத்லகேம் மலை, மனுடகுமாரனின் குலவளம், வாசல் வளம், மூலிகை வளம், குறிவளம், வேட்டை வளம், பறவைகளின் வளம் என்று வரிசைப் படுத்துகிறார்.

- திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சிகளில் பல்வகை வளங்கள் இவ்விருவகைக் குறவஞ்சிகளிலும் ஒற்றுமைக் கூறுகள் வரும் பொதுவான வளங்களாகத் தலவளம், நாட்டுவளம், மலைவளம், மூலிகை வளம், குறி வளம், வேட்டை வளம் ஆகியன விளங்குகின்றன. தல வளங்கள் பொதுவாக, அத்தலங்களின் சிறப்புகளையும், அத்தலம் அமைந்திருக்கும் இடத்தின் சூழலையும், பெருமைகளையும் எடுத்துக் கூறும் வகையில் அமைந்துள்ளது.

- திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சிகளில் பல்வகை வளங்கள் இவ்விருவகைக் குறவஞ்சிகளிலும் வேற்றுமைக் கூறுகள் குற்றாலக் குறவஞ்சியில் வரும் தல வளத்தில், சிவபெருமானின் புகழையும், பெத்லகேம் குறவஞ்சியில் வரும் தல வளத்தில் பெத்லகேமில் தாழ்மையின்

கோலமெடுத்துப் பிறந்த இயேசுநாதரின் புகழையும் சொல்லும் இடமாக இவ்விரு தலங்களும் விளங்குகிறது. இவ்விருவகைக் குறவஞ்சிகளிலும் நாட்டு வளம் கூறப்பட்டு இருந்தாலும், குற்றாலக்குறவஞ்சியில் வரும் வளமானது, குற்றால மலை அமைந்திருக்கும் நகரின் சிறப்புகளை எடுத்துக் கூறுகிறது. பெத்லகேம் குறவஞ்சியானது பெலகேம் நகரின் பெருமைகளைக் கூறுவதாக அமைகிறது.

- திருக்குற்றாலக் குறவஞ்சியில் பலவகையான அருவிகளைப்பற்றி, அருவி வளம் என்னும் வளத்தில் அறிய முடிகிறது. பெத்லகேம் குறவஞ்சியில் அருவி வளத்தைப் பற்றிக் கூறவில்லை.

**சான்றெண் விளக்கம்**

160 . தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், நூற்பா.504.   ப. 95.

161. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணை இயல், நூற்பா.5. ப.18.

162. ஆலிஸ், கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும்,   ப. 160.

163. நர்மதாவின் தமிழ் அகராதி –ஆசிரியர் குழு,   ப. 792

164. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி –   ப. 910

165. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்,   ப. 88.

166. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்,   ப. 91.

167. முனைவர்.கணபதிராமன், திருக்குற்றாலமும்,

குற்றாலநாதர் கோயில் வரலாறும்,   ப. 57.

168. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்,   ப. 7.

169. தலமகிமை செய்யுள். 65   ப. 16.

170. ஏ.சி.சண்முகம்பிள்ளை, திருக்குற்றாலத் தலவரலாறு,   ப. 13.

171. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்,   ப. 83.

172. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும்,   ப. 85.

173. டாக்டர். மு.வரதராசனார், திருக்குறள், தெளிவுரை,   ப. 05.

174. டாக்டர். மு.வரதராசனார், திருக்குறள், தெளிவுரை,   ப.211.

175. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 86.

176. முனைவர். கணபதிராமன் – திருக்குற்றாலமும்,

குற்றாலநாதர் கோயில் வரலாறும். ப.7.

177. தி.கூ.ம.ச.பா. 42 ப. 22.

178. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 76.

179. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 77.

180. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 78.

181. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 171.

182. முனைவர். கஸ்தூரி நாகராஜன் - திருக்குற்றாலத் தலவரலாறு, பக்.30 - 31.

183. கவிராஜ் பண்டிட் டாக்டர். எஸ்.என்.முரளிதர்,

குற்றாலம் உங்களை அழைக்கிறது, பக்.59-60.

184. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 74.

185. முனைவர். கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தலவரலாறு, ப.32.

186. முனைவர் ச. கணபதிராமன், திருக்குற்றாலமும் குற்றாலநாதர்

கோயில் வரலாறும், ப. 26.

187. முனைவர் ச. கணபதிராமன், திருக்குற்றாலமும், குற்றாலநாதர்

கோயில் வரலாறும், ப.29.

188. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி

மூலமும் உரையும், ப. 90.

189. முனைவர் ச. கணபதிராமன், திருக்குற்றாலமும், குற்றாலநாதர்

கோயில் வரலாறும், ப.30.

190. முனைவர் கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தல வரலாறு, ப.41

191. முனைவர் கஸ்தூரி நாகராஜன், திருக்குற்றாலத் தல வரலாறு, ப.44.

192. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், பக். 42–44.

193. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி மூலமும் உரையும், ப. 115.

194. பரிசுத்த வேதாகமம், யோவா,1:29. புதிய ஏற்பாடு ப. 125.

195. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக்.180-181.

196. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 182-183.

197. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 174-175.

198. பரிசுத்த வேதாகமம், மீகா, 5:2. பழைய ஏற்பாடு ப. 1078.

199. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 177.

200. பரிசுத்த வேதாகமம், சங், 121 : 1 பழைய ஏற்பாடு ப. 751.

201. பரிசுத்த வேதாகமம், ஏசா, 14:13. பழைய ஏற்பாடு ப. 820.

202. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 167.

203. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 168-169.

204. பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 7 – 8. பழைய ஏற்பாடு ப. 02.

205. பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 2-9. பழைய ஏற்பாடு ப. 03.

206. பரிசுத்த வேதாகமம், ஆதி, 2 : 22. பழைய ஏற்பாடு ப. 03.

207. பரிசுத்த வேதாகமம், ஆதி, 2:17. பழைய ஏற்பாடு ப. 03.

208. பரிசுத்த வேதாகமம், ஆதி, 22 : 18 – 19. பழைய ஏற்பாடு ப. 24.

209. பரிசு.வே. யாத், 19-20. பழைய ஏற்பாடு ப. 94.

210. வேதாகம கையேடு, Mrs.Sucharita George, ப. 148.

211. பரிசு.வே, உன், 7 : 5. பழைய ஏற்பாடு ப. 805.

212. பரிசு.வே, 1இராஜா : 18. பழைய ஏற்பாடு ப. 453.

213.  பரிசு.வே, எசே : 11- 23. பழைய ஏற்பாடு ப. 969.

214. பரிசு.வே, மத், 28 : 19 – 20 புதிய ஏற்பாடு ப. 47.

215. பரிசு.வே,1நாளா, 11: 5. பழைய ஏற்பாடு ப. 519.

216.  பரிசு.வே, சங். 2:5.  பழைய ஏற்பாடு ப. 672.

217. வேதகாம கையேடு, Mrs. Sucharita George, ப.142.

218. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.185 – 187.

219. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

220. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.200-201.

221. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

222. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.273-274.

223. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.192.

224. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.280-280.

225. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.282-283.

226. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், பக்.286-287.

227. பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், சே.சுந்தரராசன், ப.310.

# மொழி நடை

இலக்கியப் படைப்பிற்கு உரிய கருவிகளில் மொழிநடை இன்றியமையாதது ஆகும். தமிழ் இலக்கியங்களில் உள்ள நடையில் நிகழ்ச்சி, புதுமை, புத்துணர்ச்சி எனச் செயலால் அமைந்த இலக்கிய வடிவங்கள் மக்களிடம் எளிமையாகச் சென்று சேர்ந்தன. ஆகையால் இலக்கியப் படைப்பாளர்கள் இதனை முழுமையாகத் தங்களது ஆக்கங்களில் வெளிப்படுத்தினர். நடை என்பது ஆசிரியர் தம் படைப்பில் வெளிப்படும் மொழிப்பாங்கு ஆகும். அம்மொழியினைக் கொண்டே அவருடைய தனித்தன்மையை அறிய முடியும். ஆகையால் ஆசிரியருக்கு இருக்கும் தனித்தன்மையின் வெளிப்பாடு மொழி நடை எனப்படுகிறது. மொழிநடையைத் தொல்காப்பியர் காலம் முதல் சிற்றிலக்கியக் காலமான 19ஆம் நூற்றாண்டு இறுதிவரை மரபுசார்ந்த பாவகை இலக்கிய வடிவக் கருத்துக்களை வெளிப்படுத்தி இருந்தாலும் எளிய வகையில் புரியும்படி பா வகை இலக்கியத்திற்கு விளக்கம் கூற உரைநடை வடிவங்களும் தோன்றலாயின, இதனைத் தொல்காப்பியர், “பாட்டுடை நூலே”[228] என்ற கருத்திற்கு ஏற்ப “உரை வகை நடையே நான்கு என மொழிப”[229] என மரபில் இலக்கியத்திற்கு உரை உண்டு என்றும் தொல்காப்பியர் வரையறை செய்கின்றார்.

“பாட்டிலிருந்து முளைத்த ஒரு கிளைதான் உரைநடை"[230] என்று வி.செல்வவிநாயகம் கூறுகிறார். ஆசிரியர் எழுதும் பொழுது அவரின் உள்ளப் பண்பு, உணர்ச்சி, அக வாழ்க்கை, புற வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்வுகள் ஆகியவற்றிற்குத் தகுந்தவாறு எழுத்தில் ஒலியும் உணர்ச்சியும் கொண்ட சொற்களை எழுத்தாளர்கள் இடம் பெறச் செய்கின்றனர். இந்தச் சிந்தனை அமைப்பு முறைகள் எழுத்தாளர்களுக்கும் வேறுபடுவதால் அவருடைய நடை நலன்களும் வேறுபட்டு அமைகின்றன. நடையின் சிறப்பு வாசனை சென்று சேர்வதில் தான் உள்ளது என்ற கருத்தை, "உரைநடையைப் படித்துச் செல்லும்போது மனம் ஒலிகளைப் பற்றிக் கவலை கொள்வதே இல்லை.

---

[228] . தமிழண்ணல், தொல்.செய்யுள்: 1336. ப. 112

[229]. தமிழண்ணல், தொல்.செய்யுள்: 426, ப.59.

[230] . வி.செல்வநாயகம் தமிழ் உரைநடை வரலாறு, ப. 5.

அறிவுக்கு மட்டும் ஏதோ செய்தி எட்டுகிறது. நாம் கருத்தில் கவனமாக இருப்பதால் சொற்களும் அவற்றின் ஒலிகளும் மறக்கப்படுகின்றன. உரைநடையைப் படிக்கும்பொழுது கருத்தை மறந்து ஒளியை மட்டும் கேட்க பழகினால் அதன் நுட்பத்தை உணர முடியும்."[231] என்ற கூற்றின் வழியாக நடையின் சிறப்பை உணர முடிகிறது. எழுத்தாளனே நடையாகவும் நடையே எழுத்தாளராகவும் அமைந்து விடுகின்றன. எனவே நடை என்பது கைகளால் எழுதப்பட்ட எழுத்து அலங்காரம் அல்ல ஆழமான எண்ணங்களின் வெளிப்பாடே ஆகும்

**நடையின் இயல்புகள்**

மொழியின் நடை என்பதை, "உள்ளத்தின் திட்டம் நடையின் திட்டம் ஆகும். உள்ளத்தின் தெளிவு நடையின் தெளிவாகும். ஆசிரியரின் குழப்பமும் சிக்கலும் அவருடைய நடையிலும் தென்படும்."[232] என்பர் மு.வரதராசனார். ஆசிரியர் நடையே அவருடைய இயல்பைக் காட்டும் உரைகல் ஆகும். எனவே நடை என்பது ஆசிரியரின் உள்ளத்தின் சொல் ஓவியமாகவும் குணத்தை அறியும் கலையாகவும் விளங்குகிறது என்பதை அறியலாம்.

அந்த வகையில் சிற்றிலக்கிய வரிசையில் அணிதிரண்டு நிற்கும் நூல்களுள் ஒன்றாகிய குறவஞ்சியில், திரிகூடராசப்பக் கவிராயரின் தலை சிறந்த படைப்பான திருக்குறாலக் குறவஞ்சியின் மொழி நடையையும், கிறிஸ்தவ இலக்கியத்தில் புகழ்வாய்ந்ததாகப் போற்றப்படும் தஞ்சை வேத நாயக சாஸ்திரியாரின் சிறந்த படைப்பான பெத்லகேம் குறவஞ்சியின் மொழி நடையையும் விரிவாக இவ்வியலில் விளக்கப் படுகிறது..

**நடை விளக்கம்**

நடை என்பது சங்ககாலம் முதல் வழக்கத்தில் இருந்து வரும் ஒரு சொல்லாகும். "அதாவது, 'Stylos' என்னும் கிரேக்கச் சொல்லின் செல்வாக்கைப் பெற்ற 'Stylus' என்ற இலத்தின் சொல்லின் பொருள் எழுதும் முறை"[233] என்பதாகும். மொழியின் நடையை "ஆடை உடுத்தி வந்த கருத்து என்றும்

[231] . முனைவர் மு.கோவிந்தன், இலக்கிய சோலை, ப. 5.
[232] . மு.வரதராசனார், இலக்கியத் திறன், ப. 160.
[233] . முனைவர். ந. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப. 101.

கூறலாம். அந்நடையானது படைப்பாளியின் பண்பு நலன்களை அறிவின் விசாலசத்தை, ஆழ்ந்த சிந்தனையைப் புலப்படுத்தும் அடையாளம் என்றும் அழைக்கிறார்கள். நடை என்பதை "படைப்பாளியின் ஆளுமையைப் புலப்படுத்துகின்ற ஒன்று மட்டுமல்ல, படைப்பாளியின் அறிவுக் கூர்மையை, ஆன்மீக உணர்வை, காலத்தின் தன்மை போன்றவற்றை வெளிப்படுத்துவது என்கிறார் ஹட்சன்."[234] மேலும் "நடை என்பதை அறிவு சார்ந்த கருத்துகளின் புலப்பாடுதான் நடை என்கிறார் மிடில்ட்டன் முர்ரே."[235] இவர் நடை என்பதை 1. தனி மனிதனின் படைப்பாற்றல் 2. கருத்தை வெளிப்படுத்தும் சக்தி 3. இலக்கியத்தின் மிக உயர்ந்த வெற்றி என்ற மூன்று கருத்துக் கூறுகளால் பகுத்துக் காட்டுகின்றார்.

இவ்வாறு கூறியவற்றிலிருந்து, இலக்கியப் படைப்பாளர்கள் தங்கள் எண்ணத்தைப் புலப்படுத்தும் சொல்லாட்சியே நடை என்பதை அறிய முடிகிறது. இந்த நடையானது ஒவ்வொருவரின் ஆளுமைக்கேற்ப அமைவதால் நடை என்பது ஆளுக்கு ஆள் மாறுபட்டுக் காணப்படுகிறது.

குறவஞ்சி நூல்களுக்கெல்லாம் முன்னோடியாகக் கருத்தப்படும் திருக்குற்றாலக் குறவஞ்சியில், நாடகத்தின் பாத்திரங்களுக்கேற்ப மொழி நடையைச் சிறப்பானதாக அமைத்துள்ளார் கவிராயர். நாடகத்தை அதன் அமைப்பின் அடிப்படையில், நடிப்பதற்கு மட்டும் உரிய நாடகம், படிப்பதற்கு மட்டும் உரிய நாடகம், நடிப்பதற்கும் படிப்பதற்கும் ஒருங்கே உரிய நாடகம் என மூன்று வகையாக வகைப்படுத்திக் காட்டுவர். நாடகம் படிப்பதற்கு மட்டுமல்லாமல் பலரும் பார்த்து மகிழக்கூடியதாக இருக்க வேண்டும். அந்தவகையில் திருக்குற்றாலக் குறவஞ்சி நாடகம் நடிப்பதற்கும், படிப்பதற்கும் ஒருங்கே நாடகத்திற்கென உரிய மொழி நடையைக் கொண்டுள்ளது அதன் தனிச் சிறப்பாகும். கவிராயர் குற்றாலக் குறவஞ்சியை வெண்பா, ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, கொச்சம் போன்ற பா வகைகளிலும், கண்ணி,

---

[234] Hudsaon, op. cit. P.29.
[235] I Middleton Murry, The problem of style, P.6.

சிந்து, தரு, கீர்த்தனை, தோடையம் போன்றவற்றைக் கொண்டு நாடகத்தை நயம்பட உருவாக்கியுள்ளார்.

அதைப் போலவே தஞ்சை வேத நாயகம் சாஸ்திரியார் படைத்த பெத்லகேம் குறவஞ்சியானது, திருக்குற்றாலக் குறவஞ்சிக்கு எதிராக, பெத்லகேமில் பிறந்த இயேசு நாதரை மையப்படுத்தி, திருக்குற்றாலக் குறவஞ்சியைத் தழுவியே எழுதப்பட்டுள்ளதால், திருக்குற்றாலக் குறவஞ்சியில் காணப்படக் கூடைய அதே மொழி நடையான வெண்பா, ஆசிரியப்பா, கொச்சக் கலிப்பா, ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை ஆகிய பா வகைகளினாலும், சிந்து, தரு, கண்ணி, கீர்த்தனை, அகவல், தோடையம் முதலான இசைப்பாக்களும் பெத்லகேம் குறவஞ்சியிலும் காணப்படுகிறது.

இவ்விரு குறவஞ்சிகளிலும் இவ்விரு ஆசிரியர்களும் கையாண்டுள்ள சொல்லாட்சி, நல்லிசைப் புலமை, கற்பனை நடை, கருத்து நடை, காட்சி நடை, அழகு நடை, அருவி நடை, அடுக்கு நடை, ஒப்பீட்டு நடை, ஓசை நடை, எளிய நடை, வருணனை நடை, உவமை நடை, உருவக நடை போன்ற பல்வகை மொழி நடைகளைப் பற்றி விரிவாக விளக்கப் படுகிறது.

**சொல்லாட்சி**

சொல்லாட்சியானது, சொற்களைத் தேர்ந்து, உணர்த்த விரும்பும் கருத்துக்கு வழுவூட்டித் தொடரில் தக்க இடத்தில் ஆளும் திறன் சொல்லாட்சி ஆகும். “உணர்ச்சி பொங்கும் கற்பனை, அணி நயமிக்கப் பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுத்துத் தொடரில் உரிய இடத்தில் செம்மையாக ஆண்டு கருத்தை விளக்கும் திறன் சொல்லாட்சி”[236] என்று விளக்குவர். மேலும் “படைப்பாளனுடைய தனித்திறமையினால் இயல்வது சொல்லாட்சியாகும். அவனது படைப்பில் முன்னுரிமை வழங்கும் சொற்கள், சொல்லாக்கங்கள் முதலியன சொல்லாட்சியை விளக்கும் நடை கூறுகள் என்கிறார் பௌல்டன்.”[237]

---

[236] . Dwen Barfield, Poetic Diction, A Study in Meaning, P.13.
[237] . Boulton M. Thae Anatomy of prose. P.8.

இவை எல்லாம் தங்கு தடையின்றி நுங்கும் நுரையுமாகப் பொங்கிவரும் கவிதைக்குச் சிறந்த சொல்லாட்சியே பெருமை தருவதாக விளங்குகிறது.

அவ்வகையில் திருக்குற்றாலக் குறவஞ்சியின் ஆசிரியரான கவிராயரின் சொல்லாட்சியானது, பூக்கள் தோறும் தேனீக்கள் சென்று, தேனைச் சேகரிப்பது போன்று, கற்றறிந்த சான்றோர்கள் நாளும் நூலகம் சென்று திருக்குற்றாலக் குறவஞ்சியைத் தேடிப் படித்து, அக்குறவஞ்சியில் மண்டிக்கிடக்கும் சொல்லாட்சி என்னும் தேன் சுவையைச் சுவைத்து தெவிட்டாத இன்பத்தைப் பகிர்ந்து செல்கின்றனர் என்பதற்குச் சான்றாகக் கவிராயர், முருகனை வாழ்த்திப் பாடும்போது, பன்னிரெண்டில் தொடங்கி ஒன்றில் முடியுமாறு, எண்களை இறங்கு முகமாகக் கவிநடையைக் கையாளுவது சிறப்புக்குரியதாகிறது. பன்னிரெண்டு கைகளில் பன்னிரெண்டாவது கை வேலைத் தாங்கிக் கொண்டிருக்க; பதினோரு கைகளில் உருத்திரர் பதினொருவருக்கும் உரித்தான தோமரம், கொடி, வாள், குலிசம், பகழி, அங்குசம், மணி, பங்கயம், தண்டம், வில், மழு ஆகிய படைக் கருவிகளைத் தாங்கி இருப்பான்; ஆகாயம், பாதாளம் அடங்கிய பத்து திசைகளிலும் உமா தேவியர் திருவடிச் சிலம்பிலிருந்து தோன்றிய நவ சக்திகள் வயிற்றில் பிறந்த வீரபாகு முதலிய ஒன்பதியர் போற்றிப் புகழ்வர்; கயிலை இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலமலை, கந்தமாதனம் ஆகிய எட்டு மலைகளுக்கும், ஏழு கடல்களுக்கும் சென்று ஆடிக்களிக்க; பொன்போல் ஒளி வீசுகின்ற ஆறு திருமுகங்களும், அஞ்சுதலை உடையவர்களுக்குப் பயம் நீங்கி, நான்கு, மூன்று ஆகிய புயங்களை உடையவனாகியவன், தன் இரு திருவடிகளையும் தரும் ஒருவன் குற்றாலக் குறவஞ்சி தமிழ் தந்தானே என்று பாடும் சொல்லாட்சியின் அழகை கீழ்வரும் பாடல் மூலமாக அறிய முடிகிறது.

"பன்னிருகை வேல்வாங்கப் பதினொருவர்
படைதாங்கப் பத்துத் திக்கும்
நல்நவவீ ரரும்புகழ மலைகள் எட்டும்
கடல்ஏழும் நாடிஆடிப்
பொன்னின்முடி ஆறுஏந்தி அஞ்சுதலை

எனக்குஒழித்துப் புயநான் மூன்றாய்த்
தன்இருதாள் தருகஒருவன் குற்றாலக்
குறவஞ்சித் தமிழ்தந் தானே."[238]

என்ற பாடல் வரிகள் கவிராயரின் சொல்லாட்சிக்கு எடுத்துக் காட்டாக அமைகின்றன.

**கவிராயர் கையாண்டுள்ள சொல்லாட்சிகள்**

குற்றாலக் குறவஞ்சியில் கவிராயர் கையாண்டுள்ள சொல்லாட்சிகளாக கோமலர்(தாமரை மலர்), கா(கற்பகம்), கவளம் (வெண்மை), குடுமி (உச்சி), தாமம் (பூமாலை), சிலை (மலை, வில்), அத்தி (எலும்பு), விடை (காளை), புரிநூல் (பூணூல்), பூ (பூமி), மழ (இளமை), எவனம் (இளமை), புடைத்தல் (அடித்தல்), இலங்குதல் (ஒளிவிடுதல்), துலங்குதல் (தொங்கி அசைதல்), கோமன் (ஆடை), விதானச் சேலை (போர்வை), மருங்கு (இடை), மலரயன் (பிரமன்), பரிகலம் (மண்டை ஓடாகிய உண்கலம்), துடி (உடுக்கை), சனகம் (பொன்), மிழற்றுதல் ( இசைக் கருவியை ஒலித்தல்), சிவிகை (பல்லக்கு), கவிகை (குடை), தனதன் (குபேரன்), தானை (வீரர்கள் படை), இடபதேகனம் (இடபக்கொடி), பவஞ்சு (சேனை), சேல் (கெண்டைமீன்), மால் (மயக்கம்), பை (பாம்பின் படம்), இத்தரை (இவ்வுலகம்), பொங்கரவம் (சினம் கொண்ட பாம்பு), சங்கம் (சங்கலாகிய குண்டலம்), அரை (இடுப்பு), சந்த (சந்தனம்), வங்காரம் (பொன்), கமுகு (பாக்கு மரம்), சகம் (உலகம்), நுதல் (நெற்றி), துடி (உடுக்கை), துட்டன் (மன்மதன்), தடமுலை (பெரிய முலை), முடுகி (விரைந்து), சும்மா (அடிக்கடி), பிச்சோ (பித்தோ), கூனை (நீர் இறைக்கும் சால்), தமனியம் (பொன்), தண்ணிலா (குளிர்ந்த நிலா), கேதனம் (கொடி), பேரிகை (கடலாகிய முரசு), நாரி (பெண், பார்வதி), வியானம் (பாம்பு), நள்ளிய (விரும்பி), நிமலன் (தூயவன்), தோகாய் (தோகையுடைய மயில்), கோட்டி (பைத்தியம்), செவ்வேள் (முருகன்), சிலை வேள் (மன்மதன்), விரகம் (காமம்), தெண்ணீர் (தெளிந்த நீர்), உண்ணீர் (உண்ணுகின்ற

[238] . புலவர். தமிழமுதன், *திருக்குற்றாலக் குறவஞ்சி*, ப. 6.

நீர்), குதட்டுதல் (திகட்டுதல்), வான்புனல் (மழைநீர்), குருகு (நாரை), வாரி (கடல்), மருப்பு (கொம்பு), கெச்சை ( வெட்சிப் பூ), அபரஞ்சி (உருக்கி ஒடவிட்ட பொன் போன்ற மேனி), ரஞ்சிதம் (இன்பம்), கொம்பை (வட்டம்), துந்துபி (வாத்தியங்கள்), சந்தமுலை (சந்தனம் பூசிய முலை), தவனம் (முத்து), கிம்புரி (யானை), வெம்பு தினை (வறுத்த தினை), கிள்ளுதல் (தோண்டுதல்), கொண்டலம் (கீழ்க்காற்று), வெய்யவன் (கதிரவன்), மூதாரி (பெரிய வளையல்), அத்தகடகம் (கைவளை), சஞ்சீவி (உயிர் காக்கும் மருந்து), இருநிலம் (பெரிய நிலம்), வீறு (மிகுதி), குறளி (குட்டைப்பேய்), சில்லிக்கோல் (சிறுகம்பு), வரித்தோல் (வரிகளையுடைய புலியின் தோல்), உறுக்கி (கோபித்து), ஞாளி (நாய்), கூளி (பேய்), ஆளி (சிங்கம்), சுரும்பு (வண்டு), வலியான் (பறவையினங்கள்), கோட்காரன் (கோள் சொல்பவன், தந்திரகாரன்), மட்டு (கள்), வங்காரம் (பொன்), ஈவாய் (ஈமொய்க்கின்ற வாய்), பட்சி (பறவை), மூரலால் (சிரிப்பால்), பாவகம் 9பாவினம்), கூடல் (மதுரை), பாட்டம் (தோட்டம்), புறவு (பயிரிடும் நிலம்), அடுக்களை (சமையல் செய்யும் அறை), கேகயம் (மயில்), கபாலர் (மண்டை ஓட்டை உடையவர்), வார் (கச்சு), தனத்தி (தனங்களை உடையவர்) வதுவை (மணம்), தார் (மாலை) போன்ற எண்ணற்ற அரிய சொற்களைத் தான் படைத்த குறவஞ்சி நூலில் புகுத்தியுள்ளார் கவிராயர்.

சாஸ்திரியார் படைத்த பெத்லகேம் குறவஞ்சியில் ஆசிரியர் கையாளும் சொல்லாட்சியும் போற்றத்தக்க வகையில் அமைந்துள்ளது. கவிராயரைப் போன்று சாஸ்திரியாரும் பன்னிரெண்டு என்ற எண்ணை கொண்டு, பன்னிரண்டு தொடங்கி ஒன்று என்று இறங்கு முகமாக நிறைவு செய்யும் வகையில் தன் கவிதையில் ஆற்றும் சொல்லாட்சி நடை என்பது போற்றும் வகையில் உள்ளது என்பதை, இயேசு பன்னிரெண்டு அப்போஸ்தலரைத் தெரிந்து கொண்டு, அவர்களுள் பதினொன்று சீடர்கள் அடியார்களாகச் சென்று ஊழியம் செய்தனர் என்றும்; இயேசுவின் வருகைக்காகக் காத்திருந்த பத்துக் கன்னியரில், ஐந்து பேர் ஆயத்தமாக இருந்ததாகவும்; ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்டு உயிர்விட்டதாகவும்; நோவாவின் குடும்பத்தில்

எட்டுப் பேரை பாதுகாத்ததாகவும்; ஏழாம் நாளில் தேவன் இறை வேண்டலுக்காகக் காத்திருந்ததாகவும்; கானாவூர் கல்யாணத்தில் ஆறு கல்சாடிகளில் தண்ணீரை திராட்சை இரசமாக மாற்றியதாகவும்; சிலுவையில் அறையுண்டபோது ஐந்து காயங்களை ஏற்றதாகவும்; மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் என்ற நால்வர் நற்செய்தி நூல்களை எழுதியதாகவும்; பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்ற மூவுரு கடவுளாகவும்; திருமறையைப் பழைய, புதிய ஏற்பாடுகளாகப் பகுக்கப்பட்டதாகவும்; வேதநாயகன் ஒருவரே பெத்லகேம் குறவஞ்சி நூலை எழுதியதாகவும் நயம்படக் கூறுவதாகக் கீழ்க்காணும் பாடல் உணர்த்துகிறது.

“பன்னிரு அப்போஸ்தலர் தெரிந்து பதினொரு
தாசியி லும்போய்ப் பத்தைத் தந்து
மன்னும் ஒன்ப தினியிர்விட்டு எட்டுநரர்
காத்து ஏழ்மன் றாட்டு இட்டாறு
நன்னு குடம்ரச மாக்கி ஐங்காயம்
உற்றும் மறை நால்வர் தீட்ட
உன்னு திரித்து வவிரு வேற்பாட்டு
ஒருவன் குறவஞ்சி உரைத்தானே.”[239]

என்று கூறும் சாஸ்திரியாரின் சொல்லாட்சி போற்றும்வகையில் உள்ளது.

**சாஸ்திரியார் கையாண்டுள்ள சொல்லாட்சிகள்**

சாஸ்திரியார் பெத்லகேம் குறவஞ்சியில் கையாண்டுள்ள சொல்லாட்சிகளாக, நரர் (மனிதர்), மன் (நிலையான), படி (பூமி), கா (சோலை), உழன்று (அலைந்து), மறு (குற்றம்), மேவும் (அடையும்), மிஞ்சு (மிகுந்த), அறைகின்ற (கொல்லுகின்ற), அந்தி (குருடு), தவஞானம் (மிகுந்த அறிவு), மையல் (மயக்கம்), நவமீறும் (புதுமை மிகுந்த), முனிந்து (வெறுத்து), உத்தமர் (நன்மை செய்பவர்), பேதித்து (வேறுபடுத்தி), அர்ச்சயர் (ஆசாரியர்), ஆசற்ற (குற்றமில்லாத), சிட்டோர் (சீடர்கள்), கட்டாகம் (கட்டான உடல்), ஏதம்

[239] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.25.

(துன்பம்), ஆகம் (உடல்), மாகம் (ஆகாயம்), கணம் (கூட்டம்), பாலித்தவர் (காத்தவர்), மெய்பு (உண்மை), நாப்பு (ஏளனம்), சமர் (போர்), பதியாக (அரசனாக), கசடரை (கீழ்மக்களை), உக்கிரம் (கொடிய சினம்), தார் (மாலை), பரன் சுதன் (இறை மைந்தன்), மறி (கழுதை), ஊழி (உலக முடிவு நாள்), மகுணன் (பண்பில்லாதவன்), ஈடேற்றம் (முன்னேற்றம்), சீமான் (எல்லாச் செல்வங்களையும் உடையவன்), நித்திய (நிலையான), வாசலான் (சொல்வன்மையுடையவன்), அபிமானம் (பற்றுகியான்), சேயன் (மைந்தன்), பரம பதம் (மேலான நிலை), வித்தன் (புதுமையானவன்), அத்தன் (அழகன்), சந்தன் (அழகன்), பாவு (பாக்கள்), பத்திராசன் (ஆட்சி செய்பவன்), நாப்பண் (நடுவில்), வித்தானை (அறிஞனை), சாஸ்திரம் நூல்), சுத்தாங்கம் (தூய உறுப்பு), சயனம் (வெற்றி), அச்சயன் (இறைவன்), நெட்டு (நெடுந்தூரம்), தீட்சை (உபதேசம்), மட்டு (குறை), அட்ட (எட்டு), காத்திரம் (மிக உறுதி), கோத்திரம் (மரபு), நேத்திரம் (கண்), நிணம் (உடல்), திணத்தி (நெருக்கி), கணத்தில் (விரைவில்), இருடியர் (தீர்க்கர்), குத்திரம் (வஞ்சம்), துத்தியம் (புகழ்), சுந்தரம் (அழகு), பாலிருந்து (இடத்திலிருந்து), பூட்டி (அறிவுருத்தி), வன்பு (கடிதல்), இலக்கு (கணக்கு), தகைத்து (அழித்து), சுதன் (மகன்), கனிந்து (இரக்கம் காட்டி), அர்ச்சனை (மலர்தூவி வழிபடு), விருட்சம் (மரம்), பொற்புர (அழகுமிக) நிரவி (சமப்படுத்தி), முரட்டு (கொடிய), பாத்திரம் (தகுதி), அதிபன் (மன்னன்), கதலி (வாழை), நீதன் (நன்னெறியில் நடப்பவன்), குலாவி (கூடி மகிழ்ந்து), பரன் (இறைவன்), உய்ந்து (வாழ்ந்து), கேவரி (கழுதை), ஆர்க்கும் (ஆரவாரம் செய்யும்), மத்தர் (ஆணவமுள்ளோர்), அவத்தை (துன்பம்), பொங்கு (நிறைந்த), ஏழுகணம் (ஏழு விண்மீன் கூட்டம்), இலங்க (விளங்க), ஒமேகா (முடிவு), அல்பா (தொடக்கம்), கந்தம் (நறுமணம்), செம்மனசோர் (விந்தூதர்), சதுர் (ஆற்றல்), தும்மனசு (தீயமனம்), ரூபம் (வடிவம்), உசாவி (கேட்டு), சீலம் (நல்லொழுக்கம்), மாய (அழியக்கூடிய), ஓதும் (சிறப்பித்துக் கூறும்), இருடியர் (முனிவர்கள்), வரதா (வரம் தருபவர்), அமலர் (இறைவன்), புனல் (தண்ணீர்), விமலா

(தூய்மையானவரே), அரவு (பாம்பு), அலகை (பேய்), விடை (மாடு), பிசகு (குற்றம்), கதி (விண்ணுலகு), அருபத்து (உருவமில்லாமல்), இகல் (பகை), உதகம் (தண்ணீர்), இந்து (சந்திரன்), உந்தும் (ஒளிவீசும்), துந்தி (வயிறு), உந்தி (எழுப்பி), இண்டு (தொட்டு), கதியின் (நிலையின்), பூக்குள் (பூமிக்குள்), சட்டாய் (அகப்பயாய்), பொட்டு (பதர்), துப்பு (வலிமை), துட்டு (தீமை), சித்து (அறிவு), செப்பம் (நடுநிலை), சிக்கு (ஐயம்), பொற்பு (அழகு), இச்சு (நெருப்பு), கழல் (பாதம், கால்), வித்தம் (ஞானம்), சனிந்து (மறுபடியும்), திரித்துவம் (தந்தை, மைந்தன், தூயாவி), வினை (பாவச்செயல்), ஏட்ட (எட்டிப் பிடிக்க), பட்சம் (உருக்கம்), ஆலியும் (ஒலியும்), புங்கம் (உயர்ச்சி), தாதகி (அத்திமரம்), பயில்செய் (நடனமாடும்) இது போன்ற இன்னும் எண்ணிலடங்காத புதிய சொற்களைக் கையாண்டு பெத்லகேம் குறவஞ்சிக்கு புகழ்மாலை சூட்டியுள்ளார் சாஸ்திரியார்.

இதுபோன்ற கலைச் சொற்களை இவ்விரு கவிஞர்களும் தாம் படைத்த குறவஞ்சி நூல்களில் புகுத்தி சொற்சுவை பொருள்சுவைமிக்கக் கவிதை இரசத்தை கொடுத்துப் படிப்பவர்களை ஈர்த்துள்ளனர்.

**திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சிகளில் கவிஞர்களின் இசை நடை**

மனிதன் பேசத்தொடங்கிய நாள் முதல் ஆசைகள், அவலங்கள் யாவும் பாட்டாக எழுந்தன. பாட்டின் அடிப்படையே ஓசைதான். ஓசைதரும் இன்பம் உவமையில்லா இன்பம். மனித சமுதாயம் பாடுவதையும், ஆடுவதையும் மகிழ்ச்சியின் வெளிப்பாடாகக் கொண்டுள்ளது. பரந்த ஓசையுடையது பா. பாடுவோர் பண்ணமைத்துப் பாடும்போது பாட்டுத்தரும் இன்பம் எல்லையற்றதாக விளங்குகிறது.

பழந்தமிழில் இசை பற்றிய குறிப்புகளும் பல உள்ளன. இசை நுட்பங்களைப் பண், பாணர், யாழ், இசை, இசைக்கருவிகள், கூத்தர், விறலியர் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் செறிந்து காணப்படுகின்றன. திருக்குறளிலும் யாழ், குழல் பற்றிய குறிப்பும், பண்ணோடு இசைந்த பா பற்றிய

குறிப்புகளும் பல உள்ளன. சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றுக் காதை ஓர் இசைக் களஞ்சியமாகவே திகழ்கின்றது. ஆய்ச்சியர் குரவையும், குன்றக்குரவையும் இசை ஓவியங்கள், கானல்வரி, வேட்டுவவரி, அம்மானைவரி, கந்துகவரி போன்றவையும் சிலம்பில் இசையை முழக்கமிடுகின்றன. திருமுறைகளில் இசை புத்துருவம் பெறுகிறது. திருமுறை இயக்கமாய் வளர்ந்து நாளும் இன்னிசையாய்த் தமிழ் பரப்புகின்றது. தெய்வ உலா முழுவதும் திருமுறைப்பாடல், ஆடல் நெறிப்பாடல் என அருந்தமிழ் திருமுறைகளால் வளர்கிறது. அருணகிரியாரின் சந்தப்பாடல்கள், தாயுமானவரின் இசைப் பாடல்கள், வள்ளலாரின் இசைக் கோலங்கள், முத்துத் தாண்டவர், அருணாச்சலக் கவிராயர், வேதநாயகம் பிள்ளை முதலியவர்களின் இசைக் கீர்த்தனங்கள் தமிழ் இசை வளர்ச்சிக்குக் கட்டியம் கூறுகின்றன.

இயற்கையின் எழில் காட்சியை உற்று நோக்கிய ஆதிமனிதன், அவற்றைக் கண்டு இன்புற்றான். இயற்கையில் எழும் ஓசையைக் கேட்டு மகிழ்ந்தான். மலர்களில் மொய்த்த வண்டின் இன்னிசையையும், குயிலின் இனிய ஓசையையும், பிற பறவைகள் எழுப்பிய இனிய ஓசையையும், அருவிகள் எழுப்பும் ஆரவாரத்தின் ஆனந்தச் சத்தத்தையும், காற்றின் அசைவால் காட்டுமரங்கள் எழுப்பிய விழுமிய ஓசையையும் கேட்டு மகிழ்ந்தான்; திகைத்தான்; சிந்தித்தான்; தானும் ஏன் இவ்வண்டினைப்போல இசைத்து வாழ முடியாது என்பதை உணர்ந்தான்; நல்லிசை பிறந்தது.

**இசை செய்யும் மாயாசாலம்**

ஓர்பீயஸ் என்னும் கிரேக்கர் யாழை மீட்டியபோது கொடிய விலங்குகளும் அவ்விசையில் ஈடுபட்டன என்றும், பாறைகளும் நெகிழ்ந்தன என்றும் மேலை நாட்டுச் செய்திகள் கூறுகின்றன. அச்செய்தியை மிஞ்சும் அளவிற்கு நம் தமிழ் சங்க இலக்கியங்களில் பல்வேறு சான்றுகள் உள்ளன. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்ற பழமொழிக்கு ஏற்ப, தமிழ் மொழியில் வரும் இசை

வளத்திற்குச் சான்றாக எண்ணிலடங்காத சான்றுகளைக் குறிப்பிடலாம், எனினும் சில குறிப்புகளைக் விளக்கப் படுகிறது..

மதங்கொண்ட யானையும் யாழ் இசைக்கு மயங்கி அடங்கி நிற்பதாக சங்க இலக்கியத்தில், கலித்தொகையில்

கலித்தொகை "காழ்வரை நில்லா கடுங்களிற்று
ஒருத்தல் யாழ்வரை தங்கியங்கு"[240] (கலி,2, 26 - 27)

என்ற பாடல் பாடல் வரிகளாலும், மலைச் சாரலில் திணைப் பயிரை மேயவந்த காட்டு யானையை, அக்குறிஞ்சி நிலத்தில் வாழும் குறத்தியானவள், யானையை விரட்டுவதற்காக, அழகான குறிஞ்சிப் பண்ணை இசைக்க, அதைக் கேட்டு மெய் மறந்த யானை பயிரைச் சாப்பிடாமல் மறந்து நிற்பதாகக் கீழ்வரும் பாடல் விளக்குகிறது.

"ஒலியல் வார் அயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்
குரலும் கொள்ளாது நிலையிலும் பெயராது
படாஅ பைங்கண் பாடுபெற்று ஒய்யென
மறம்புகல் மழகளிறு உறங்கும்"[241] (அகம்.102)

மேலும், செந்நாய்க்கு அஞ்சிய கலைமான் இன்னிசைக் கேட்டு அச்சம் நீங்குவதாக அகநானூறுப் பாடல் விளக்குவதாக,

"செந்நாய் வெரீ, புகார்உழை ஒருத்தல்
போரி அரை விளவின் புண்புற விளை பூசல்
ஆழல் எறிகொடை தூக்களின் கோவலர்
குழல் என நினையும் நீர்இல் நீர்இடை"[242]

---

[240] . புலியூர் கேசிகன் தெளிவுரை, கலித்தொகை, ப.36.

[241] . புலியூர் கேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப. 92.

[242] . புலியூர் கேசிகன் தெளிவுரை, அகநானூறு, ப.113.

என்று செந்நாய்க்கு அஞ்சிய கலைமான், விளாம்பழம் ஓட்டின் துளை வழியே வரும் வெப்பமான காற்று, இனிய ஓசையோடு வருவதைக் கேட்கிறது. அவ்வோசையானது கோவலரின் குழலோசை என்றே கருதி அச்சம் நீங்கி நிற்பதாகக் கயமனார் கூறுகின்றார்.

செருக்கு மிகுந்த இராவணன் கைலை மலையைத் தூக்கிக் கைநைந்து போக, பிறகு சாமகானம் பாடி இரக்கம் பெற்ற கதையும், அகத்தியர் யாழை மீட்ட, அரக்கனின் உள்ளம் உருகிய கதையும், கண்ணனின் குழலிசையில் மயங்கிய மாடுகள் தங்களின் மேய்தல் தொழிலை மறந்து விடுவதாகவும், கொடிய விலங்குகளும் அவனது இசையில் ஈடுபட்டு அப்படியே நின்றுவிட்டதாகவும், கள்வரும் இசையின் இனிமையால் தம் தொழிலைச் செய்யாது மயங்கி விடுவதாகவும்,

> "ஆறலை கள்வன் படைவிட வருளினன்
> மாறுதலைப் பெயர்க்கும் மருவின் பாலை"[243]
>
> (பொருந, பா.வரி.எண்.21 -22)

என்ற பொருநராற்றுப்படை பாடல்வரிகள், வழிப்பறி செய்யும் ஆறலைக்கள்வன் தம்முடைய படைகளைக் கைவிடுப்படியாக அவர்களிடமிருந்த கொடுமையை மாற்றுகின்ற சக்தியாக கேட்பதற்கினிய பாலைப்பண் விளங்குவதாகக் கூறப்படுகிறது.

தமிழை முத்தமிழாகப் பிரித்த தமிழன் இசையை நடுநாயகமாக இயற்தமிழுக்கும் நாடகத்தமிழுக்கும் இடையே அமைத்தான் என்பதிலிருந்தே அதன் சிறப்பினை அறியலாம். அந்தவகையில் கவிராயரும் சாஸ்திரியாரும் குறவஞ்சி நூல்களில் இசைப்பாடல்களை எவ்வாறு கையாண்டுள்ளார்கள் என்பதைப் பற்றியும், அவர்களின் இசைப் புலமைப் பற்றியும் விரிவாக விளக்கப் படுகிறது.

---

[243] . கதி.முருகேசன், சங்க இலக்கியம் பத்துப் பாட்டு மூலமும் உரையும், ப.40

குறவஞ்சியானவள் நாட்டுப்புறத்தாள் இல்லை. அவள் காட்டுப் புறத்தாள். அவளது வாழ்வோடும் உணர்வோடும், இணைந்து பிணைந்து தன்னை இணைத்துக் கொண்ட கவிராயர், தாம் இயற்றிய பாடல்களில் பீடும், பெருமையும், உருக்கமும், இசைப்பெருக்கமும் சிறந்து விளங்குவதைக் குறவஞ்சி வாயிலாக, குறி சொல்லும் பாங்கினை தன் இசை வளத்தின் மூலம் 'அடணா' தாளத்தில் பாடுகின்றார் இப்படியாக,

> "என்னகுறி யாகிலும்நான் சொல்லுவேன் அம்மே – சதுர்
> ஏறுவேன் எதிர்த்தபேரை வெல்லுவேன் அம்மே!
> மன்னவர்கள் மெச்சுமொரு வஞ்சிநான் அம்மே – என்றன்
> வியிற்றுக்கு இத்தனை போதும் கஞ்சிவார் அம்மே!
> பின்னமின்றிக் கூழெனினும் கொண்டுவாஅம்மே – வந்தால்
> பெரிய குடுக்கை முட்ட மண்டுவேன் அம்மே!
> தின்ன இலையும் பிளவும் அள்ளித்தா அம்மே – கப்பல்
> சீனச்சரக்குத் துக்கிணி கிள்ளித்தா அம்மே!
> அம்மேயம்மே சொல்லவாராய் வெள்ளச்சி அம்மே – உனக்கு
> ஆக்கம் வருகுதுபார் வெள்ளச்சி அம்மே!
> விம்முமுலை கன்னி சொன்ன பேச்சு நன்றம்மே – நேரே
> மேற்புறத்தில் ஆந்தையிட்ட வீச்சு நன்றம்மே!
> தும்மலும் காகமும் இடம் சொல்லுது அம்மே – சரம்
> சூட்சமாகப் பூரணத்தை வெல்லுதே அம்மே!
> செம்மையிது நல்நிமித்தம் கண்டுபார் அம்மே – திரி
> கூடமலை தெய்வமுனக் குண்டுகாண் அம்மே!"[244]

என்ற பாடல்வரிகள் கவிராயரின் இசை வளத்திற்குச் சான்றாக அமைகின்றன.

[244] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, பக் 98 -99.

சாஸ்திரியாரை இசைக் கலைஞர் என்றே கூறுவது சிறந்ததாகும். ஏனென்றால் அவரது கீர்த்தனைகள் பெரும்பாலும் கிறிஸ்தவ வழிபாட்டிற்கு உகந்ததாகவே உள்ளன. அவரது படைப்புகளில் சில முற்றிலும் இசைப் பாடல்களாகவே அமைந்துள்ளன. இன்னிசைப் பாடல் வழியாகவே அவரது நற்செய்தி இருந்தமையால், சாஸ்திரியாரின் படைப்புகள் பலவற்றிலும் இசை இழையோடுகிறது. அதில் பெத்லகேம் குறவஞ்சி முற்றிலும் இசைப்பாடலாகவும், கீர்த்தனை நாடகங்களாகவும் இருக்கின்றன. பெத்லகேம் குறவஞ்சியில் காணப்படும் தருக்கள் இருபத்து மூன்றும்; ஒரு தோடையமும்; இருபத்தொன்பது சிந்துப் பாடல்களும், பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் ஆகியவற்றைக் கொண்ட இசைப் பாடல்களாக உள்ளன. கவிராயரைப் போலவே சாஸ்திரியாரும், குறத்திக் குறிச் சொல்லும் பாங்கினைத் தனது இசை வளத்தால்,

"வந்தகுறி யேதெனினும் கண்டுகொள்ளம்மே, எந்தன்,
மனதுக்கு ஏற்கநீ நடந்துகொள்ளம்மே,
முந்தினப லனிற்பத்தி லொன்றுவையம்மே, சற்று,
மோசமட ராப்படிக்கு நன்று செய்யம்மே,
சந்தகமில் லாமற்குறி சொல்லுவேனம்மே! பல,
சாஸ்திரிக ளோடெதிர்த்து வெல்லுவேனம்மே,
சேசுநாதர் பாதமதே தஞ்சமாமம்மே."[245]

என்று இனிமையாகக் கூறுகிறார். மேலும் பெத்லகேம் மலையின் வளத்தைக் கூறவரும் சாஸ்திரியார், இயேசுநாதர் அவதரித்த பெத்லகேமின் சிறப்பை தனது நல்லிசைப் புலமையால்,

"தினதேந்தினத் தினதேந்தினத் தினதேந்தினத் தினனா,
தெந்தேந்தினத் தெந்தேந்தினத் தெனதேந்தினத் தினனா.

[245]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப. 227..

ஆதிமலையெங்களுக்கோ ஏதன்மலையம்மே,

ஆண்டவனா ரெங்களைத்தா னமைத்தமலையம்மே,

நீதியென்றநால்வரமும் கொடுத்தமலையம்மே,

நித்தியமும் சாகாமல் நின்றமலையம்மே,

சாதனையாய்ப் பேய்பிறகு கெடுத்தமலையம்மே,

தற்பரனா ரெம்மையங்கே சபித்தமலையம்மே,

பேதகமாய் நாங்களதை விட்டதற்பின்னம்மே,

பெத்லகே மெங்களுக்குப் பெரியமலையம்மே”[246]

என்று நல்லிசை நல்கப் பாடுகின்றார்.

**கற்பனை நடை**

கற்பனை என்பது மனிதன் தேடிப்போகும் பொருளன்று. இயற்கையாகக் குழந்தைப் பருவத்திலேயே அமைந்துள்ள அழகு போன்றது. “குழந்தைப் பருவத்தின் அழகு வளர வளர பெருப்பான்மையருக்குக் கற்பனையும் குழந்தைப்பருவத்தில் மிகுதியாக இருந்து பிறகு அறிவு வளர வளரக் குறைந்து போவதுண்டு. ஆயினும் ஒரு சிலர் உடல் வளர வளர அழகையும் காத்துக்கொண்டு என்றும் அழகு நிரம்பியவராய் விளங்குதல் போலக் கலைஞர் வளர்ந்தப் பிறகும் கற்பனை நீங்காதவராய் விளங்குகின்றார்.”[247] என்கிறார் எப்.சி.பிரெஸ்காட்.

படைப்பாளர் தம் இலக்கியங்களை உணர்ச்சிப் பெருக்குடையனவனாக அமைப்பதற்கு மேற்கொள்ளப்படும் உத்தியே கற்பனையாகும். இவை எளிதில் விளக்க முடியாத ஒன்றாகும். வின்செஸ்ட் என்பார் கற்பனையைப் படைப்பாளர், படிப்போர் முன் தன் அனுபவத்தைப் படைத்துக் காட்டும் திறமே கற்பனை என விளக்குகிறார்.

---

[246] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, பக் 167-168.
[247] . F.C. Prescott. The Poetic Mind, P.54.

கவிதையில் கற்பனை என்பது தவிக்க முடியாத ஒன்றாகும். கற்பனை இல்லாத படைப்பு வறட்டுத் தன்மையானதாகும். கற்பனை என்பது அனுபவங்களைப் பொதுமைப்படுத்தும் கருவி மட்டுமன்றி, கவிஞரின் அறிவைப் புலப்படுத்தும் அழகுணர்ச்சி சம்மந்தமான படிமங்களுக்கு உயிரூட்டும் உந்து சக்தியாக கற்பனையாற்றல் விளங்குகிறது. கற்பனையாவது, கவிஞர் தாம் உணர்ந்த உணர்சியையோ அல்லது பெற்ற முருகியல் அனுபவத்தையோ அல்லது கண்ட காட்சியையோ, நாமும் முழுமையாகவும் தெளிவாகவும் உணர்ந்தோ, அனுபவித்தோ பார்த்தோ இன்புறுமாறு அமைத்துக் காட்டும் அறிய கலைத் திறனாகும். இக்கற்பனையானது கவிதையில் ஓர் அடிப்படையான மனநிலையாக, எண்ண ஆற்றலாக அமைவதும் உண்டு; அல்லது அணியாக நின்று அழகு தருவதுமுண்டு. குறவஞ்சி நூல்களில் கற்பனையின் இவ்வகையான நிலைகளைக் காணமுடிகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் கற்பனை நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சியில் பாடல் முழுவதும் கருத்துச் செறிவோடு அழகிய இயல்பான கற்பனைத்திறன் பெற்று பின்னாள் எழுந்த குறவஞ்சிகளுக்கெல்லாம் வழிகாட்டிய பெருமை, திருக்குற்றாலக் குறவஞ்சிக்கு உண்டு. அவ்வாறு சிறப்புற்று விளங்கும் பாடல் சிலவற்றில் கவிராயரின் கற்பனைத் திறனை விளக்கப் படுகிறது. குற்றால மலையின் சிறப்பைக் கூறும் கவிராயர், ஆர்பரித்துப் பொங்கும் அருவியின் குறும்பானது, குற்றாலத்து மலையில் வாழும் குரங்குகள் செய்யும் குறும்பைப்போல அட்டகாசம் செய்வதாகக் கூறுகின்றார். திம் திம் என விழும் அருவியின் நீரை பெண்கள் சேர்ந்து வட்டமாக ஆடும் அம்மானை ஆடுகின்ற மாதிரியே இருப்பதாகவும்; ஆற்பரிக்கும் அருவியின் நீரானது, கழங்காடுவது போன்று முத்துக்களையெல்லாம் சிதறிச் செல்வதாகவும்; அவ்வாறு பொங்கி அவ்வருவியானது சிறுவர்கள் முற்றத்தில் கட்டி விளையாடும் மணல் வீடுகளையெல்லாம் குறி வைத்தே அடித்துச் செல்வதாகவும்; பருத்த யானையின் கொம்புகளை ஒடித்து வறுத்த தினைகளை இடிப்பதாகவும்; நன்றாகத் தின்று

சளித்த குரங்குகள் மாமரத்தின் பழங்களைப் பறித்துப் பந்தாடி விளையாடுவதாகவும் தன் கற்பனை வளத்தால் கவிராயர்,

> "முழங்குதிரைப் புனலருவி கழங்கென முத்தாடும்
> முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக் கொண்டோடும்
> கிழங்குகிள்ளித் தேனெடுத்து வனம்பாடி நடிப்போம்
> கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்
> செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
> தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
> வழங்குகொடை மகராசர் குறும்பலவில் ஈசர்
> வளம்பெருகும் திரிகூட மலைஎங்கள் மலையே."[248]

என்று புகழ்ந்து கூறுகின்றார். வசந்தவல்லியின் இடுப்பின் அழகைக் கூறும் கவிராயர், உடுக்கையின் நடுப்பகுதிப் போன்று ஒரு பிடிக்குள் அமைந்திருப்தாக, 'துடிக்குள் அடங்கிஒரு பிடிக்குள் அடங்கும் சின்ன இடையினாள்' என்று கற்பனைத் திறத்தால் புகழ்ந்து கூறுகின்றார். தலைவியின் அழகை வருணிக்கும் கவிராயர்,

> "கச்சுக் கிடக்கினும் தித்திச்சுக்
> கிடக்கும்இரு கொங்கையாள்"[249]

என்றும், வசந்தவல்லி காமநோயால் கட்டுக்கடங்காத துன்பத்தால் உழலுகின்ற தலைவியின் நிலையைக் கவிராயர்,

> "கூனைகொண் டமிழ்த்துவார் போல்
> குளிர்ச்சியால் வெதுப்பு வாரே"[250]

எனக் கூறுகிறார். இங்கு 'கூனை' என்பது கிணற்றிலிருந்து நீரை இறைப்பதற்குப் பயன்படும் பானை போன்ற கலம் ஆகும். நீர் நிறைந்த கிணற்றில் அதனை என்னும் அமைப்பால் அழுத்தியே நீரைக் கோதும் காட்சியை விவசாயம்

---

[248] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப. 77.
[249] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப. 31.
[250] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப. 30.

நடைபெறும் தோட்டங்களில் காணலாம். ஊர் புறங்களில் அக்காலத்தில் காணப்பட்ட அக்காட்சியை, தோழியர்களின் செயலோடு இணைத்துக் காட்டுகிறார் கவிராயர். தனது பாடல் முழுவதும் கற்பனை நயத்தைப் புகுத்திப் படிப்போர்யாவரையும் தன்வயப்படுத்தும் அற்புத இலக்கியமாகத் திருக்குற்றாலக் குறவஞ்சி சிறந்து விளங்குகின்றது.

**பெத்லகேம் குறவஞ்சியில் கற்பனை நடை**

சாஸ்திரியாரின் பெத்லகேம் குறவஞ்சியிலும் கற்பனை நயமிக்கப் பாடல்கள் கண்கொள்ளாக் காட்சியாக நிறைந்து காணப்படுகின்றன. சந்திரனானது தேய்வதும் பின்னர் வளர்வதும் இயற்கையாக நிகழக்கூடிய ஒன்றாகும். ஆனால் சாஸ்தியார் தன் கற்பனை வளத்தால் வெண்ணிலா, தேய்வதை அதனுடைய அகந்தையால்தான் தேய்ந்து வருவதாகக் கூறுவது சாஸ்திரியாரின் கற்பனையாற்றலைப் போற்றும்படியாக உள்ளதை,

> “சந்திர னென்று துள்ளாதே வெண்ணி லாவே! என்
> தாசியினால் மிதக்க செய்வேன் வெண்ணி லாவே!
> இந்த உலக மயக்கை வெண்னி லாவே! நீ
> என்று விடடொழியப் போறாய் வெண்னி லாவே!
> நந்திய களங்க மொன்று வெண்னி லாவே! உன்
> நடுவில் இருக்கு தல்லோ வெண்னி லாவே!
> சிந்தை கருவம் கொண்டதால் வெண்னி லாவே! நீ
> தேய்ந்து குறைந்து போனாய் வெண்னி லாவே!”[251]

என்று கூறுவதிலிருந்து பெத்லகேம் குறவஞ்சியின் கற்பனை வளத்தினை அறிய முடிகிறது.

**கருத்து நடை**

கலைஞர்கள் தாம் கூற விரும்பும் கருத்துக்களை வெவ்வேறு வகையில் வெளிப்படுத்துகின்றனர். ஓவியன் தான் சொல்ல வந்த கருத்தினை அழகான

---

[251] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.114.

அவ்வோயியத்தினுள் வைத்து சொல்லிவிடுகின்றான். இசைக் கலைஞன் தான் நினைத்த கருத்தினை அழகாக இசைக்கருவியின் வாயிலாக சொல்லிவிடுகின்றான். ஒரு சிற்பி தன் மனதில் உள்ள கருத்தை சிற்பமாக செதுக்கி சொல்லிவிடுகின்றான். குறி பார்ப்பவன் தன்னிடம் வருபவரின் மனதினைப் புரிந்து கொண்டு, அதற்கேற்றக் கருத்தினை அழகாகச் சொல்லிவிடுகின்றான். நாடகக் கலைஞன் தனது நடிப்பின் மூலமாகத் தான் நினைத்த கருத்தினை அழகாகக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகின்றான். பாடகன் தன்னுடைய கருத்துக்களை அழகான வளமான குரலின் மூலமாகச் சேர்த்து விடுகின்றான். ஒரு கவிஞன் தன் மனதில் பொங்கி எழுந்த கருத்தை, உணர்வை தன்னுடைய கற்பனைத் திறத்தால் செதுக்கி அழகான கவிதையாக உருவாக்கி, அக்கவிதைக்கு உயிர் கொடுத்து விடுகின்றான்.

அவ்வகையில் திரிகூட ராசப்பக் கவிராயரும், தஞ்சை வேத நாயக சாஸ்திரியாரும் தாங்கள் படைத்த குறவஞ்சி நூல்களில் தாங்கள் கூற நினைத்த கருத்தினை அழகுமிகுந்த சொல்லாற்றலால் செதுக்கியுள்ளதைப் பற்றி விரிவாக விளக்கப் படுகிறது.

**கவிராயரின் கருத்து நடை**

தொடக்கம் முதல் இறுதி வரையிலும் தனது பாடல் முழுவதும் எத்தனையோ கருத்துக்களைக் கவிராயர் சொல்லியிருந்தாலும், பாடலின் இறுதியிலே கவிராயர் குற்றாலத்தின் சிறப்பை; அப்பாடல் உணார்த்தும் கருத்தை; நான்கே வரிகளில் கூறுவது அவரது நூலுக்கு அழகு சேர்ப்பதாக அமைவதை கீழ்வரும் பாடல் வரிகள் மூலம் அறியலாம்.

> "சுற்றாத ஊர்தோறும் சுற்றவேண் டாம் புலவீர்
> குற்றாலம் என்றொருகால் கூறினால் – வற்றா
> வடவருவி யானே மறுபிறவிச் சேற்றில்
> நடவருவி யானே நமை"[252]

[252]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப. 171.

என்று கூறும் கவிராயர், புலவர்களே நீங்கள் ஊர் ஊராகக் கோவிலுக்குச் சென்று சுற்ற வேண்டாம். ‘குற்றாலம்’ என்று ஒறு முறை சொன்னாலே போதும், வற்றாத வடவருவியை உடையவரான குற்றால ஈசன், மறுபிறவிச் சேற்றில் விழாமல் நம்மை சொர்க்க உலகத்தில் சேர்த்திடுவதாகக் கூறும் கருத்து இந்நூலைப் படிப்பவர்களுக்குச் சிறந்த அறிவுரையாக அமைகிறது.

**சாஸ்திரியாரின் கருத்து நடை**

இயேசுநாதரின் போதனைகளைக் கருத்தாய்க் கொண்டு எழுதப்பட்டதே பெத்லகேம் குறவஞ்சியாகும். சாஸ்திரியார் இக்குறவஞ்சியில் பல்வேறு கருத்துக்களைக் கூறியிருந்தாலும், குறிப்பிட்ட சில பாடல்களில் உள்ள கருத்துக்களை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வோம். நல்லவர்களுக்குக் கர்த்தர் நல்ல பலனைத் தந்து காப்பாற்றுபவராகவும்; நல்லவர்கள் அல்லாத விரியன் பாம்புக் குட்டிகளைப் போன்றவர்களைக் கடிந்து கொள்பவராகவும் இருப்பதாகவும்; மனந்திரும்பி இயேசுவை ஏற்றுக் கொண்டு அவரது வழியிலே நடப்பவர்களை நன்மை தரக்கூடிய கனிகளுக்கு ஒப்பாகவும்; இயேசுவை ஏற்றுக் கொண்டு அவர் காட்டிய வழியில் நடவாதவர்களைக் கனிதராத மரத்திற்கு ஒப்பாகவும் கருதி, அந்த மரத்தை வெட்டி வீழ்த்தி மூண்டு எரியும் தழலிலே விழச் செய்வதாகவும்; பயங்கரமான துன்பங்களை மேல் வரச் செய்து இறுதியிலே அவர்களைச் சுட்டெரித்து விடுவதாக எச்சரிக்கையான கருத்தை,

> “பலன் தந்து நல்லோருக்கு அன்பூட்டி, விரியன்
> பாம்புக்குட் டிகளுக்கு வன்பு காட்டி
> நலம்தரும் கனிவிருட் சத்தை நாட்டிக், கனி
> நல்காத விருட்சத்தை வெட்டிவாட்டி.
>
> வெட்டியே அக்கினிச் சுவாலையில் இட்டுக்கொடும்
> வேதனை வாதைகளை மேல்வரவிட்டுச்
> சுட்டெரித்துப் போடுவார்”[253]

---

[253]. சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 47.

என்ற வரிகள் மூலம் விளக்குகிறார். மேலும் கவிராயரின் வழியிலே சாஸ்திரியாரும் பாடலின் வாழ்த்துதலாகக் கூறும் அறிவுரைக் கருத்தும் சிறந்து விளங்குவதை,

> "ஊரெங்கும் ஓடி உலைவதேன் பெத்தலேகம்,
> சீரேசு நாதரைநாம் சேர்ந்தக்கால், தீருமே,
> பாவம் பிணிநோய் பசாசு நர கம்மரணம்,
> பாவலரே பாடிமகிழ் வோம்"[254]

என்று சாஸ்தியார் பெத்லகேமில் பிறந்த சீர் மிகுந்த இயேசு நாதர் இருக்க, ஊர் ஊராகப் போய் எங்கும் சுற்ற வேண்டாம்; அவரிடம் தஞ்சம் என்று வந்தால் நம்முடைய பாவம் யாவையும் போக்கி, பிணி என்னும் கொடிய நோய் அண்டாமல் காத்திடுவார் என்னும் நற்கருத்தைக் கூறுவது சாஸ்திரியாரின் கருத்து நடைக்குத் தக்க சான்றாக அமைகின்றது.

**காட்சி நடை**

கவிஞனின், கலைஞனின் உள்ளத்தைத் தொட்ட அல்லது மனதைப் பாதித்த நிகழ்வைத் தன்னுடைய கற்பனைத் திறத்தால், வருணனையால், அழகான சொல்லாட்சி கொண்டு அவற்றிற்கு உயிரோட்டம் கொடுக்கும் வகையில், செந்தமிழில் சீரெடுத்து, நற்றமிழில் நல்ல நடை அமைத்து, பார்ப்போரைப் பரவசப்படுத்தும் வகையில் அழகுபடக் கூறுவது காட்சி நடை ஆகும்.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் காட்சி நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சி நாட்டிய நாடகத்தில் கவிராயர், முக்கியமான காட்சியாக பதினோரு வகையான காட்சிகளை அறிமுகப்படுத்துகின்றார். அவை கட்டியங்காரன் காட்சி, இறைவன் உலா வரும் காட்சி, வசந்தவல்லி பந்து பயிலும் காட்சி, நிலவைப் பலிக்கும் காட்சி, தூது சொல்லும் காட்சி, குறி சொல்லும் காட்சி, குறவர்களின் வாழ்க்கை முறைகள், நூவன் பறவைகளைப் பிடிக்கும் காட்சி,

---

[254] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.396.

சிங்கியைத் தேடும் காட்சி, சிங்கன் சிங்கி சந்திக்கும் காட்சி நிறைவாகச் சிங்கன் சிங்கி இறைவனை வழிபடும் காட்சி என பல்வேறு காட்சிகளை அறிமுகம் செய்கின்றார். 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்ற பழமொழிக் கேற்ப, அவற்றுள் குறவர்களின் வாழ்க்கை முறைகளை உணர்த்தும் காட்சியைத் தனது சொல் நயத்தால் சுவைபடக் கூறுவதை விளக்கப் படுகிறது.

குறவஞ்சியின் உறவினர்கள் வாழும் மலைகளை எடுத்தியம்பும் கவிராயர், அம்மலையின் காட்சியை, அழகை, சிறப்பை நேரிலே பார்ப்பது போல அழகுத் தமிழில் அடுக்கிக் கூறுவது சிறப்பு வாய்ந்தாக அமைகிறது. குறவஞ்சி வாயிலாகத் தனது குலத்தைச் சார்ந்தவர்கள் வாழும் மலைகளாக, எனக்கு இளையவளான செல்லி வாழும் மலை கொல்லி மலை என்றும்; எனது கணவனுக்குக் காணியாட்சியாக உள்ள மலை பழனி மலை என்றும்; சூரியன் உலாவுகின்ற விந்திய மலையானது எனது தந்தைக்குரிய மலை என்றும்; வானலாவிய இமயமலை எனது தமையனுக்கு உரிய மலை என்றும்; சொல்வதற்கே அருமையான சுவாமி மலை எனது மாமிக்குரிய மலை என்றும்; நாஞ்சில் நாட்டிலுள்ள வேள்விமலை எனது தோழிக்குரிய மலை என்றும் தனது உறவினர்கள் வாழும் மலைகளைப் பற்றி கூறுவது அம்மலையின் சிறப்பை நேரிலே பார்ப்பது போன்ற காட்சியை உருவாக்குகிறது.

தனது தொழில் முறைகளையும், உணவு முறைகளைக் குறவஞ்சி வாயிலாகச் சொல் நயத்துடன் விளக்கும் கவிராயர்,

> "கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
> கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்"[255]

என்று கூறும் கவிராயர், கிழங்குகளைத் தோண்டி எடுப்பதும்; தேன் இறால்களை எடுப்பதும்; மலை வளங்களைப் பாடி நடனமாடுவதும்; யானையின் கொம்புகளை ஒடித்து அதினால் வறுத்த தினைகளை இடித்து உண்பதாகவும் கூறுவது சிறப்பு வாய்ந்ததாகிறது. மேலும் தங்களுடைய வாழ்க்கை முறைகளைக் குறவஞ்சி

---

[255] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.77.

வாயிலாகக் கவிராயர், எங்கள் குலத்தைத் தவிர வேறொரு குலத்தில் பெண்கள் கொடுக்கவும் மாட்டோம், எடுக்கவும் மாட்டோம் என்றும்; குறவர்கள் குலத்தைச் சேர்ந்தவர்களாக நாங்கள் எங்களிடம் உறவு கொண்டவரை எந்நாளும் விட்டுப் பிரிய மாட்டோம் என்றும்; எங்களிடம் அச்சம் கொல்லும் வகையில் தினைப்புனத்திற்கு வருகின்ற பெரிய யானை முதலிய விலங்குகளை விலக்கி, வெற்றிக் கொண்டு, வேங்கை மரமாக நின்று எங்களைப் பாதுகாத்த அருளாளரான இலஞ்சியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானுக்கு முன்பு ஒரு பெண்ணைக் கொடுத்து அதற்காக, எங்களுக்கு உரிய மலைகளையெல்லாம் சீதனமாகக் கொடுத்ததாகவும்,

> "ஒருகுலத்தில் பெண்கள்கொடோம் ஒருகுலத்தில் கொள்வோம்
> உறவுபிடித் தாலும்விடோம் குறவர்குலம் நாங்கள்
> வெருவிவரும் தினைப்புனத்தில் பெருமிருகம் விலக்கி
> வேங்கையாய் வெயில்மறைத்த பாங்குதனைக் குறித்தே
> அருள்இலஞ்சி வேலர்தமக்கொரு பெண்ணைக் கொடுத்தோம்
> ஆதினத்து மலைகளெல்லாம் சீதனமாகக் கொடுத்தோம்"[256]

என்று நயமிக்கச் சொல்லாற்றலால் குறவர்களின் வாழ்க்கை முறைகளைக் காட்சியாக அமைத்துக் காட்டுவது சிறப்புக்குரியதாகிறது.

**பெத்லகேம் குறவஞ்சியில் காட்சி நடை**

பெத்லகேம் குறவஞ்சியில் சாஸ்திரியார் காட்டும் காட்சி நடை என்பது வியக்கத்தக்க வகையில் உள்ளதாக இருக்கிறது. பெயர்தான் பெத்லகேம் குறவஞ்சி ஆனால் உண்மையில் தமிழகத்தில் வாழும் குறவர்களாகவே தம் மனதில் வைத்துப் போற்றி, அதில் திருமறைக் கருத்துக்களைப் புகுத்தி, அவர்களின் வாழ்க்கை முறைகளை எடுத்தியம்புவது போற்றுதலுக்குரியதாகிறது.

பெத்லகேம் குறவஞ்சியில், திருமறையில் கூறும் திருச்சபை மக்களைக் குறவர்களாகவே உருவகப் படுத்தி, வாழ்ந்த பல்வேறு மலைகளான ஏதேன் மலை, ஆரியனாராத்து மலை, மோரியா மலை, மேரியா மலை, சீனாய் மலை,

---

[256] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.80.

ஓரேப்பு மலை, பிஸ்காவின் கொடுமுடி, மோவாப் மலை, எர்மோன் மலை, கித்காத்து மலை, ஏபாலில், கெர்சிம் மலை, கர்மேல் மலை, லீபனோன் மலை, சேயீரின் மலை, கீழேயாத் மலை, ஆகிலா மற்றும் அதுல்லாம் மலை, எப்பிராயீம் மலை, ஒலிவ மலை, காபோர் மலை, கொல்கதா மலை, சீயோன் மலை, பெத்லகேம் மலை, எருசலேம் மலை போன்ற மலைகளையும், அவற்றின் சிறப்புகளையும் அடுக்குக்கடுக்காக அடுக்கிக் காட்சிப் படுத்துவது போற்றுதலுக்குரிய வகையில் இருக்கிறது.

மேலும் குறவர்களின் பெருமைகளையும், வாழ்க்கை முறைகளையும் பற்றிக் கூறும் சாஸ்திரியார்,

"எங்கள்குலம் ஞானமிகுங் குறவர்குலமம்மே,
எங்களுக்குச் சரிகுலங்க ளெங்குமில்லையம்மே,
பின்குலத்திற் பெண்கள்கொடோம் பெண்களையும் கொள்ளோம்,
பேசுதற்கிங் கெங்கள்குலம் ராசர்குலமம்மே,
மங்களஞ்சேர் தீட்சைபெற்றோர் கெங்கள்பெண்ணைக் கொடுப்போம்,
மாறாட்டக் காரருக்கு வீறாப்பாய்த்திரிவோம்,
புங்கமுடன் கிறிஸ்தவர்க்கு மலைகளெல்லாங் கொடுப்போம்,
புகழ்பெறுபெத் லேகமெங்கள் புதுமைமலையம்மே."[257]

என்று விளக்குகிறார். பெத்லகேம் குறவஞ்சி மேலும் தனது குலமானது அறிவு நிறைந்த குலமாகவும்; எங்கள் குலத்திற்குச் சமமான குலம் வேறு எங்கும் இல்லை என்றும்; எங்கள் குலத்தைத் தவிர்த்து தாழ்ந்த குலத்தில் பெண் கொடுக்கவும் மாட்டோம், பெண் எடுக்கவும் மாட்டோம் என்றும்; எங்கள் குலமானது போற்றுதற்குரிய அரச குலமாகும் என்றும்; நன்மை மிகுந்த தீட்சைப் பெற்றவர்களுக்கு மட்டுமே எங்கள் பெண்களைக் கொடுப்போம் என்றும்; எங்களுக்கு மாறுபட்டவர்களிடத்தில் மேன்மையாய் நடந்து கொள்வோம் என்றும்; உயர்வான கிறிஸ்தவர்களுக்கு எல்லா மலைகளையும் கொடுப்போம்

[257] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.173.

என்றும்; புகழ்பெற்ற பெத்லகேம் மலை எங்களுக்குப் புதுமையான மலை என்றும்; பெண்ணாகிய ஏவாளைத் தந்திரமாகப் பாம்பாகிய பேய் வென்ற ஏதேன் மலைதான், மேலானவரின் பெயரை வைத்துக் கொண்டு ஒழுக்கம் கெட்டவள் ஆனாள் என்றும் இதன் காரணமாக அறிவே வடிவான சீயோன் மகளைத் திருமணம் செய்து முடிக்கக் கொடுத்தோம் என்றும்; உறுதியுடன் புதிய எருசலேம் மலையையும் மற்றும் நாட்டிலுள்ள மலைகளையெல்லாம் சீர் வரிசையாகக் கொடுத்தோம் என்றும் குறவஞ்சி வாயிலாகச் சாஸ்திரியார் குறவர் இன மக்களின் வாழ்க்கை முறைகளை எடுத்தியம்புவது சிறப்புக்குரியதாகிறது.

**அழகு நடை**

அழகு என்பது ஒவ்வொருவரின் ரசனைக்கேற்ப மாறுபடும். மலையின் தோற்றத்தைக் கண்ட பாவேந்தரின் எண்ணவோட்டமானது மலையை,

“அருவிகள் வயிரத் தொங்கல்!
அடர்கொடி பச்சைப் பட்டே!
குருவிகள் தங்கக் கட்டி!
குளிர்மலர் மணியின் குப்பை!
எருதின்மேல் பாயும் வேங்கை!
நிலவுமேல் எழுந்த மின்னல்!
சருகெலாம் ஒளிசேர் தங்கத் தகடுகள் பாரடா”[258]

என்று இயற்கையின் அழகோவியத்தை வரைந்து காட்டுகின்றார் கவிஞர். அருவிகளை வயிரத் தொங்கலாகவும், அடர்ந்த கொடிகளைப் பச்சை வண்ணப் பட்டாகவும், குருவிகளைத் தங்கக் கட்டிகளாகவும், பல வண்ண மலர்களைப் பலவகையான மணிகளின் தொகுதிகளாகவும், எருதின் மீது பாயும் வேங்கையை நிலவு மேல் எழுந்த மின்னலாகவும், உலர்ந்த சருகுகளை, ஒளிமிகுந்த தங்கத் தகடுகளாகவும் உவமிக்கும் இப்பாடலில் அழகு நடை பொங்கி வழிவதை அறிய முடிகிறது.

---

[258] . பாவேந்தர் பாரதிதாசன், அழகின் சிரிப்பு, ப. 18.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் அழகு நடை**

கவிராயரின் அழகுணர்ச்சி அளவிட முடியாத ஒன்று ஆகும். இயற்கையின் இன்பத்தில் தோய்ந்து மெய்மறந்து பாடும் மேன்மையை அவரது பாடல்களால் அறிய முடிகிறது. குறி சொல்ல வந்திருக்கும் குறத்தியின் அழகை வசந்தவல்லி மூலமாக அழகு நடையில் அற்புதம் செய்வதாகக்,

> "கோட்டுவளம் முலைகாட்டும் கொடியின்வளம்
> இடைகாட்டும் குறிஞ்சி பூத்த
> காட்டுவளம் குழல்காட்டும் மலைவளந்தான்
> நீஉரைத்துக் காட்டு வானேன்
> தோட்டுவளம் புரிகாதல் குற்றால
> மலைவளரும் தோகை யேஉன்
> நாட்டுவளம் எனக்குரைத்துக் குற்றாலத்
> தலவளமும் நவிலு வாயே!"[259]

என்று அழகுபடக் கூறும் கவிராயர், குறவஞ்சியின் உடல் அழகைக் குற்றால மலையில் வாழ்கின்ற மயிலுக்கும்; யானையின் தந்தத்தின் அழகினை அவளது கொங்கைக்கும்; பூக்கொடியின் அழகை அவளது இடைக்கும்; குற்றால மலை முழுவதும் பூத்துக் குழுங்குகின்ற அழகை அவளது கூந்தலுக்குமாக ஒப்பிட்டு அழகுபடக் கூறுவது கவிராயரின் அழகுணர்ச்சி அழவிட முடியாதது என்பதைக் காட்டுகிறது. மேலும் எடுத்துக்காட்டாக, குறவஞ்சியின் அழகை அழகுபட வருணிக்கும் கவிராயர்,

> "சிலைநுதலில் கஸ்தூரித் திலகமிட்டு
> நருங்குழலில் செச்சைக் சூடிக்
> கொலைமதர்க்கண் மையெழுதி மாத்திரைக்கோல்
> வாங்கிமணிக் கூடை தாங்கி
> முலைமுகத்தில் குன்றிமணி வடம்பூண்டு
> திரிகூட முதல்வர் சாரல்

---

[259] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.81.

மலைதனில்பொன் வஞ்சிக்குற வஞ்சிஅப
ரஞ்சிகொஞ்சி வருகின்றாளே."[260]

என்று அழகுபட வருணிக்கிறார் கவிராயர். மேலும் வில் போன்ற நெற்றியில் கஸ்தூரி பொட்டு வைத்தும்; மணக்கும் கூந்தலில் வெட்சிப் பூவைச் சூடிக்கொண்டும்; கொல்லும் தன்மையுடைய மதர்த்த கண்ணில் மை தீட்டிக் கொண்டும்; கையில் மாத்திரைக் கோலுடனும்; இடுப்பில் கூடையுமாக; மார்பில் குன்றிமணி அணிந்து கொண்டு திரிகூட மலைச் சாரலில் வாழ்கின்ற பொற்கொடி போன்று இன்பத்தைத் தருபவளாக வருவதாக, குறத்தியின் வருகையை நேரில் பார்ப்பதுபோல் அழகுபடக் கூறுவதற்கு நிகர் கவிராயரே ஆவார்.

**பெத்லகேம் குறவஞ்சியில் அழகு நடை**

கவிராயரைப் போன்றே சாஸ்திரியாரும் தன்னுடைய கவிதை முழுவதும் அமுதம் தருவதுபோல அழகு நடையில் அற்புதம் செய்திருக்கிறார்; படிப்போர் நெஞ்சத்தைப் பரவசமாக்கும் வகையில் அமைந்துள்ளார். குறவஞ்சியைக் காணாமல் தேடும் நூவன் வாயிலாகத் தனது அழகு கவிதையினால், கற்பனையினால் சொல்லழகினால் பாடும் சாஸ்திரியார்,

"சித்திரச்சோலையைச் சத்திரச்சாலையைச்
சிங்காரப்பாவையை வங்காரப்பூவையைப்,
பத்திரவினோதத்தை மித்திரசினேகத்தைப்
பாஞ்சாலையைமன வாஞ்சாலையைக்கன,
வித்திரக்கிரீடத்தை உத்திரவிசேடத்தை
விச்சித்திரத்தைவிண் நட்சத்திரத்தைமுன்,
குத்திரமாய்ப்போன வித்தாரக்காரியைக்
கோமாட்டியை ஞானச் சீமாட்டியை"[261]

என்று அழகிய நடையில் கூறுகிறார். மேலும் குறவஞ்சியைப் பூங்காவாகவும்; உணவளிக்கும் அறச்சாலையாகவும்; அலங்காரப் பதுமையாகவும்; வடிவான

[260] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.70.
[261] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 367.

புதுமையாகவும்; மறுமொழியின் சிறப்பாகவும்; புதுமையாகவும்; விண்மீனாகவும்; அரசியாகவும்; அறிவுச் செல்வியாகவும் அழகுபட வருணித்துச் சொல்வது சாஸ்திரியாரின் அழகு நடைக்கு அணி சேர்ப்பதாக உள்ளது. மேலும் குறவஞ்சியின் தோற்றத்தையும் அவளது வருகையையும் அழகுபடக் கூறும் சாஸ்திரியார்,

“வெண்துகிலுடுத்து விண்பணி தரித்து
மண்டலமதிக்க மாமணியிலங்கும்

கரிகுழல் முடித்துத் தொங்கலும் தூக்கி
விரிகதிர்ப்பிறையும் விதத்துடன் சூட்டிப்

பட்டமும் கட்டிப் பச்சையும் குத்தி
வட்டநற்றிலத மத்தகத்திட்டுப்

பலபலவனைப் பாசியுமணிந்து
இலகுபொற்கச்சை யெழின்முலைக்கிசைத்து

ஆலவேல்விழிகட் கஞ்சனம் தீட்டிச்
சாலவேகையில் சரிவளைதரித்துத்

தந்தம் விட்டிழைத்த தற்சீசின் ரத்தினத்தின்
கொந்தளவோலை குழையினில் கூட்டிச்

சங்குபாசிகளும் தனிக்குன்றி வடமும்
புங்கவெண்முத்தும் பொலிவுறப்பூண்டு

காத்திரக்கூடையும் கக்கத்திலிடுக்கி
மாத்திரைக்கோலும் வலக்கையில் பிடித்து

மங்கையர்க்கரசோ மாசிலாவொளியோ
திங்கள் செங்கதிரோ தெவராக்கினியோ”[262]

என்று விளக்குகிறார். அதில் குறவஞ்சியாவள் வெண்மையான மெல்லிய ஆடை உடுத்தி; விண்ணுலகப் பணியை மனதிலே வைத்து; உலக மக்கள் நினைக்குமாறு

---

[262] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 155.

சிறந்த மணிகள் விளங்குமாறு; சுருண்ட கூந்தலை முடித்து; பூமாலையைத் தொங்கவிட்டு; மிகுந்த ஒளியினுடைய இளம்பிறைப் போன்ற நெற்றியில் நெற்றிச் சுட்டியை அணிந்து; நெற்றியில் தகடு கட்டிக் கொண்டு; பச்சைக் குத்திக்கொண்டு; நெற்றியில் வட்டமான பொட்டு வைத்து; பல வண்ணங்களில் பாசிமணிகள் அணிந்து கொண்டு; கூர்மையான வேல் போன்ற கண்களில் மை இட்டுக் கொண்டு; கை நிறைய வளையல்களை அணிந்து கொண்டு; தர்சீசின் இரத்தினங்களைப் பதித்துச் செய்த காதணியை அணிந்து கொண்டு; சங்கு போன்ற வெண்மணிகளும் கருமணிகளும் குன்றி மணிமாலையும் உயர்ந்த வெண்முத்து மாலையும் மிகுதியாக அழகுபட அணிந்து கொண்டும்; பெரிய கூடையை அக்குளில் அணைத்துக் கொண்டும்; மந்திரக் கோலை வலக்கையில் பிடித்துக் கொண்டும்; பெண்களின் தலைவியோ! தூய்மையான ஒளியோ! நிலவின் செம்மையான கதிரோ! தெய்வ அரசியோ! என்று அனைவரும் வியக்கும் வண்ணம் ஒய்யாரமாக நடந்து வந்தாள் என்று சாஸ்தியார் கூறுவது அழகு வாய்ந்ததாக அமைகிறது.

**அருவி நடை**

ஊற்றுப் பெருக்கால் தங்குத் தடையின்றி நுங்கும் நுரையுமாகப் பொங்கிப் பெருக்கெடுத்து, வரும் குற்றாலத்து அருவியைப்போல, வற்றாத கருத்து வளத்துடன், ஆர்ப்பரித்துக் கொட்டும் அருவியைப்போல ஓசை நயத்துடன் இன்னிசைப் பாடல்களைப் பாடுவதில் கவிராயரும் சாஸ்திரியாரும் இணை பிரியா அண்றில் பறவையை ஒத்துக் காணப்படுகின்றனர். இவ்விரு கவிஞர்களும் தாம் படைத்த குறவஞ்சி இலக்கியங்களில் சந்த நயமிக்கப் பாடல்வரிகளால் இயல், இசை, நாடகம் கலந்த முத்தமிழுக்கும் ஓவியமாகப் படைத்திருப்பது போற்றுதலுக்குரியதாகிறது. இவ்விரு வகைக் குறவஞ்சிகளிலும் கவிஞர்கள் கையாலும் ஆர்ப்பரித்துக் கொட்டும் கவிதை நடைகளை விளக்கப் படுகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் அருவி நடை**

குற்றாலக் குறவஞ்சியில் கவிராயரின் அருவி நடை என்பது, வெள்ளியை உருக்கி விட்டார்போல, வயிரத்தின் தொங்கல் போலக் காட்சிப்படுத்துகிறார்.

குற்றாலத்தில் பெய்யும் சாரல் மழையைப் போன்று, படிப்போர் மனதை நனைத்துவிடும், காண்போர் கண்களைக் கவர்ந்திழுக்கும் காந்தம் போன்றது குற்றாலக் குறவஞ்சி நூல் என்பதை, குற்றாலத்தில் குறத்திக் குறிபார்க்கும் அழகைத் தன்னுடைய கவித்திறத்தால் கேட்போர் காதுகளுக்கு இனிமையாகக் அருவியாகக் கொட்டுவதை,

“புள்ளிமான் ஈன்ற பூவையே குறக்குல
வள்ளிநா யகியே வந்தெனக் குதவாய்
அப்பனே மேலை வாசலின் அரசே
சேப்பரு மலைமேல் தெய்வகன் நியர்காள்
ஆரியங் காவா அருட்சொரி முத்தே

நேரிய குளத்தூர் நின்ற சேவகனே
கோலமா காளி குற்றால நங்காய்
கால வைரவா கனதுடிக் கறுப்பா
முன்னோடி முருகா வன்னிய ராயா
மன்னிய புலிபோல் வரும்பன்றி மாடா

எக்காலத் தேவி துர்க்கை பிடாரி
மிக்கதோர் குறிக்காய் வேண்டினேன் உங்களை
வந்துமுன் நிருந்து வசந்தமோ கினிப்பெண்
சிந்தையில் நினைத்தது சீவனோ தாதுவோ
சலவையோ பட்டோ தவச தானியமோ

கலவையோ புழுகோ களபகத் தூரியோ
வட்டிலோ செம்போ வயிரமோ முத்தோ
கட்டிலோ மெத்தையோ கட்டி வராகனோ
வைப்பொடு செப்போ வரத்தொடு செலவோ
கைபடு திரவியம் களவு போனதுவோ

மறுவிலா பெண்மையின் வருந்திட்டி தோசமோ
திரிகண்ணர் ஆனவர் செய்தகை மயக்கமோ
மன்னர்தாம் இவள்மேல் மயல்சொல்லி விட்டதோ
கன்னிதான் ஒருவர்மேல் காமித்த குறியோ
சேலையும் வளையும் சிந்தின தியக்கமோ

மாலையும் மணமும் வரப்பெறும் குறியோ
இத்தனை குறிகளில் இவள்குறி இதுவென
வைத்ததோர் குரியை வகுத்தருள வீரே."[263]

என்று அருவியாய் வார்த்தைகளைக் கொட்டுவது கவிராயரின் அருவி நடைக்குச் சான்றாகத் திகழ்கிறது.

**பெத்லகேம் குறவஞ்சியில் அருவி நடை**

சாஸ்திரியாரும் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவராவதால், அவரும் குற்றால அருவியின் அற்புதத்தை அறிந்தவராகையால், கவிராயரைப் போன்றே சாஸ்திரியாரும் தாம் படைத்த பெத்லகேம் குறவஞ்சி முழுவதும் அருவியாய் ஆர்ப்பரிப்தைக் காண முடிகிறது. விசுவாசக் குறவஞ்சி குறி சொல்ல (தேவ வசனத்தைச் சொல்ல) ஆரம்பிக்கும்போது கடவுளை வழிபடும் காட்சியை,

"பொன்னகர்க்கிறைவா புவியெல்லாம்புரப்பாய்
மன்னர்தம்குலத்தாய் வானவர்க்கிடத்தாய்.

ஆறுலட்சணத்தாய் அட்டமெய்க்குணத்தாய்
மாறிலாவரத்தாய் மணிமுடித்தாய்.

வேதநாயகனே விமலசற்குருவே

ஓதடங்காத வொருவனேசரணம்.

கத்தனேசரணம் கடவுளே சரணம்
அத்தனேசரணம் அனாதியேசரனம்.

சத்தியசொருபா சகலகாரணத்தாய்
முத்தியங்கடலே முதல்வனேசரணம்

மாசில்லாதவனே மரித்துயிர்த்தவனே
யேசுநாதனே யென்முன்வந்துதவாய்.

---

[263] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, பக். 104-105.

பத்தர்கட்குறவே பராபரப்பொருளே

வித்தகாஎனக்கில் வேலையிலுதவாய்.

சாத்திரத்தடங்காய் சக்கரத்தடங்காய்

கோத்திரத்தடங்காய் குறியினுக்கடவாய்.

ஒன்றிலுமடங்காய் ஒப்பிடஅடங்காய்
இன்றெனைக்கேளா யேகனேபோற்றி.

முப்பொருளவனே முதல்வனே போற்றி
அப்பனேபோற்றி அண்ணலேபோற்றி.

நீசவாகனத்தாய் நெருங்கிவாகனத்தாய்
தேசுவித்தகத்தாய் தெய்வபுஸ்தகத்தாய்

நசரையம்பதியாய் நரரிலன்பதியாய்
இசரவேல்குலத்தா யெழும்வியாகுலத்தாய்.

தூதர்சங்கத்தாய் சொன்னிசங்கத்தாய்
மாதரைப்படைப்பாய் வரர்கணப்படையாய்…”[264]

என்று பாடல்வரிகள் முழுவதிலும் அருவியாய் வார்த்தைகளை அடுக்கிக் கூறுவது சாஸ்திரியாரின் அருவி நடைக்குச் சான்றாக விளங்குகிறது.

**அடுக்கு நடை**

அடுக்கு மாடி வீட்டுக்குப் படியை எப்படி அழகாக அடுக்கடுக்காக வைத்து அழகு செலய்வார்களோ, அதைப்போலவே, கவிஞர் தாம் கூறவரும் கருத்துக்களை நயமிக்க சொற்களைக் கொண்டு அடுக்கடுக்காக அடுக்கிக் கூறுவது அடுக்கு நடையாகும். அவ்வகையில் கவிராயரும், சாஸ்திரியாரும் தாங்கள் படைத்த குறவஞ்சி நூல்களில் அழகு மிகுந்த சொற்களை அடுக்கடுக்காகக் கூறுவது சிறப்பளிக்கிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் அடுக்கு நடை**

[264] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 238.

வசந்தவல்லியின் பந்து பயிலும் காட்சியை வருணித்துக் கூறும் கவிராயர், அழகுமிக்க சொற்களால் அடுக்கிக் கூறுவது படிப்போரைப் பரவசப்படுத்தும் வகையில் இருப்பதை,

“இந்திரையோ இவள் சுந்தரியோ தெய்வ
ரம்பையோ மோகினியோ – மனம்
முந்தியதோ விழி முந்தியதோ கரம்
முந்தியதோ...........”[265]

என்ற வரிகளில் காணலாம். மேலும் வசந்தவல்லியின் கையின் சிறப்பைக் கவிராயர் அடுக்கு நடையில் அழகுபடக் கூறுவதை,

“முத்திரை மோதிரம் இட்ட கையைக் காட்டாய் அம்மே
முன்கை மூதாரி இட்ட கையைக் காட்டாய்

அத்தகட கம் புனைந்த கையைக் காட்டாய் பொன்னின்
அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய்

சித்திர சூடகம் இட்ட கையைக் காட்டாய் பசும்
செங்கமலர்ச் சங்கரேகைக் கையைக் காட்டாய்

சத்தி பீடத்து இறைவர் நன்னகர்க்குள்ளே வந்த
சஞ்சீவியே உனது கையைக் காட்டாய்”[266]

என்று அழகாகச் சொல்லழகுடன் நயமிக்கச் சொற்களை அடுக்கடுக்காகக் கூறுவது, கவிராயரின் அடுக்கு நடைக்கு ஆதாரமாகக் கூறலாம்.

**பெத்லகேம் குறவஞ்சியில் அடுக்கு நடை**

சீயோன் மகளின் (தேவமோகினி) வருகையை, திருமறையில் வரும் புகழ் பெற்ற பெண்களை வரிசை மாறாமல் அடுக்கு நடையில் குறிப்பிட்டு, அவர்களில் சிறந்தவளாக ஒப்பிட்டுக் கூறும் சாஸ்திரியாரின் அடுக்கு நடையானது சிறப்பு வாய்ந்ததாக விளங்குவதை,

---

[265] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.35.
[266] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.102.

"முந்தும் ஏவாள் சாராளும் ரேபக்காள்
முதன்மை லேயாளுடன் ராகேல்
முறைகொள் தாமார்சிப் பொறாள் இராகாப்பு
மோசேமுன் மீரியாம் தெபோறாள்,
வந்தசற் பாத்தூர்க் கைமையா கேலேழ்
மக்கள் தாய் நகாமி ரூத்தபிகாய்
வளர்யொசே பாள்யோப் புவின்மகள்மூவா
மானகற்பு எஸ்தர்சூ சன்னாள்
மெய்க்கன்னி மரியாள் கிலேயோப்பை மரியாள்
மீண்டுமர்த் தாள்கத்த ரீனாள்
சிந்தைகி தோரி யாள்மம்மி தோற்காள்
சேருமிம் மாதர்கள் சிரசாய்த்
திவ்விய சீயோன் மகளென மேவித்
தேவமோ கினியும்வந்தனனே."[267]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். மேலும் தேவமோகினியின் கையின் அழகை குறவஞ்சி வாயிலாக,

"தேவ முத்திரையிஒட்ட கையைக்காட்டாய், வளர்
சிலுவை முத்தைரையிட்ட கையைக்காட்டாய்,
காவில் கனிபறித்த கையைக்காட்டாய், யேசு
கத்தனை யபிஷேகித்த கையைக்காட்டாய்,
கூவிக் குனிந்து நிற்கும் கையைக்காட்டாய், ஐயைக்
கும்பிட்டர்ச்சனைசெயும் கையைக்காட்டாய்,
சாவற் றுயர்ந்தபெத்லேம் நன்னகர்க்குள்ளே, வந்த
தருமசஞ் சீவியேயுன் கையைக்காட்டாய்."[268]

என்று கற்பனையாக அடுக்கிக் கூறும் சாஸ்திரியாரின் அடுக்கு நடையானது படிப்போருக்கு விருந்தளிக்கும் வகையில் உள்ளது.

---

[267] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 87.

[268] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 232.

**ஒப்பீட்டு நடை**

ஒப்பீட்டாலேயே உயர் கருத்துக்கள் நிலை நிருத்தப்படுகின்றன என்ற மார்க்சு முல்லரின் கருத்திற்கேற்ப, ஒரு கருத்தை விளக்குவதற்கு அதே போன்ற மற்றொன்றை ஒப்புமையாகக் காட்டுவது ஒப்பீட்டு நடை ஆகும். அந்த வகையில் திரிகூட ராசப்பக் கவிராயரும், தஞ்சை வேத நாயக சாஸ்திரியாரும் தாம் படைத்த குறவஞ்சி நூல்களில் பல இடங்களில் ஒப்பீட்டு நடையைக் கையாண்டுத் தாங்கள் கூறும் கருத்திற்கு மேலும் வழுவூட்டுவதற்கு அதைப் போன்ற மற்றொரு கருத்தோடு ஒப்பீட்டு, மேலும் உயர் கருத்தைப் பெறுமாறு கையாண்டு குறவஞ்சி நூலுக்கு அழகு சேர்த்துள்ளனர். அவ்வாறு ஒப்பீட்டுக் கூறும் நடையின் சிறப்பினைக் விளக்கப் படுகிறது.

**கவிராயாரின் ஒப்பீட்டு நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சியில் ஒப்பீட்டுக் கருத்துக்குப் பஞ்சமில்லை. குறும்பலா மரத்தில் முற்றிப் பழுத்த பழங்கள் வெடித்துச் சுளையிலிருந்து வெளியேறிய இனிய தேனீரைப் பார்த்ததும் ‘பூமியில் பாதாள கங்கை வந்ததோ’ என்றும் ‘பசுந்தேன் கங்கை’ குதித்து வந்ததோ என்பதை,

> “வேரிலே பழம்பழுத்துத் தூரிலே
> சுளைவடித்து வெடித்த தீந்தேன்
> பாரிலே பாதாள கங்கை வந்தது
> எனக்குதித்துப் பசுந்தேன் கங்கை”[269]

என்று கவிராயர் பலாவின் சுளையிலிருந்து வெளியேறிய தேனிரை, பாதாள கங்கையுடன் அழகு மிகுந்த நடையில் ஒப்பீட்டுக் கூறுவது கவிராயரின் கவி ரசத்திற்குச் சுவையூட்டுவதாக அமைகிறது. கவிராயரின் ஒப்பீட்கு நடைக்குச் சான்றாக மற்றொரு உதாரணம், முன்னொரு நாளில் திரிபுரத்தில் பற்றிய பெருந்தீயை, மேலும் பரவாமல் அத்தீயை அணைத்து சுதன்மன், சுசீலன், சுபத்தி ஆகியோரைக் காத்தவர், குற்றாலநாதர் மீது கொண்ட காதலால் ஏற்பட்ட காமத்தீயை அணைக்காமல் இருக்கிறாரே! என்றும், பருத்த மேரு மலையை

[269] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.55.

வில்லாக வளைத்துக் கொண்டவர், பருவ மலையாக உள்ள எனது கொங்கையைச் சேர்த்துக் கொள்ளாமல் இருக்கின்றாரே என்று வசந்தவல்லியின் கதறலை நயம்படக் கூறும் கவிராயர், ‘காட்டில் பரவிய பெருந்தீயை’ ‘வசந்தவல்லியின் காமத்தீயினுடன்’ ஒப்பிட்டுக் கூறுவதும், ‘பருத்த மலையை’ ‘பருவ மலையான கொங்கைக்கு’ ஒப்பிட்டுக் கூறுவது கவிராயரின் ஒப்பிட்டு நடைக்கு மேலும் வலுசேர்ப்பதாக அமைகிறது. இப்படியாகத் தனது குறவஞ்சி நூல் முழுவதும் தனது கருத்தை நயமிக்க மற்றொரு கருத்துடன் ஒப்பீட்டுக் கூறி நூலுக்கு அழகு சேர்ப்பதைப்போலப் படிப்போருக்கு அமுதமூட்டியதுபோல அமைகின்றது.

**சாஸ்திரியாரின் ஒப்பீட்டு நடை**

பெத்லகேம் குறவஞ்சி முழுவதிலும் ஒப்பீடு என்பது செழிப்பாகவே காணப்படுகிறது. சீயோன் குமாரத்தியின் அழகை வருணிக்கும் சாஸ்திரியார், அவளது புருவத்தை வில்லுக்கும்; பற்களை முத்துக்கும்; அவளது முகத்தில் இருக்கும் மூக்கினை லீபனொனுக்கும்; இஸ்ரவேல் மக்களுக்காகவே எழுதப்பட்ட ஆதியாகமம், யாத்திராகமம், லேவியராகமம், எண்ணாகமம், உபாகமம், யோசுவா, நியாயாதிபதிகள், ரூத், 1 சாமுவேல், 2 சாமுவேல் போன்ற பத்து நூல்களையும் கற்றறிந்த வாக்கிற்கும்; கூந்தலை காரிருளுக்கும்; அழகிற்கு அன்னத்தையும்; அவளது கன்னத்தைப் பிளந்த மாதுளம் பழத்திற்கும்; அவளது முகத்தினை இறைவனின் பேரொளி வீசும் நீதிக்கும், அருளுக்கும் ஒப்பீட்டுக் கூறுவது சாஸ்திரியாரின் ஒப்பிட்டு நடைக்குச் சான்றாக விளங்குகிறது. இதை,

“வில்லைப் புருவமைத்து எல்லைப் பொருது முத்துப் பல்லினாள் - வேத
மேன்மை யனைத்தும் கற்று ஞான மனத்தைப் பெற்ற சொல்லினாள்
எல்லைத் தமஸ்கின் திசையில் உற்றுயர் லிபனோன் மூக்கினாள் – இச
ரேலுக்கு அறைந்த பத்து நூலுக்கு உயர்ந்த தேவ வாக்கினாள்.
அல்லைக் குழலிட்டு எருசெல்லைப் பதியின் திட்ட அன்னத்தாள் – மா
தளையின் கனிவெடிப்பின் விளையும் சிகரத்து இருகன்னத்தாள்

தொல்லைச்சீவவிருட்சக் கொல்லைத் தலத்தின் முக்கிய சுகத்தினாள் – தேவ

சோதிப் பிரவை தங்கும் நீதிக் கிருபை பொங்கு முகத்தினாள்”[270]

என்று தனது பாடல்வரிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பொருளையும் ஒப்பிட்டுப் படிப்போரைப் பரவசப்படுத்தும் விதமாக அமைத்திருப்பது பெத்லகேம் குறவஞ்சிக்கே உரிய சிறப்பாகும்.

**ஓசை நடை**

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் ஓசை நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற இசை நாடகங்களில் நம் கண்ணெதிரேயே நடப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துபவை அப்பாடல்களில் பயின்றுவரும் ஓசை நயங்களே ஆகும். நிகழ்ச்சிக்கேற்ப காட்சியமைப்புகளை உயிர்ப்புடனும், உணர்ச்சியுடனும் ஓசை நயத்துடன் காட்டுவதில் கம்பனுக்கு நிகராகத் திரிகூடராசப்பக் கவிராயர் மகத்தான வெற்றியைப் பெற்றுள்ளார். காப்பியத் தலைவியான வசந்தவல்லி பந்து பயிலும் காட்சியை ஓவியமாகத் தீட்டி உயிரோட்டம் கொடுத்து கண்ணெதிரே உலவ விடுவதற்குக் காரணம் அப்பாடலில் அமைந்துள்ள ஓசை நயமே ஆகும். வசந்தவல்லி பந்து பயிலும்போது அவளது அழகினை வருணிக்கும் கவிராயர்,

“மந்தர முலைகள் ஏசலாட
மகரக் குழைகள் ஊசலாடச்
சுந்தர விழிகள் பூசலாடத்
தொங்கத் தொங்கத் தொங்கத்
தொம்மெனப்”[271]

என்று ஓசை நயமுடன் பாடும் கவிராயரின் கவிதை வரிகள் என்பது, கவி சக்கரவர்த்திக் கம்பனை ஒப்பீடு கொண்ட உணர்வைத் தருகின்றன. மேலும் குறத்தி குறி சொல்லும் அழகைக் கவிராயர் ஒலி நயத்துடன் பாடும் அழகைப் பார்த்தால், முப்பது நாற்பது ஆண்டுகள் குறி சொல்லுவதைக் குலத்தொழிலாகக்

---

[270] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 98.
[271] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.33.

கொண்டவர்கள் கூட இப்படி வருணித்துச் சொல்ல முடியாது. அந்த அளவிற்குக் குறி சொல்லுவதை உள்வாங்கி ஓசை நயத்துடன் பாடுவதை,

"சொல்லக் கேளாய் குறி சொல்லக் கேளாய் அம்மே!
தோகையர்க் கரசே குறி சொல்லக் கேளாய்
முல்லைப்பூங் குழலாளே நன்னகரில் வாழ் முத்து
மோகனப் பசுங்கிளியே சொல்லக்கேளாய்
பல்லக்கே றுந்தெருவில் ஆனைநடத்தி மணிப்
பணியா பரணம் பூண்ட பார்த்திபன் வந்தான்
செல்லப்பூங் கோதையேநீ பந்தடிக்கையில் அவன்
சேனைகண்ட வெருட்சிபோல் காணுதே அம்மே"[272]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகிறது.

**பெதல்கேம் குறவஞ்சியில் ஓசை நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சி நூலைத் தழுவியே பெத்லகேம் குறவஞ்சி எழுதப்பட்டுள்ளதால், குற்றாலக் குறவஞ்சியிலுள்ள அனைத்து ஓசை நயங்களையும் பெத்லகேம் குறவஞ்சியிலும் காண முடிகிறது. பெதல்கேம் மலைவளத்தைக் கூறவரும் சாஸ்திரியார் அம்மலை வளத்தினை ஓசை நயமிக்கப் பாடுவது, சாஸ்திரியாரின் ஓசை நடைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவதை,

"தினதேந்தினத் தினதேந்தினத் தினதேந்தினத் தினனா,
தெந்தேந்தினத் தெந்தேந்தினத் தெனதேந்தினத் தினனா.

"ஓர்மலையோ ஏதோமி னெல்லைமலையம்மே,
உச்சிதமா யாறோனு மரித்தமலையம்மே,
கார்முகில்சூழ் பிஸ்காவின் கொடுமுடியிலேறிக்,
கானாவை மோசேசு கண்டமலையம்மே,
நேர்மிகுந்த மோவாப்பின் தேசமதிலிருக்கும்,
நோபோக்குன் றவன் மரித்த மலைதான்காணம்மே,

---

[272]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.107.

யேர்மோனின் மலையினிலே யேவியர்முன்னிருந்தார்,

எங்களுக்குப் பெத்தலேக மேற்றமலையம்மே."[273]

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம். மேலும் விசுவாச சிங்கி குறி சொல்லும் பாங்கினை,

"குறிசொல்லக்கேளம்மே குறிசொல்லக்கேள்,

யூதர்கோத்திரக்கன்னியாஸ்திரீ யேகுறிசொல்லக்கேள்,

அறிவு லுயர்ந்த பெத்லேம் நன்னகரில் வாழ், சீயோன்

அவையின் குமாரத்தியே குறிசொல்லக்கேள்,

மறையோர் எழுதிவைத்த வார்த்தையின்படி, நீச

வாகனத்தின் மேலேயேசு ராசனும்வந்தான்,

பொறைமிகுங் கோதையே நீ பந்தடிக்கையில், அவன்

புறத்தளம் கண்டுபயம் பூண்டதாமம்மே"[274]

என்ற ஓசை நயமிக்கப் பாடல் வரிகள் சாஸ்திரியாரின் ஓசை நடைக்குச் சான்றாகத் திகழ்கிறது.

**எளிய நடை**

படைப்பாளி தாம் கூறவரும் கருத்தினை யாவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில், யாவருக்கும் தெரிந்த இனிமையான சொற்களைக் கொண்டு எளிமைபடக் கூறுவது எளிய நடையாகும். தென்றலானது நடுங்காமல் சன்னலுக்குள் சென்று காதினிலே இனிமை சேர்ப்பதைப் போன்று கவிராயரும், சாஸ்திரியாரும் எளிமையான சொற்களைக் கொண்டு அருமையாய் குறவஞ்சி நூலைப் படைத்து, யாவரும் படித்து இன்புறும் வகையில் எளிமைபடக் கூறுகின்றனர்.

---

[273] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 167.

[274] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 245.

**கவிராயரின் எளிய நடை**

குற்றாலநாதரின் வருகையைப் பார்த்த வசந்தவல்லி வியந்து நிற்பதை கவிராயர் தன்னுடைய கற்பனை வளத்தால் எளிய நடையில் இன்மையாக எடுத்துக் கூறுவதை,

“நாகம் புயத்தில் கட்டி நஞ்சு கழுத்தில் கட்டிக்
காகம் அணுகாமல் எங்கும் காடு கட்டிப்
பாகம் தனிலொரு பெண் பச்சைக் கிளிபோல் வைத்து
மோகம் பெறஒரு முடியில் வைத்தார்.

மெய்யில் சிவப்பழகும் கையில் மழுவழகும்
மையார் விழியார் கண்டால் மயங்காரோ?
செய்ய சடையின் மேலே திங்கள் கொழுந்திருக்கப்
பையை விரிக்குதம்மா பாம்பு சும்மா.

அருட்கண் பார்வை யால்எண் அங்கம் தங்கமாக
உருகிப் போட்டார் கண்ட உடனேதான்
பெருக்கம் பார்க்கில் எங்கள் திருக்குற்றாலர் போலே
இருக்குது இவர்செய் மாயம் ஒருக் காலே.”[275]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். அதில் சொல்லழகு, எதுகையழகு மிக்க எளிய நடையில் கவிராயர் எருதின்மீது பவனி வரும் குற்றாலநாதரின் வருகையை யாரென ஐயங்கொண்டு, தன் மனதிலே எழும் உள்ளார்ந்த நினைவுகளைத் தன் கற்பனைத் திறத்தால், நாகத்தைப் புயத்தில் கட்டிக் கொண்டும்; நஞ்சைக் கழுத்திலே வைத்துக் கொண்டும்; காகம் கூட வராதவாறு காடு கட்டிக் கொண்டும்; தன் உடலின் ஒரு பாகத்தில் பச்சைக் கிளிபோல் ஒரு பெண்ணை வைத்துக் கொண்டும்; ஆசைக்காக ஒரு பெண்ணை வைத்துக் கொண்டும்; உடலின் சிவப்பழகையும்; கையில் ஒரு மழுவின் அழகையும்; மை தீட்டப்பட்ட விழியினையுடைய மங்கையர் கண்டால் மயங்கமாட்டாரோ? சிவந்த சடையின்மீது திங்கள் கொழுந்தாகிய பிறை இருக்க, அது நடுங்குமே என்று

[275] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.38.

எண்ணாமல் அவர் அணிந்திருந்த பாம்பு அடிக்கடி படத்தை விரிக்குதம்மா! அருள்கண் பார்வையால் என்னைக் கண்டவுடன், என் மேனி முழுவதும் தங்கம்போல் மின்னும்படி உருக்கிவிட்டாரே! இவரின் அழகின் பெருக்கத்தைப் பார்க்கும்போது எங்கள் திருக்குற்றால நாதரைபோல, அவர் செய்யும் ஒவ்வொரு மாயையும் இருக்கின்றனவே என்று மனவோட்டத்தை அழகுபட எளிய நடையில் கூறுவது கவிராயரின் எளிய நடைக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

**சாஸ்திரியாரின் எளிய நடை**

கட்டியங்காரனாகிய யோவான் இயேசுவின் வருகையையும் அவரது மகிமையையும் அருளுரையாக, மனித வடிவம் கொண்டார்; மக்களுக்கு உண்டாக இருந்த ஆபத்தினை நீக்கினார்; தேவ ஆட்டுக்குட்டியாகிப் பாவத்தைச் சுமந்து தீர்த்தார்; ஆதாமினால் உண்டான சாபத்தை ஏற்றுக் கொண்டார்; தீய பண்பினையுடைய பேயை அடியோடு ஒழித்தார்; உண்மையான நம்பிக்கையுடையவரை சேர்த்துக் கொண்டார்; கிணற்றண்டை சென்று சமாரியப் பெண்ணின் துயரத்தைப் போக்கினார்; யூத மரப்பினைத் தெரிந்து கொண்டார்; இறைவனது வலது பக்கத்தில் அமர்ந்து கொண்டார்; பாவத்தின் கொடுமையைத் தணித்துக் கொண்டு, தன் நீதியினால் இறைவனின் கோபத்தினைக் குறைத்துக் கொண்டார்; திருமறை என்னும் நூலை அருளினார்; ஒரு நட்சத்திரத்தினால் தான் பிறந்ததைக் கணக்கிட்டு அறியச் செய்தார் என்று அருளுரை சொல்லுவதை எளிமையாக இசை நயமிக்கப் பாடலாகப் பாடுவது சாஸ்திரியாரின் எளிய நடைக்குச் சான்றாக அமைகிறது என்பதை,

> "ரூபத்தை எடுத்தான் மனுடரின் ஆபத்தைத் தடுத்தான் அவன் கையில்
> ஓசத்தவுடுத் தான் அவனும்வி சேஷித்த வுடுத்தான்
> பாவத்தைத் தீர்த்தான் ஆதத்தின் சாபத்தை ஏர்த்தான், துற்குணப்
> பாசியைப் பேர்த்தான் மெய்விசு வாசியைச் சேர்த்தான்
> கூபத்தைச் சேர்த்தான் ஒருபெண் சோபத்தைத் தீர்த்தான், யூதர்கள்
> குலத்தினைத் தேர்ந்தான் கடவுளின் வலத்தினைச் சார்ந்தான்

தாபத்தைத் துணிந்தான் நீதியின் கோபத்தைத் தணித்தான் வேத
சாஸ்திரம் பணிந்தான் ஒருநட் சேத்திரம் கணித்தான்"[276]

என்ற பாடல்வரிகளால் அறிய முடிகிறது.

பெத்லகேம் குறவஞ்சியில் சாஸ்திரியாரின் பாடல்கள் சில பாமர மக்கள் மட்டுமல்ல நன்கு கற்றறிந்த மக்களும் பொருள் புரிந்து கொள்ளுவதில் சற்றுச் சிரமம் இருப்பதைச் சீயோன் குமாரத்தி பந்தடிக்கும் தருணத்தில் வரும் பாடல்களில் சற்று கடினமான நடைகளைக் கையாண்டுள்ளார் என்பதை,

"இரவி யோகம் சக்கரத்தில் உருளும் நாளுரு பத்னதந்தீர்
ஏழ்மணி எட்டே வினாடியில் புதன் அறி யாதலே,
விரிவெள்ளி இருபத்து மூன்று மணிமூவேழ் வினாடியே
விபுலந் தாசிருபத்து மூன்றெண் ணேழ்வினாடி நானொடி
அரிய சந்திரன் இருபத்தேழு நாளுடன் மணி ஏழுமாய்
அதிவினாடி நாற்பதுடன் மூன்றைந்து நொடியு மானதே,
குருதியோ ஒருதினம் வினாடி முப்பத் தொன்பது நொடியுமே
குறையிலாது இருபத்தி இரண்டு நிறைலாரும் அறியவே,
அரசன் ஒன்பது மணிவினாடி ஐம்பத்து ஐந்துடன் நொடியுமே
ஆறைந் துடனே மூன்றதாகும் அப்புறம் சனி மணிபத்தோடு
ஒருவியப் பதினாறு வினாடி ஒருநொடியதும் ஆனதே
உற்ற வளையம் பத்துமணி நாலெட்டுடன் நொடிபதினைந்தே
தெரிவுறாது சமசக்கரத்தில் திங்கள் உருளும் காலெனத்
திவ்ய சீயோன் மகள் குலாவிச் சேர்ந்துநின்று பந்தடிப் பளாம்"[277]

(பெ.கு.சுந். பந். தரு. ப.126)

என்ற பாடல் வரிகளின் மூலமாக அறிந்து கொள்ள முடிகிறது.

[276] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 71.
[277] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.126.

**வருணனை நடை**

வருணனை என்னும் சொல்லுக்கு மதுரைத் தமிழ்ப் பேரகராதி, “வருணனை – வன்னிப்பு, புனைவுரை”[278] என்றும், யாழ்ப்பாண அகராதி, “வருணனை, தோத்திரம் – வன்னிப்பு; வருணித்தல் – வன்னித்தல்”[279] என்றும், தற்காலப் பேச்சு, எழுத்து வழக்கினை அடிப்படையாகக் கொண்ட கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, வர்ணனை – நேரில் பார்ப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தும் பேச்சு அல்லது எழுத்து; வர்ணி. (வர்ணிக்க, வர்ணித்து), (தத்ரூபமாக அல்லது இவ்வாறானது) என்ற வார்த்தகளால் விவரித்தல்”[280] எனச் சுட்டியுள்ளது. தமிழில் வழங்கும் வட சொற்கள் அகர வரிசைப்படுத்திப் பொருளுரைக்கும் ‘வடசொற்றமிழ் அகரவரிசை’ “வருணனை, வர்ணனை, ஒப்பனை”[281] எனப் பொருள் தருகின்றன.

வடமொழி – ஆங்கில அகராதிகள், வருணனை என்பதற்குத் தரும் விளக்கத்தினைப் பார்க்கும்போது, “Painting, Description, Delineation, Representation,,. Writing. Statement – As assertion Prise. Commendaation”[282]ஆகிய பொருள்களை வாமன் சிவராமன் ஆப்தேயின் The Practical Sanskrit – English Dictionary என்னும் அகராதி குறிப்பிடுகின்றது. இதன் வழியாக வருணனை என்பதற்கு, ஓவியம், சித்தரித்தல், பாவிப்புரை, கட்டுரை, பாராட்டுரை, கருத்துரை போன்ற பொருள்கள் கிடைக்கின்றன. மேலும் Varnana என்பதற்கு, “The act of painting, colouring, delineation, description, explanation, writing, embellishment, decoration, praise, commendation”[283] ஆகிய பொருள்களைச் சர் மோனியர் வில்லியம்ஸின் வடமொழி – ஆங்கில அகராதி விளக்கியுள்ளது. இதன் மூலம், ‘வர்ணனா’ என்பதற்கு ஓவியம் தீட்டுதல், வண்ணம் தீட்டுதல், சித்தரித்தல், விரித்துரைத்தல், விளக்கவுரை, கட்டுரை,

---

[278] . மதுரைத் தமிழ்ப்பேரகராதி – இரண்டாம் பாகம், ப. 530.
[279] .சந்திரசேகரப் பண்டிதர், சரவண முத்துப்பிள்ளை, யாழ்ப்பாண அகராதி – 2, ப. 411.
[280] . 45. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 900.
[281] . தி. நீலாம்பிகை, வடசொற்றமிழ் அகரவரிசை, ப. 251.
[282] . Vaman Shivram Apte, The Practical Sanskrit – Englisah Dictionary, P. 833.
[283] . Sir Monier – Williams, A Sanskrit - Englisah Dictionar, P. 48.

ஒப்பனை, அணிசெய்தல், பாராட்டுரை, கருத்துரை ஆகிய பொருள்கள் கிடைக்கின்றன.

ஆகவே அகராதிகள், சொற்களஞ்சியங்கள், பொருள்களஞ்சியங்கள் வருணனை என்பதற்குப், புகழுரை, விரித்துரை, விளக்கவுரை, கட்டுரை, சித்தரித்தல், புனைவுரை, கருத்துரை, பாராட்டுரை, ஒப்பனை, செய்தியுரை போன்ற பொருள் விளக்கங்களைத் தருகின்றன. இவ்விளக்கங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, படைப்பாளி, படைப்பை வாசகர் புரிந்து கொள்ளச் செய்யவேண்டும் என்னும் நோக்கில் பயன்படுத்தும் புலப்பாட்டு உத்தியே வருணனை எனலாம்.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் வருணனை நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சி பாடல் முழுவதும் கவிராயர் கற்பனையுடன் வருணனை மிக்க சொற்களைக் கையாண்டு, சொல்லவந்த கருத்துக்கு மேலும் வழு சேர்க்கும் விதமாக வருணனையை நயம்பட உரைப்பது குறவஞ்சி நூலுக்கு அணி சேர்ப்பதாக உள்ளது. வசந்தவல்லி பந்து விளையாடிவரும் காட்சியை வருணிக்கும்போது, சங்க வீதியில் வரும் வசந்தவல்லி குதிகால்களாகிய இரு பந்துகளும் தாவித் தாவி ஆடுவதாகவும், கொங்கையாகிய இரு பந்துகளும் குதித்துக் குதித்து ஆடுவதாகவும், ஒரு பந்தைக் கையிலே கொண்டு மகிழ்ந்து மகிழ்ந்து ஆடிவருதாகவும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் போன்ற ஐம்பூதங்களையும் ஒரு சிமிலியில் மறைத்து ஆடிவருவதாகவும் வருணிக்கும் காட்சி அனைவரும் வியக்கும் வகையில் உள்ளதை,

> “வருசங்க வீதி தன்னில் வசந்தபூங் கோதை காலில்
> இருபந்து குதிகொண் டாட இருபந்து முலைகொண் டாட
> ஒருபந்து கைகொண் டாட ஒருசெப்பில் ஐந்து பந்தும்
> தெரிகொண்டு வித்தை யாடும் சித்தரை ...”[284]

[284] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.38.

என்று வருணிப்பதும், காதல் கொண்டு மயங்கித் தவிக்கும் வசந்தவல்லிக்கு, குறவஞ்சி குறி சொல்லும்போது, தலைவனை 'பெண்சேர வல்லவன்' என்று சொன்னதும் கோபப்பட்டு வசந்தவல்லி, குறவஞ்சியைப் பேசிவிடுவதாகப் படைக்கும் கவிராயர் தன் வருணனை ஆற்றலால் அந்நிகழ்வை,

"வன்மையோ வாய்மதமோ வித்தை மதமோ - என்முன்
மதியாமல் பெண்சேர வல்லவன் என்றாய்
கண்மயக்கால் மயக்காதே உண்மை சொல்லடி."[285]

என்று விளக்குவது சிறப்பானதாகும். மேலும் வசந்தவல்லி குறத்தியை, காடுகள் சூழ்ந்த மலையில் வாழும் குறத்தியே! சுள்ளியே! மயில் போன்றவளே! உன் இளமையின் குறும்பா? வாய்க் கொழுப்பா? குறி சொல்லும் ஆற்றலில் உள்ள வாய்ச் செருக்கா? என் தலைவனை மதியாமல் 'பெண் சேர வல்லவன்' என்று கூறுகின்றாய், கண்மயக்கால் என்னை மயக்கப் பார்க்காமல் உண்மையைச் சொல்லடி என்று கூறி அழகுபட வருணிப்பது கற்போருக்கு விருந்தளிப்பதாக உள்ளது.

**பெத்லகேம் குறவஞ்சியில் வருணனை நடை**

பெத்லகேம் குறவஞ்யில் சாஸ்திரியாரின் வருணனை நடை என்பது அதிசயிக்கும் வகையில் உள்ளது. குறவஞ்சியை அறிமுகப்படுத்தும்போதே சாஸ்திரியார் அவளை விசுவாசக் குறவஞ்சி, திருமறை முறைப்படிப் பேசி, அற நெறி தவறாத குறவஞ்சி என்று அடைமொழிக் கொடுத்து அழைப்பது போற்றத்தக்கது. விசுவாசக் குறத்தியைக் காணாமல் தேடி அலையும் சிங்கன் வாயிலாக, இயற்கையை வருணிக்கும் சாஸ்திரியார், வானமே! விண்ணுலகே! நட்சத்திரமே! யாழோர் கூட்டமே! அழகிய உலகமே! மாமலியே! ஒலித்து எழும் வானமே! சுழன்று வரும் அலையே! விண்ணுலகிலுள்ள தேவர்களே! மலர்ச் சோலையே! தண்ணீரே! அடர்ந்து உயிர் வாழும் சோலைவனமே! சோலைக்

---

[285] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.110.

கிளியே! வளமையான பூக்களையுடைய மரமே! மகிழம்பூவே! காற்றிலே பறந்து செல்லும் கருங்குயிலே! என்று பலவாறு வருணிப்பதை,

"அந்தரமேபரமே, யுடுவே
சுந்தரமேகணமே, யெனின்
சுந்தரமாதுநலான், இங்கே யெங்கும்
வந்தனளோசொல்லுங்கோ.

அம்புவியேமலையே, ஒலிதெழும்
அம்பரமேஅலையே, விண்ணாட்டின்
உம்பர்களேயெனின்மா, தென்னைவிட்ட
வம்பிதற்கென்னசெய்வேன்.

பூவனமேபுனமே, அடர்ந்துயிர்
காவனமே கனமே, எனின்
மாவனம்வந்ததுண்டோ, அருங்கொடு
மாவனமே சொல்லுவீர்

தேங்குவனவன்னியே, துயர்கொடு
தேங்குவன வன்னியே செழித்த,
பூங்கமுகமகிளே, என் பேதையின்
பூங்கமுகமகிழே. ......"[286]

என்று பாடல் முழுவதும் வருணனையால் சாஸ்திரியார் வண்ணம் தீட்டிப் படிப்போரை வசீகரிக்கும் வகையில் ஒப்பனை செய்துள்ளார்.

**உவமை நடை**

உவமை என்பது கவிதையின் பொருளை ஒளிரவைக்கும் ஒரு கருவி; பொருளின் தன்மையைப் புலப்புடுத்துவது "உவமை என்பது கவிஞனின்

---

[286] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.337.

அனுபவப் பொருளாகும். பொருள் என்பது அவன் காணும் புதிய பொருளாகும். அவன் ஏற்கனவே கண்டு வைத்த பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருந்தி வைத்து அப்பொருளின் உயர்வு தாழ்வுகளை அளந்து அறிவிக்கின்றான்."[287] என்று விளக்கம் கூறுகிறார். தொல்காப்பியர் இதனை, "வினி பயன் மெய் உரு என்ற நான்கே வகைபெற வந்த உவமைத் தேற்றம்"[288] என்று குறிப்பிட்டு, உவமை என்பது பொருளைத் தக்க ஒப்புமை கொண்டு உணர்த்துவதாகும் என,

> "பண்பும் தொழிலும் பயனுமென்றிவற்றின்
> ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
> ஒப்புமை தோன்றச் செப்பவ துவமை"[289]

என்று விளக்கிக் காட்டுகிறார் தண்டியலங்கார ஆசிரியர்.

**உவமைச் சிறப்பு**

"உவமை என்பது கவிஞனின் துய்ப்புப் பொருள்"[290] எனக் கூறுகின்றார் பெருஞ்சித்திரனார். "உவமைகள் கற்பனையின் பல்லக்குகள்; எண்ணங்களின் இரதங்கள்; கவிஞனின் தோழிகள்; இரசிகனின் அமர காதலிகள்; கவிதையின் நாடி நரம்புகள்"[291] என்று சிறப்பித்துக் கூறுகின்றார் முனைவர் அறவாணன்.

**திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி நூல்களில் உவமை நடை**

நுண்ணிலக்கியங்களில் உவமைச் சிறப்பால் ஒளிர்வன 'குறவஞ்சி நூல்கள்' ஆகும். அதிலும் திருக்குற்றாலக் குறவஞ்சி, பெத்லகேம் குறவஞ்சி முழுவதுமாக உவமை நயங்கள் உயர்ந்து நிற்கின்றன. கவிராயரும், சாஸ்திரியாரும் தாங்கள் படைத்த குறவஞ்சி நூல்கள் முழுவதுமாகக் கற்பனைத் திறத்தால், உவமை

---

[287] . சீனிவாசன்,ரா. சங்க இலக்கியத்தில் உவமைகள்.ப. 38.

[288] . இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், ப.213.

[289] . தமிழண்ணல், தண்டியலங்காரம், எளிய உரை ப.61.

[290] . பெருஞ்சித்தனார், கொய்யாக்கனி, ப. 31.

[291] . அறவாணன்.க.ப., முனைவர் கவிதையின் உயிர் உள்ளம் உடல். ப.84.

நயத்தால் சொல்லுக்குச் சொல் சுவையூட்டி ஒளிர்ந்து நிற்பதுடன், படிப்போரின் நாடி நரம்புகளெல்லாம் சுறுசுறுப்பாக்கச் செய்யும் சுவை மிக்க அமிர்தமாகப் படைத்திருக்கிறார்கள்.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் உவமை நடை**

திருக்குற்றாலக் குறவஞ்சி முழுவதுமாக உவமை நயமிக்கக் கருத்துக்கள் உயர்ந்து நிற்கின்றன என்பதற்குச் சான்றாக,

"மேக்கெழுந்த மதிசூடிக் கிழக்கெழுந்த
ஞாயிறுபோல் மேவினாரே"[292] என்றும்,

"ஒருகோடி மான்கள்போல் வருகோடி மடவார்"[293] என்றும்,

"வெண்மதியும் விளங்குதுஎங்கள் பெண்மதிபோல்"[294]

என்றும் விளக்குகிறார்.

வசந்தவல்லியின் வருகையைக் கவிராயர்,

"வங்காரப் பூஷணம் பூட்டித் திலகம் தீட்டி
மாரனைக் கண்ணாலே மருட்டி
சிங்கார மோகனைப் பெண்ணால் வசந்தவல்லி
தேவரம்பை போலவே வந்தாள்.

கண்ணுக்குக் கண்ணினை சொல்லத் திரிகூடக்
கண்ணுதலைப் பார்வையால் வெல்லப்
பெண்ணுக்குப் பெண்மயங்கவே வசந்தவல்லி
பேடையன்னம் போலவே வந்தாள்"[295]

[292] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.14.
[293] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.23.
[294] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.24.
[295] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.27.

என்று உவமைபடக் கூறுகிறார். வசந்தவல்லியின் அழகை, “சிலையைப் போல்வளைந்து பிறையைப்போல் இலங்கும் நுதலினாள்”[296] என்றும்,“கரும்பு போல்இனித்து மருந்துபோல் வடித்த சொல்லினாள்”[297] என்றும்,

“பாலுக்கொத்த சீனியாள்
பிடித்த சுகந்த வல்லிக் கொடிபோல்
வசந்தவல்லிப் பெருக்கமே”[298] என்றும்,

“பொன்னின் ஒளியில் வந்து தாவிய
மின்னின் ஒளிவு போலவே”[299]

என்றும் விளக்குகிறார். குற்றாலநாதரின் சிறப்பைக் கவிராயர்,

“சேவக விருது செயவிடைக் கொடியான்
மூவகை முரசு முழங்குமண் டபத்தான்
அண்ட கோடிகளை ஆணையால் அடக்கிக்
கொண்டல்போல் கவிக்கும் கொற்றவெண் கொடையான்”[300] என்றும்,

“பொன்னின் குடம்போல் புடைத்தெழுந்த பாரமுலை”[301] என்றும்,

“மடவார் கண்போல் ஈட்டிகொண்டு”[302] என்றும் விளக்குகிறார்.

சிங்கனது வேட்டையாடும் திறமை கவிராயர் உவமை நயத்துடன் கூறுவதை,

“ஆளிபோல் பாய்ந்தசுரும் பிசைகேட்கும்
திரிகூடத்து அமலர் நாட்டில்
வேளைதொறும் புகுந்துதிரு விளையாட்டம்
கண்ணிகுத்தி வேட்டை யாடி
ஞானிபோல் சுவடெடுத்துப் பூனைபோல்

---

[296] .. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.28.
[297] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.29.
[298] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.32.
[299] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.37.
[300] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.68.
[301] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.74.
[302] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.114.

ஒளிபோட்டு நரிபோல் பம்மிக்
கூளிபோல் தொடர்ந்தடிக்கும் திரிகூடச்
சிங்கனெனும் குளுவன் நானே”[303] என்றும்,

“கொட்டகைத் தூண்போல் காலிலங்க ஒட்டகம் போலே மேலிலங்க”[304] என்றும், “பாவகம் ஆக நூவன் பறவைபோல் பறவை கூவ”[305] என்றும்,

“ஏடெதிர் ஏற்றிய சம்பந்த மூர்த்திக்கன்று
இட்ட திருமுகத்தின் பந்தல்வந் தாற்போல்”[306] என்றும்,

“குற்றால நாயகர் சிற்றாற்று வெள்ளம்போல்”[307] என்றும்,

“கண்ணிக்குள்ளேபடும் காமுகர்போலவும்”[308] என்றும்,

“அடியொட்டிப் பாறை அடியொட்டி னாற்போலும்”[309] என்றும், “பல்லொடிக் கச்சிறு கல்லகப் பட்டாற்போல்”[310] என்ற இன்னும் பலவகையான நயமிக்க சொற்சுவைக் கொண்ட உவமை நடைகளைக் கொண்டு திறம்படப் படைத்துள்ளார் கவிராயர்.

**பெத்லகேம் குறவஞ்சியில் உவமை நடை**

சாஸ்திரியார் பெத்லகேம் குறவஞ்சியில் பலவகையான இயன்றாங்கு உவமைகளைக் குழைத்துப் பாடல்களுக்கு மெருகூட்டி இருக்கின்றார். எருசலேமில் மேன்மையான திருவிழா நாளுக்காக வந்த எண்ணிலடங்கா கூட்டத்தைச் சாஸ்திரியார்,

---

[303] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.115.
[304] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.118.
[305] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.119.
[306] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.120.
[307] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.123.
[308] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.137.
[309]. புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.123.
[310] புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, ப.123.

“திருநாளுக் கெருசலையில் பெருநாளுக் கெழும் அனந்தம்

திகழ்வானின் மீன்கள்போல் வரும் ஞான மடவார்”[311]

என்று கூறுகிறார். தேவமோகினியின் அழகை வருணிக்கும் சாஸ்திரியார்,

“விஞ்சைக் சுரர்களுக்கு மிஞ்சித் தலைமைபெற்ற வரத்தினாள் கர்மேல்

விந்தைப் பருவதம்போல் அந்தத் தபரஞ்சிப்பொன் சிரத்தினாள்”[312]

என்று உவமைபடக் கூறுகின்றார். குறவஞ்சியின் வருகையைக் கூறும் சாஸ்திரியார்,

“பிள்ளையன்னம்போல்நடந்து, பேரின்பத்தைத்தொடர்ந்து

மெள்ளநாண மாகக்கூசி, வித்தாரமாகப்பேசி”[313]

என்று குறவஞ்சியின் அழகை உவமைபட வருணிக்கின்றார். இயேசுவின் அற்புதத்தை உவமைபட வெளிப்படுத்தும் சாஸ்திரியார்,

“மான்களைப்போல் சப்பாணி துள்ளினதித்தலமே,

வாதைமிகு நொண்டிமுட நிமிர்ந்ததிந்தத்தலமே,

தீன்படரும் ரோகிகளும் பேய்பிடித்தபேரும்,

செத்தவரும்குணமாகி யெழுந்ததிந்தத்தலமே,

……………………………………………….

வான்கதிர்போல் குருடர்கட்குப் பார்வைதந்தத்தலமே,”[314]

என்று அடுக்கு உவமை நடை கொண்டு விளக்குகின்றார். நூவனின் வருகையை நயமிக்க உவமையாக கூறும் சாஸ்திரியார்,

“கற்பனைமோசேக் காரோனைப்போலவுங்

கற்றஎலியாவுக் கெலிசாபோலும்,

---

[311] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.80.
[312] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.97.
[313] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப.164.
[314] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், ப. 182.

அற்புதயோசுவா காலேப்பாகவும்
அந்தப்பவுலுக்குத் திமோத்தேபோலவும்
…………………………………………

“பவுலு சீலாவினைச் சேர்த்ததுபோலும்

பருனபாமற்குவைச் சேர்ந்ததுபோலும்,

தயயோவானுந்தம்பி யாக்கோபைப்போலவும்

……………………………………………

….சானுசுக்குத்துணை யேராமைப்போலவும்,

உத்தலுத்தருக்குக் கல்வீனைப்போலவும்

ஓங்குசிங்கனுக்குப் பாங்கனைப்போலவும்”[315]

என்று பலவகையான தீர்க்கதரிசிகளைப்போல அழகினையுடைய இறைவனின் பழக்கத்தினால் மனிதரைப் பிடிக்கும் அழகான வலையைக் கொண்டு நூவன் வருவதாக உவமைபடப் படைத்துள்ளார் சாஸ்திரியார்.

**உருவக நடை**

இலக்கிய அழகுகளுள் ஒன்று உவமை. உவமையின் செம்மை உருவகம். ஒரு செய்யுளில் உருவகம் ஒன்றிருந்தாலே போதும். சொல்லும் பொருளும் கவினுடையதாக விளங்கும். அந்தவகையில் திருக்குற்றாலக் குறவஞ்சியில் பெத்லகேம் குறவஞ்சியில் மண்டிக்கிடக்கும் சில நயமிக்க உருவக நடைச் சிறப்புகளைப் பற்றி விரிவாகக் விளக்கப் படுகிறது.

**திருக்குற்றாலக் குறவஞ்சியில் உருவக நடை**

கவிராயரின் திருக்குற்றாலக் குறவஞ்சியில் அடிதோறும் உருவகம் விண்ணை முட்டும் வண்ணம் உயர்ந்து நிற்கின்றது. வசந்தவல்லியின் அழகை வருணிக்கும் கவிராயர்,

“இருண்ட மேகம்சுற்றிச் சுருண்ட

சுழி எறியும் கொண்டையாள் – குழை

[315] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 264 – 265.

ஏறி ஆடி நெஞ்சை சூறையாடும்
விழிக் கெண்டையாள்
திருந்து பூமுருக்கின் அரும்புபோல்
இருக்கும் இதழினாள் - வரிச்
சிலையைப் போல்வளைந்து பிறையைப்போல்
இலங்கும் நுதலினாள்.

அரம்பை தேசவில்லும் விரும்பி
ஆசை சொல்லும் புருவத்தாள் – பிறர்
அறிவை மயக்குமொரு ருவம் இருக்கும்
மங்கைப் பருவத்தாள்.
கரும்பு போல்இனித்து மருந்துபோல
வடித்த சொல்லினாள்
கத்தும் திரைகொழித்த முத்து
நிரை பதித்த பல்லினாள்.

பல்லின் அழகை எட்டிப் பார்க்கும்
மூக்கிலொரு முத்தினாள் – மதி
பழகும் வடிவுதங்கி அழகு
குடிகொளும் முகத்தினாள்.
வில்லுப் பனிபுனைந்து வல்லிக்
கழுகைவென்ற கழுத்தினாள் – சகம்
விலையிட் டெழுதிஇன்ப நிலையிட்
டெழுதும் தொய்யில் எழுத்தினாள்.

கல்லுப் பதித்ததங்கச் செல்லக்
கடகமிட்ட செங்கையாள் – எங்கும்
கச்சுக் கிடக்கினும் தித்திச்சுக்
கிடக்கும்இரு கொங்கையாள்.
ஒல்லும் கருத்தர்மனக் கல்லும்
சுழிக்கும்எழில் உந்தியாள் – மீதில்

ஒழுங்கு கொண்டு உளத்தை விழுங்கும்
சிறிய ரோமப் பந்தியாள்.

துடிக்குள் அடங்கிஒரு பிடிக்குள்
அடங்கும் சின்ன இடையினாள் – காமத்
துட்டன் அரண்மனைக்குக் கட்டும்
கதலிவாழைத் தொடையினாள்.
அடுக்கு வன்னச்சேலை எடுத்து
நெறிபிடித்த உடையினாள் – மட
அன்ன நடையிலொரு சின்ன
நடைபயிலும் நடையினாள்”[316]

என்று அடி தோறும் நயம் வாய்ந்த உருவக நடைகளைக் கவிராயர் அடுக்கிக் கொண்டே சொல்லுவது கவிராயரின் உருவக நடைக்குச் சான்றாக விளங்குகிறது.

**பெத்லகேம் குறவஞ்சியில் உருவக நடை**

பெத்லகேம் குறவஞ்சி முழுவதுமே உருவக நடையில் படைக்கப்பட்ட உன்னத இலக்கியமாகும். இதில் வரும் காட்சிகள் யாவும் உருவக நடையிலே படைத்திருக்கின்றார் சாஸ்திரியார்,

“கட்டியனே யோவான்ஏசுக் கிறித்தெனும்
பெத்லே நாதன் – கணவனர்ச்செய்
சிட்டசபை யெனும் சீயோன் மகளேமோ
கினியுலகச் செயலே சந்திரன்,
மட்டுமிகும் உபத்திரமே தென்றல்மத
னேபழைய மானுடன் வேதத்
திட்டமின மறியாத புதுக்கிறிஸ்தோ
ரைச்சகியாய்ச் செப்பு வேனே.

[316] . புலவர். தமிழமுதன், திருக்குற்றாலக் குறவஞ்சி, பக். 28 – 31.

குறவஞ்சி யென்றபெண்ணே விசுவாசம்,

திருவாக்கே குறியின் கூறு,

அறைகின்ற குருவானோர் குழுவன் உப

தேசியென்போ னவனே நூவன்

பறவைகளே நரர்சாதி பிணிக்கும்வலை,

சுவிசேடம் பழைய வேத

மறையதில்லா அந்திப்பேயை

பொய்த் தெரிசி யாய் நெடுக வசனித் தேனே."[317]

என்று, வரும்முன் உரைப்போனாகிய கட்டியங்காரன் யோவான் என்றும், இயேசு கிறிஸ்து என்னும் பெத்லகேம் தலைவர் கணவர் என்றும், சீயோன் மகள் திருச்சபை என்றும், உலகச் செயலே நிலா என்றும், துன்பத்தைத் தென்றலென்றும், இச்சையை உண்டு பண்ணக்கூடிய மன்மதனே பழைய ஆதாம் என்றும், திருமறையில் உறுதித் தன்மையில்லாதவர்களைத் தோழி என்றும், குறவஞ்சியைத் திருமறை வாக்கின் அடையாளம் என்றும், நூவனை மற்றும் குழுவனை நற்செய்தி போதிக்கும் உபதேசியாகவும், பறவைகளை மனிதர்கள் என்றும், அவர்களை வசப்படுத்தும் நூலானது வலை என்றும், குருட்டுப் பேயை பொய்த்தீர்க்கதரிசி என்றும் உருவகப்படுத்தியுள்ளார். மேலும் தேவமோகினியின் அழகை உருவகப்படுத்தும் சாஸ்திரியார்,

"மன்னன் தவிது தந்த பொன்னின் றுருவத்தந்தக் கழுத்தினாள் சீனா
மலையில் அறைந்த ரண்டுபலகை நிறைந்த சித்திர எழுத்தினாள்
சொன்னம் தனில்பதித்து மின்னும் தற்சீசின்ரத்தினச் செங்கையாள் மயல்
தோன்றும் வெளிமான் கன்றென்று ஊன்று முத்திரிகைக் குலைக்
கொங்கையாள் உன்னும் லீலியாப் புட்பம் துன்னும் கோதுமை அம்பாரப்
பண்டியாள் கிறிஸ்து உளத்தைக் கட்டிக்கொண்ட கழுத்தைகிட்டிக்கண்ட
கண்டியாள், சின்னப் பதிதர் மனம்குன்னச் சுழிக்கும்முந்திச் சுழியினாள்
எஸ்ப்போன் தேசப் பதராபீமின் வாசற்குளம் வளைந்த விழியினாள்"[318]

[317] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 13-14.
[318] . சே. சுந்தரராசன், பெத்லகேம் குறவஞ்சி உரையுடன், பக். 98-99.

